உ

சிவமயம்.

திருவனந்தபுரம்
சமஸ்தானம்
கோட்டாறு
சின்மயசொரூபர்
அருளிச்செய்த

# வேதாந்தப்பாவினம்.

திருநெல்வேலி
மாவடி
சிதம்பரம்பிள்ளையால்
பரிசோதிக்கப்பட்டு
திருவனந்தபுரம் சமஸ்தானம்
குறும்பனை
குமாரவேல்சுப்பிரமணியன்
கேட்டுக்கொண்டபடி

திருநெல்வேலி
யூனியன் சென்றல் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது



**1889**



உ

# சாற்றுக்கவி

திருநெல்வேலி இராமய்யன்பட்டி

வி. வேங்கடசுப்பையரவர்க ளியற்றிய

நிலைமண்டல வாசிரியப்பா.

உலகெலாம் புரக்கு மொருவன தருளா
லலகிலா வளப்ப மலைபுவிக் கண்ணே
வரைசேண் டோட்டு வனப்புட னோங்க
விரைசேர் தண்புனன் மேகம் பொழிதர
வாவி யருவி வகுலியார் மடுக்கண்
மேவி நிறைப விவித விருக்க
மோங்கி வளர்ந்தங் குறுதபோ தனரீ
னூஉங்குறு தவத்தை யுஞற்றல்போ லியங்கப்
பங்கயப் பொய்கையிற் பயிலெழி லன்னந்
தங்கள் பெடையொடு சார்ந்துளங் கசிய
விரைசெறி முல்லை விகசித் தெழுந்தங்
கரிவைய ராடவ ரருநகை காட்ட
நெற்கரும் பென்ன நிறைந்த தீஞ்சா
றிக்குபூ கத்தோ டெதிர்தர வளர்ந்து
பொற்புறு தாளம் புதுமையிற் றெரிப்பலைதக்
கற்புறு மகளிர் கண்டவ மதிக்கப்
பானு மதிதடைப் படுத்துஞ் சிகரி
வானவ ரமைப்பெனு மாட்சிமை யுணர்த்த
வின்னணம் பிறங்குஞ் சேரநாட் டிடையிற்
பொன்னொளி பரப்பி மின்னிடுங் கோயிலிற்
பண்ணிய பவநலி பதுமநா பன்கழ
ணண்ணி யவனரு ளுளும் பெற்றுப்
பற்பல வலைரயர் பகுதி கொடுக்கையிற்

பொற்கிரீ டத்தின் பொடி பதமொய்க்க
வீற்றிருக் கின்ற வேய்நேர் புயத்த
ஞற்ற லுடையோன் அவனியாண் டூலன்
பண்ணவர் மதிக்கப் பாரசாள் போழ்தி
லெண்ணரு நன்மையி னிலங்கித ணெருசார்
குன்றுச் செல்வமும் பின்று வறமுங்
கன்றுக்களிப்பு மன்றலுந் தங்கிய
கோட்டாற் வாழுங் குணமணி மாக்கள்
கேட்டுக்கொள்ளக் கிருபைகூர்ந் தன்னோர்
பவசா கரமதிற் பரிந்துழ லாமே
யுவகையின் மறைப்பொரு ளொருங்குடன் றிரட்டி
வேதாந் தப்பா வினமெனு நூலைக்
காதன் மீறக் காதிதம் படைக்கச்
சின்மய சொரூபன் செப்பவு நெல்லைவாழ்
நன்னயன் மாவடிச் சிதம்பரம் வழூஉக்களைந்
தீயக் குறும்பனைக் குமாரவே லேயனுஞ்
சுப்பிர மணிய னிப்புவி யோர்க்கு
பற்பல வாக வச்சிற் பதித்துச்
சிற்பர ஞானந் தெளியவீந் தனனே.

திருவனந்தபுரம் சமஸ்தானத்தைச் சேர்ந்த புற்றேரி

ஶ்ரீ-ஶ்ரீ-ஸ்ரீ குமாரசுவாமிப்பிள்ளை இயற்றிய.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தென்ஞஞ்சி நாட்டினிற்கோட் டாறெனுமா நகரிற்
சிறந்தநல்ல பெருமாளென் ஞெருநாம மமைந்தே
மூன்னோர்சொல் லத்துவித நிலையதனிற் பொருந்து
முறைமையினுற் சின்மயசொ ரூபனென விளங்கிச்
சின்னுளின் மாக்களுமந் நிலையறிய வெளிதாய்ச்
செப்பும்வே தாந்தப்பா வினமெனுமிந் நூலைப்
பொன்னுளு நெல்லையின்மா வடிச்சிதம்ப ரப்பேர்
புனைவேள்சோ தித்தாய்ந்திப் புவியில்விளக் கினனே.

சலமெனக்கா னலக்கினிஞ்சி றன்னையிர சிதம்போற்
சங்கற்பத் தாற்றோன்றுஞ் சகநிசமென் றெணிவா
மூலகர்மல விருளதனை யொழித்திடவெய் யோனு
யுதித்தொளிர்வே தாந்தப்பா வினமெனுமிந் நூலை
நிலமகளின் வதனமென நிகழுங்கோட் டாறு
நீணகரிற் றவசுதிரண் டுருக்கொடுவந் துற்றே
புலகலைதேர்ந் தொழுகுநல்ல பெருமாளென் றும்பேர்
பகருஞ்சின் மயரூப னுரைத்தனனிப் படிக்கே. (௨)

---

திருவனந்தபுரம் மஹாராஜாகாலேஜில்
ஆக்டிங்
தமிழ்ப்பண்டிதரா யிருந்த
திருநெல்வேலித் துரைசாமிப்பிள்ளை யியற்றிய
அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பொன்மயமா மலைநாட்டுக் கொருதிலக மெனவிளங்கு புகழ்க் கோட்டாற்றுச், சின்மயசொ ரூபனருள் வேதாந்தப் பாவினத்திற் றேனைப் பாலைச், சொன்மயமுந் தொடைமயமு மாக்கியளித் தான மல சுகன்போ லெல்லாந், தன்மயமென் றுணர்ந்தநெல்லை மாவடிச்சி தம்பரவண் டமிழ்க்கோ மானே. (க)

சொல்விட்ட பொருள்சிறந்த வேதாந்தப் பாவினநூல் சூற்கொண் டோங்குஞ், செல்விட்ட மணிகிடக்குந் திருவீதிக் குறும்பனை வாழ் சீலமிக்கான், கல்விட்ட தீபமெனப் புகழ்விளங்கும் குமார வேல் காதன் மைந்த, னல்விட்ட கண்டனருள் பெற்றுளசுப் பிர மணிய னச்சிட் டானே. (௨)

---

மேற்படிமாவடி- சிதம்பரம்பிள்ளை
மாணுக்கரும் புத்திருமாகிய
சி- சுப்பிரமணியபிள்ளை இயற்றிய
கலிவெண்பா.

பூமகளு நாமகளும் புட்கரத்தில் வீற்றிருக்கத்
தாமமுடன் மாரியென்றுந் தான்பொழிய—சேமமுட

னெற்பயிரும் புற்பயிரு நீள்பூகந் தெங்குகளுஞ்
சொற்கடங்கா தோங்கித் துலங்கிநிற்க—கற்பகம்போல்
வாழை பலாகாஞ்சி வான்கருப்பஞ் சோலைகளில
யாழைச் சுரும்புகளு மாங்கிசைப்ப—மாழையுறு
கோங்கு மகிலாரங் குங்குமமுஞ் செண்பகமுந்
தீங்ககற்றுந் தண்மையுள தென்றறரப்—பாங்குடைய
வந்தணர்க ளாவணத்தி லாரணமோ தோதையினு
னந்தலைச்செய் சண்ட னடுநடுங்க—மந்தரம்போற்
குன்றுத செல்வர்களுங் கூர்விழிமேல் மாதர்களுங்
சன்று மனத்தொடுகா முற்றுறைய—நின்றுடு
பஞ்ஞை மடவனமு மாகரியுஞ் சீர்பரியு
மெஞ்ஞான் றுறைபரந்த மேயிமைக்கச்—சுஞ்ஞான
மந்திரமுந் தந்திரமு மாணபுடைய சோதிடமுஞ்
சுந்தரமாய்க் கற்குமிடஞ் சூழ்ந்திருந்க—விந்தையுடன்
செங்கோலின் சீரைத் தெரிக்குமணிக் கோபுரஞ்சூழ்
தங்கும்பொற் கோயிலொரு சாரிறங்கச்—சங்கையிலா
வற்புதமா யோங்கு மரவணையிற் பள்ளிகொளும்
பற்பநா பன்னரிய பாயொளிகால்—பொற்பாதத்
தின்னருளைக் கொண்டே யிருபபார் முழுவதினு
மன்னுமனு நூல்வழுக்கு மாண்பாக—நன்னயச்செங்
கோலைச் செலுத்துங் குலசேக ரன்மரபன்
மூலன் றவாறு முறைசெய்கால்—சோலையார்
கோட்டாற்றி லீட்டமாய்க் கூடுமுயிர் செய்தவமே
வீட்டை வெளிச்செறிக்க வித்தகனாய்—நாட்டின்கண்
வந்துதித்து வேதமுதன் மாபுரா ணந்தருக்கஞ்
சந்ததமுங் கற்றுநாற் சாதனமுஞ்—சிந்தையுற
வீசன் றிருவடியை யின்புறவுள் ளத்தெண்ணு
நேசமுள சொக்க னெனுங்குருவின்—றசனைத்
தானவனைக் கொண்டிலங்குந் தத்வோப தேசமும்பெற்
றானபினர் மோனத் தழுந்தியுயர்—வானெனவாழ்
சின்மயசொ ரூபன்செய் வேதாந்தப் பாவினத்தை

நன்மைதரு நெல்லை நகரத்திற் புன்மையறுங்
கோடகநல்லூரிற் குலமறையோர் தங்குலத்தை
யீடேற்ற வந்த வெழிலுடையான்—பீடாருஞ்
சுந்தரனின் றாண்மலரைத் துன்னியமாணாக்கனுமாய்
முந்துநல்ல டைப்பதியின் முன்னவனாய்—மந்தமற
வைந்திலக்க ணங்களையு மன்பி னளித்தானுஞ்
சிந்தைகொள்சி தம்பரநா தக்கவிஞன்—கந்தமலர்ச்
சேவடிக்குச் சீடனாய்ச் சீர்சுப்ர மண்யனீன்
மாவடிச்சி தம்பரவேண் மாசகற்றித்—தூவடிவாய்ச்
செய்தளிக்க விண்மாரி சென்றுலவிச் செல்வமிகும்
பைதலில்கு றும்பனைவாழ் பண்புடையோன்—செய்ய
குமாரவே லீன்சுப் பிரமணியக் கோமான்
சமானமிலா வச்சிற் சமைத்தே—யிமானிலத்தோர்
புந்தமற ஞானமுற்று மேல்வீட்டின் பந்துளைய
விந்தையுட னீந்தான் விரித்து.

---

ஷை மாவடி-சிதம்பரம்பிள்ளை மாணாக்கருள்

ஒருவராகிய திருநெல்வேலி பள்ளத்துவளவு சிதம்பரம்பிள்ளை குமாரர்.

## சுப்பிரமணியபிள்ளை இயற்றிய

### நேரிசை யாசிரியப்பா.

பூமா துறையும் போதல ரகழிற்
றேமா பொழிநறை சீகரந் தெரிப்பப்
பாலனம் வராகம் பழம்வேர் நினைந்து
மேல்கீழ் செல்லல் வேத னச்சுத
னடிய காணுமந் நடையினைக் காட்ட
வும்பரின் றருவென வோங்கிய செருந்தின்
செம்பொன் மலர்பழீஇக் காந்தண்மீ தியங்க
லந்தணர்க் கரைய னகமகிழ்ந் தளிக்கு

நந்தலி லிரணிய நயல்கலை விளக்க
வின்னண மெழிலுடைச் சேரநன் னாட்டிற்
கோட்டா றென்னுங் குலவிய நகரி
னாட்டார் புகழுநல் லாரியர் குலத்திற்
றோன்றிய சின்மய சொரூப னறைந்த
வூன்றவே தாந்தப் பாவினப் பூதியே
வீடென வறைய மேதினி புகழ
நாடிய மேலோர் நன்மன முவப்ப
விப்பெரு நூலை யின்புட னகமகிழுந்
தொப்பில் பாண்டியர்வாழ் வோங்கிய நெல்லையின்
மாவடிச் சிதம்பர வண்பெயர் வள்ளல்
பாவடி தொடைசீர்ப் பழுதினை யகற்றி
யீயக் குறும்பனைக் குமாரவே லீன்ற
வேயன் சுப்பிர மணியன் விரும்பி
யச்சி னூற்றி யகில
மெச்ச வழங்கினன் வீடுபெறற் பொருட்டே.



இஃது வடசேரி வானுவாமலை உபாத்தியாயர் குமாரர்

## சுடலைமுத்து உபாத்தியாயர் இயற்றியது.

சீர்கொண்ட மணிமாட மேனிலையின் முகிலுலவு தென்கோட்டாறுந்
னி னின்பந், திகழுறு மாரியர்கு லத்திலக னுயோங்குஞ் செம்மலென
வந்துதித்துப், பார்கொண்ட வில்லறப் பாசபந் தந்திருட் பற்றறப்
பரிவா கவே, பழமறைக ளுன்கையு முணர்ந்துமே தாந்தநற் பாவி
னம தாக்கு வித்த, ஏர்கொண்ட பூவுறையு மாடவர்க ளெங்கணு
மிப்பனுவ றனை யுணர்ந்தே, யின்போட றம்பொருண் மூன்றினு நீ
ங்கிநல் லெழிலுற்றவீட டையவு, நேர்கொண்ட வடி தமிழ்ப் பா
வாயு ரைத்தன னிமலனருள் பெற்றுய் குவோ, னெடியகட லனைய
தமிழ் குடிகொணற் பெருமாளெ னேயசின் மயரூ பனே.

உ





சிவமயம்

# வேதாந்தப் பாவினம்.

## கடவுள்வணக்கம்.

நேரிசைவெண்பா.

வேழமுகன் வேணியரன் வேற்கணுமை வேளிவரின்
காழமருங் காலென்றுங் கண்டுருகிப்—பாழகன்ற
நாதாந்த மோனர் நகையா தகமகிழ
வேதாந்தப் பாவினஞ்சொல் வேன்.

## குருநாதமாலை.

கலித்தாழிசை.

திருவார்கழற் றினமேதரத் தெளிவேபெறத் திடமேவரக்
குருவார்தரு குணமேமறைக் குன்றேயுளங் குறையாகிறை
யருவாதெரு ளமுதேயுனை யலந்தேன்கடை யலர்கண்புணைக்
குருவாயெனைக் கோத்தாண்டருள் குருநாதனே குருநாதனே. க

தேடத்தகும் விழுமப்பொருள் சேரத்தகும் வேதத்தொனி
நாடத்தகு நகுமுள்விழி நணுகத்தகு மௌனத்துறை
சூடத்தகு மிருதாண்மலர் சுகிக்கத்தகுஞ் சுகவாரிதி
கூடத்தகு நின்மேனியிற் குருநாதனே குருநாதனே. (உ)

அஞ்ஞானம தழிக்கத்தகு மருளான்முழு தறியத்தகு
மெஞ்ஞானம தெய்தத்தகு மேல்வீட்டினில் வசிக்கத்தகு
மிஞ்ஞானம தடையத்தகு மௌனதியானென னீக்கத்தகுங்
குஞ்ஞானம தொழிக்கத்தகுங் குருநாதனே குருநாதனே. (௩)

வேதாந்தசித் தாந்தத்தினில் வெளியுள்ளுற விகிதந்தரு
நாதாந்தசித் தாந்தத்தினி னலனங்குற நாடத்தகும்
போதாந்தசித் தாந்தத்தினிற் போதந்தரும் புரணத்துணர்
கோதாந்தசித் தாந்தப்பர குருநாதனே குருநாதனே. (௪)

அத்தாபர முத்தாவெனே யாளும்படி யருளேயருள்
சித்தாயுயிர் தேறுந்தெருள் தேசைத்தினம் வழிதேகொடு
சுத்தாமறை முடிவேசுடர் சோமனனல் முச்சோதியுங்
கொத்தாய்விளங் குவதொத்தொளிர் குருநாதனே குருநாதனே. ௫

சித்தாந்தவே தாந்தத்தினிற் றேரும்பொரு ளேமாசறு
சுத்தாந்தவே தாந்தத்தினிற் றோயுஞ்சுயஞ் சுகமேபர
சத்தாந்தவே தாந்தத்தினிற் சார்போதமே தேர்ந்தாருளக்
கொத்தாந்தவே தாந்தத்துறை குருநாதனே குருநாதனே (௬)

சந்தேகவஞ் ஞானத்தினிற் றனேமுந்துறிற் றளர்வெய்துறும்
பந்தேகவஞ் ஞானத்தினிற் பதிந்தாலுளம் பாழ்தோய்ந்திடுந்
தந்தேகமெஞ் ஞானத்துறிற் றத்வம்மசி தானாகிய
கொந்தாய்க்கொளுங் குறையாகிறை குருநாதனே குருநாதனே. ௭

அசியாம்பதத் துற்றூலரு ளமைவுற்றிடு மசைவொன்றிலா
தசியின்பதந் தத்துவம்பத மடைவேயுறிற் றூனூமுணர்
துசியாமுளந் துரியத்துறிற் சுகமாமன முதலாந்துகழ்
கொசுகாமெனப் பறந்தோடிடுங் குருநாதனே குருநாதனே. (௮)

பார்த்தாரெவர் பாராரெவர் பாசாகில பரமாகினேச்
சாத்தானெனத் தானேயுனிற் சாகாவர மெளிதேபெறும்
போத்தாஞ்சொலிற் போகாவுணர் பொழுதொன்றறு போதத்து
ருக், கூத்தாசுடர்க் கொழுந்தேயருட் குருநாதனே குருநாதனே. ௯

அலையுங்குடி லமுதம்பெற வடரும்பவ மனுகாதிறப்
புலையுங்கெடப் புலனும்மனம் பொறியும்மறப் புகன்மற்றுள
கலையும்வினைக் காடுங்கழன் றேகக்கரி கருத்தொன்றுறக்
குலையுமுளஞ் சீர்செய்தருள் குருநாதனே குருநாதனே. (௰)

எமையொன்றிறை யிணையொன்றிலா விளையாடலா லசைவொன்
றுற, வமரொன்றிய வைம்பூதமா யவற்றின்குணம் வெவ்வேற
டைந், திமிரெங்குமாய் நால்யோனியின் றளையேழிலுந் திரிந்தா
டுதல், குமரண்ணலின் குணசத்தியே குருநாதனே குருநாதனே.

தானக்குரு வடிவாயுயர் சகமூன்றையுந் தரித்தேயொளிர்
வானக்குறி வடிவென்னசித் வடிவாய்ச்சுக வளமெய்திடி
லூனக்கரு வுள்ளேபுக லறும்மையுவ மையிலாதவெண்
கூனற்பிறை முடிகொண்டவென் குருநாதனே குருநாதனே.(௧௨)

நினைவெங்குறு நினையன்றிமா நிறைவெங்குறு மறிவன்றியோர்
தினமெங்குறு மினனன்றியோர் தேசெங்குறுஞ் சித்தன்றிவெண்
புனலெங்குறு மகமின்றியூன் புரமெங்குறும் வினையின்றியீ
குணரெங்குறுங் கொணரின்றிநங் குருநாதனே குருநாதனே.(௧௩)

பத்தெட்டுட னுன்காறெனப் பரவப்படுங் கலைதேர்ந்துயர்
சத்தெட்டிடிற் சித்தொட்டுமிச் சதசத்ததாய் நிகழ்தாரணி
கத்தெட்டுறு திசையெங்கணுங் கலந்தின்பம தடையிற்சமன்
குத்தெட்டுமோ குறியாயுணர் குருநாதனே குருநாதனே. (௧௪)

நீங்காப்புணை கொடுநீந்துற நீநானென நினையாதகந்
தூங்காமலுந் தூக்கங்கொளுந் தொழில்பெற்றுயிர் மேல்வீடுறத்
தாங்காச்சுகந் தரவோநர வுருவாயரி தெனினுமோனக்
கோங்காரமாய் வெளிவந்தருள் குருநாதனே குருநாதனே. (௧௫)

ஆனையெனு மருளைப்பெற வருமாமறை யறையுஞ்சுகந்
தானையொளிர் சுயஞ்சோதிமா சுத்தம்மசுத் தசுகஞ்சுகம்
பானும்வெளி யிருள்சித்தசித் திரவும்பக லெனல்வேறறக்
கோனைமுழு தாளுஞ்சிவ குருநாதனே குருநாதனே. (௧௬)

தத்தோமசி யெனும்வாக்கியந் தனைத்தானவ ஞக்கலுனிச்
சித்தஞ்சக நினைவற்றிடத் திருத்தாண்மலர் சூட்டியொரு
வத்தஞ்சிரஞ் சேர்த்தேயருட் கண்சாத்திமே வியானுய்யவிக்
கொத்தம்மற வருள்சின்மய குருநாதனே குருநாதனே (கஎ)

அய்யாவிக லோகத்தடைந் தரும்பொன்புவி முதலியாவையு
மெய்யாமெனத் தேர்ந்தேயவை மிகநாடிவீண் டினம்போக்கியுள்
ளெய்யாதுமைக் கண்ணூர்மய விற்பட்டெறும் பிமொய்த்திடுங்
குய்யாதியி லுழன்றெய்த்தனன் குருநாதனே குருநாதனே. (கஅ

நித்தம்மறு போகநிலை யில்லாப்பொருள் நினையிற்பல
கத்துஞ்சுகம் போலன்றிது கரைமாயையை மாற்றிக்கொளிற்
சத்தாம்பதத் துறுமேசந் ததஞ்சூடிடச் சலசங்களுக்
கொத்தேநிக ழிருதாளுடைக் குருநாதனே குருநாதனே. (கக)

தேருஞ்சுரர்க் கமலேசனைச் சேர்வன்கொலோ கருத்தொன்றியிங்
காருமுடன் மனவாக்கினுக் கப்பானிகழ் பரநண்ணுமோ
பேரும்முரு வமுமற்றொளிர் பொன்றுப்பொருள் பெறுவன்கொ
லோ, கூரும்மரு டரினுய்குவன் குருநாதனே குருநாதனே. (உ0)

சகமோசிவ சொருபம்மெனத் தரிக்கின்றில னுனையண்டின
னிகமேசுட ருதயங்களி லிதயம்பதிந் திலையென்கொலோ
பகமேசிறந் தொலிதங்கிடுங் கலைகண்டரும் பதிநம்பினன்
குகமேயிரு பதந்தந்தருள் குருநாதனே குருநாதனே. (உக)

துன்பத்தினி லின்பத்தினிற் றொந்தித்தழுந் துடலத்தினி
லென்பற்றினிற் சம்பத்தினி லகப்பற்றினி லிகப்பற்றினிற்
கம்பத்தினில் விம்பத்தினிற் கலக்கத்தினிற் றுலக்கத்தினிற்
கும்பத்தினிற் றம்பித்தொளிர் குருநாதனே குருநாதனே. (உஉ)

எல்லாமுநீ யல்லாததாய் யெங்கும்புணர்ந் தேதாகினை
சொல்லாலுனைத் துணைகொண்டனன் றுயாவுளம் புகுந்தாண்டி
கல்லாமனங் கசிவெய்திமெய் புழகித்திரு கண்ணீருகுங் [டிற்
கொல்லாப்புல னனைத்துங்கெடுங் குருநாதனே குருநாதனே. உங

வேதத்துறை விமலப்பொருள் விண்ணுய்ப்பர வெளியாய்மிளிர்
நாதத்துறை தொனியாயது நானுவித சகபேதமாய்ப்
பூதத்துறை குணமாய்ப்படர் போதத்துரு வாயென்னுளக்
கோதற்றிடச் சுகமாயமர் குருநாதனே குருநாதனே. (உ௪)

காட்டாளருட் கரந்தோங்கினே கல்லாலடி யெளிதோங்கினே
நாட்டார்நனு காதோங்கினே நான்மாமறை மீதோங்கினே
தேட்டார்க்குனேத் தெளிவித்தனே தேருறுவென துளமேவிநற்
கூட்டாயுறைந் துந்தோர்ந்திலன் குருநாதனே குருநாதனே.(உ௫)

நீங்காநிறை வாலென்னுள நின்றேநிரு விகற்பந்தரிற்
பாங்காநினே யுனலெங்ஙனம் பரமாபிழை பொறுப்பாய்நிதந்
தாங்காவுடற் சுமைக்குற்றிடுஞ் சனனம்மர ணம்போக்கிடக்
கோங்கார்மலர்த் தாளேத்தருங் குருநாதனே குருநாதனே.(உ௬)

நிசமாநிலே நிற்காவண நீநானெனும் பேதங்கொடு
நசவிந்திய வழியோடியிச் சகமெங்கணுந் திரிமும்மல
வசமாகிய பசுவாங்கரி மீதேறியுண் மகிழ்வெய்தியங்
குசமாமடி கொடுநேர்செலுங் குருநாதனே குருநாதனே. (உ௭)

பொல்லாச்சட வாக்கைக்குளும் பொன்றும்மனப் பொந்துக்குளு
மெல்லாயொளிர் கதிருக்குளு மிமையாதெழு நாட்டத்துளும்
வல்லாருண ரிதயத்துளும் வயங்குன்னடி மலரொன்சிரக்
கல்லாவெனத் தரியாததென் குருநாதனே குருநாதனே. (உ௮)

தேடும்பொரு ணிசமன்றெனத் தெரிந்தும்முழல் கின்றேன்மன
தோடுந்நெறி சென்றெய்த்தன னுயர்சாட்சியை மறந்தேனுனே
நாடும்வழி காணேனினி நானுய்வதெவ் வணஞ்சொல்லருள்
கூடும்படி வந்தாண்டிடு குருநாதனே குருநாதனே (உ௯)

சித்தாநிரு மலனேயொரு நியமமெனக் கருளிற்றர
வத்தாகட னன்றேநினக் கத்தாலுனே யடைந்தேன்பரி
சுத்தாவெனேத் தொடரும்வினே துரிசற்றிடப் பரிசுற்றிடுங்
கொத்தாமல ரடிதந்தருள் குருநாதனே குருநாதனே. (௩௰)

எண்ணூதவ ரெண்ணைத்துளு மிசைவாணர்தம் மிசையின்னுளு
முண்ணுடுவர் நாட்டத்துளு மமருண ருணர்வுக்குளும்
விண்ணுடிய வேதத்துளும் வெளியாதியைம் பூதத்துளுங்
குண்ணேக்குளு முறையுங்கழற் குருநாதனே குருநாதனே. (கக)

ஏனையாள்பவ வமலேசவெங் கெங்குநிறை பரவத்துவே
தனையாய்ந்திலங் கிறைவாவுனைத் தாளுக்கொள வறிகின்றில
னினையாநெறி நெகிழாதுற நிருவிகற்ப நிலேநின்றிடக்
குனையாதிருந் தாயென்கொலோ குருநாதனே குருநாதனே. கஉ

கரணக்கவி பொறியைந்தலேக் கனமாசுண மனையாண்முதன்
மரணச்சுமை தலைவைப்பவ ரிவற்ருனலி மாசற்றிடிற்
கிரணத்தொளி புரணப்படுங் கிளரிங்கிலே யெய்தத்தினங்
குரணத்தினை யடுத்தேனறி குருநாதனே குருநாதனே. (கங)

சிந்தாமணி யொத்தேநிகழ் சித்தெய்தில ரென்னுகுவர்
சிந்தாகுலந் தீர்ந்தாரெவ ரவரேயுயர் சித்தெய்தினர்
பந்தாதிக டந்தேநிகழ் பரம்பார்க்குமுட் கண்ணின்வளர்
குந்தாணியைத் தீர்த்தாளுவை குருநாதனே குருநாதனே. (கச)

சித்தஞ்சிவ மாகச்சிறை செய்யார்தொடர் புற்றேமருள்
பித்தங்கொடு மேலோரடை நெறிபேணிலன் பிழைக்கும்வகை
யெத்தும்பல பொய்காமமோ கங்குரோதமோ டெண்ணில்பல
கொத்தைகழன் றென்றுய்குவன் குருநாதனே குருநாதனே. கரு

தொட்டாலயர் செடியொத்தவென் ருெடர்பாசமதறவேண்டலும்
பொட்டாய்த்திகழ் துரியத்தினிற் பொருந்தத்தின மாசித்தலுஞ்
சுட்டாதுணர் பரம்பேணலும் முடங்கொம்பரின் றுளிதேனுனிக்
கொட்டாவிகொள் வதுவொத்திடுங் குருநாதனே குருநாதனே.

சடையாவிருப் போடுன்சர ணடைந்தேனரு டாராயறக்
கடையாயினன் றுவிதங்கெடக் காப்பாய்கடைக் கண்ணுனயர்
வடையாக்கொடு முத்தாபமா மருணன்வெயி றணிக்கப்பெருங்
குடையாய்நிகழ் பதந்தந்தருள் குருநாதனே குருநாதனே.(கஎ)

பொய்யாமொழி புகன்றேமறை புகழும்பர போதங்கொடு
செய்யாவினை தீரும்படி சிவத்தோடிரண் டறவேகலந்
துய்யாவகை மருளுமெனைப் பந்தாமென வுருட்டுமனங்
கொய்யாதிருந் தாயென்கொலோ குருநாதனே குருநாதனே.௩௮

ஆண்டானெனை யாள்வானினைந் தறிவாய்நிகழ் நீநானெனப்
பூண்டான்கழ லுறலேபுணர் போதம்மன நாசமுதல்
வேண்டாப்பிறப் பிறப்பற்றிடல் வினையேன்றனித் துறையப்பெ
ருங், கூண்டாயொளிர் கூடத்தனங் குருநாதனே குருநாதனே.

வேதத்துள விமலப்பொருள் வெளியேதிரண் டெளின்மேனியுற்
றேதங்கொளென் னுளமேபுகுந் திரண்டற்றிடத் தேசார்பர
போதத்தைய ளித்தேவெறும் பொய்க்கூரையைப் பற்றித்தொடர்
காதைச்சிதைத் தொளியிற்புகுங் குருநாதனே குருநாதனே.௪௰

திட்டதிருட் டாவுந்திரு சியமாநிகழ் சகமீதருங்
குட்டிப்பரு வத்தேயறி யாமையறக் கொடிதாந்தனைக்
கட்டின்மயங் கெனைத்தானவ னுக்கிச்சுக கடன்மீதுறக்
கொட்டிவிளை யாடல்செயுங் குருநாதனே குருநாதனே. (௪௧)

அறையும்பல பேதத்தொட பேதமறி வறிவின்மையோ
டுறையும்பிறப் பிறப்பாமிவை யொருங்கேசெலத் தானேபுகுந்
திறையும்மக லாதேகுடி கொண்டேயெனைச் சிறைவைத்திடுங்
குறையுஞ்சொல வுளரார்கொலோ குருநாதனே குருநாதனே.௪௨

ஆண்டானடி யானென்றெனை யங்காளினி லாரோபிரித்
தீண்டாக்கின ரதுதொட்டிது காறுஞ்சழக் கிடையேபுகுந்
தாண்டாண்டுபல் பிறப்பெய்தியு மறிவெய்தில னையேமனக்
கோண்டான்கெடுத் தாள்வாய்சிவ குருநாதனே குருநாதனே.௪௩

வேட்கைவலை சிக்கியுனை வேண்டாதுவிண் டினம்போக்கிடி
னுக்கைதனிற் றங்குமுயி ரகன்றோடிடு நரிநாய்கணங்
காக்கைபல வந்தேதினுங் கருணாகர வறியாய்கொலோ
கோக்கையுற விரந்தாயருட் குருநாதனே குருநாதனே. (௪௪)

பொன்னைப்புவி மடமாதரைப் போற்றிச்சில தினம்போக்கின
னுன்னைத்தொடர் நெறிதேடின னூமர்களு முறையாடிலர்
பின்னைத்தவ றென்மேலதோ பெரியாய்பிழை பொறுத்தேமிகுங்
கொன்னைத்தடுத் தேயாண்டருள் குருநாதனே குருநாதனே. சரு

பாந்துப்பையிற் பற்றற்றிலன் பரமாபரஞ் சோதிபல
தேர்ந்தேவெறும் பொய்வாழ்வினை மெய்யாயுனித் தியக்குற்றுப
சாந்தமிழந் திளைத்தேனுயர் சத்தெய்தின ரேசாமுனங்
கூந்தன்மட வார்நட்பொழி குருநாதனே குருநாதனே. (சசு)

நாக்குக்கொரு நலமீந்திடி னுதாவெண வென்றுஞ்சொலு
மூக்கினுனி மீதேயொளிர் மோனுவதை யியாததென்
னுக்கைதடுத் தாட்கொண்டிட வருண்மேனிய தெளிதேகொடு
கூக்கைதொழ வந்தேயருள் குருநாதனே குருநாதனே. (ச

அன்னமயத் துடலந்தனை யறியுமறி வென்பார்சிலர்
பின்னருயர் கீழோடிடும் பிராணனறி வென்பார்சிலர்
மன்னுமொரு பத்திந்திய வழிசென்மன மென்பார்சிலர்
கொன்னேமதி யென்பார்சிலர் குருநாதனே குருநாதனே. (சஅ)

அறியாவறி விருந்துஞ்சுழுத் தியானந்தம தென்பார்சிலர்
சிறியார்சில ரனுவென்குனர் செறிசூனிய மென்பார்சிலர்
வெறியார்மலர் மகன்மாலர னென்பார்சிலர் வினையென்குனர்
குறியாயறி வுறுமோபரங் குருநாதனே குருநாதனே. (சகூ)

தேடிப்பதந் தேயப்பல தேயந்திரிந் தாலெய்துமோ
நாடிப்புசுண் டம்போற்பல நதிமூழ்கினு நணுகாமன
மூடித்தலை கீழூற்றிட முயன்றாலுமஃ தெய்தாதுபல்
கோடித்தின கரனொத்தொளிர் குருநாதனே குருநாதனே. (ருய)

இணங்காமனத் துணைகொண்டுனை யெங்கெங்கனுந் தேடிப்புகின்
வணங்காவனுர் வளைந்தேபுக வதனுனனி நொந்தேம்பின
ருணங்காத்துயி லைமையீர்த்திட வொழிந்தேம் விழித்தெழுந்துந்
திரி, குணங்காயின மணைத்தாண்டருள் குருநா[illegible]னே குருநாதனே

அந்தோவெனை யன்னுண்முத லணைந்துமறிந் திலனென்கொலோ
சிந்தாகுலஞ் சிதையாததென் சிவமேநினைத் தவிர்வேறில
னெந்தாயினு மினிதாகிய விறைவாசுகக் கடன்மூழ்குறக்
கொந்தாரிரு பதந்தந்தருள் குருநாதனே குருநாதனே. (௫௨)

சீக்குற்றெழுஞ் சீநாறுடல் சிதைபட்டழி சிறுபாந்திது
போக்குற்றிடு முன்னேயொரு நாற்சாதனம் புணர்ந்தொன்றினுந்
தாக்கற்றொளிர் சித்தோடிரண் டறவேபுகல் சுகமாமெனக்
கோக்கண்மொழி நெறிதந்தருள் குருநாதனே குருநாதனே.(௫௩)

நீங்காதென துளநின்றனை நீங்கிப்புறந் திரிந்தெய்த்தனன்
றூங்காத்துணை யாய்க்காத்தனை தூங்குற்றதை யுடன்றேர்ந்திலன்
றேங்காச்சுகம் வலிதீந்தனை தினமுநுகர்ந் திறுமாந்தனன்
ஓங்காரடி தரின்வீங்குவன் குருநாதனே குருநாதனே. (௫௪)

நீருங்கன னிழலும்வெயி னிலவுங்கதி ரசரஞ்சரஞ்
சீருமதற் கெதிர்வானமுஞ் செறிந்தேயொளிர் காலியானெதைச்
சேரும்வணங் கொள்வேனெதைச் சேராவணந் தள்வேனனி
கூருமறி வுடையோயருள் குருநாதனே குருநாதனே. (௫௫)

ஒளிரும்பர முணரேனுணர்ந் தோர்தம்மையு முறிலேன்மிக
ளிருமறை நூல்கேட்டிலன் கேட்டோருரை வினவுற்றில
ளிரும்பன வர்க்கீந்தில னாயேனெதற் காவேனெனக்
ளிரும்பதத் தொண்டாக்கினை குருநாதனே குருநாதனே.(௫௬)

முழுவொத்திட மறையோதிடு முந்நூலினர் பின்சென்றிட
விழவுக்கொளு மிறைவற்றொழ மேவுற்றன னொருநாளகந்
தொழவுத்தம னெதிர்வந்தெனைக் கொண்டேதனைச் சூதிற்றரக்
குழவிப்பரு வத்தேபுகுங் குருநாதனே குருநாதனே. (௫௭)

நாதாநினைத் தேடாரைவி ரிஞ்சனம னனிதேடுதல்
வேதாவுணர்ந் திலையோவென துடல்வீழ்தினம் வெளியாகுமோ
வாதாரமி லேன்கைவிடி னாருமிலை யெடுத்தாளுவை
கோதாடுறு முளநன்குறக் குருநாதனே குருநாதனே. (௫௮)

எங்குமிருந் தானென்னு ளொளித்தானிது வெண்கோவெகு
பங்கேயுட ரேறும்பல பலகானுமைழந் தேபார்த்தனன்
றங்காவவற் காணுமையிற் றநுமானிட முணர்போதெனைக்
கொங்காரடி விழுங்கிற்றைய குருநாதனே குருநாதனே. (௫௯)

ஊழிபல வுன்னையெனே யுயர்தாழ்வுற விருவர்சில
கேழோடடன் றேடித்திரி கின்றார்தெரி வுறுமேவெறும்
பாழ்கொள்மனக் குரங்கிந்தியப் படைக்கியெனை வருத்துமதன்
கூழைத்தனம் போக்கியருள் குருநாதனே குருநாதனே. (௬௰)

கலிகாலுல கம்புக்கினுங் கலங்காக்கருத் தீவாயெனிற்
சலியாதுபல் பிறப்பெய்துவன் றடையொன்றிலை சகமீதினின்
வலிதாண்டிடி னரகத்தினும் வாழ்வேன்சலக் குமிழொத்திடுங்
குலியுஞ்சத மோசொல்பர குருநாதனே குருநாதனே. (௬௧

அணியாயொளிர் சத்வாசனை யான்மச்சுக முதனன்குறு
திணிதாம்பொரு டங்தென்னுட றியக்கமடி துயில்கண்மனம்
பிணியார்தம மசத்வாசனை பெறுமுன்செய னீயேமிகக்
குணியாயொன்று முணராகிகழ் குருநாதனே குருநாதனே. (௬௨

மங்காமணி யேநின்னெதிர் மாமாயை விளங்காமையிற்
றங்காவென துளமேவிய தனைதோன்றுமோ தோன்றாவிடி
னெங்காயமீ தணுகும்பவ மிறத்தற்கொரு நெறியென்னுள
குங்காமணி யேயீதறை குருநாதனே குருநாதனே. (௬௩)

மணமார்மல ரவன்மாலரன் மண்மேற்படைப் பாதிசெய
நிணமாருடற் றமியேனில னெனிலென்புரி வாரீதறை
பணமார்நன வொடுசொப்பனம் பன்னுந்துயிற் கப்பானிகழ்
குணமேயொரு வடிவாய்வருங் குருநாதனே குருநாதனே. (௬௪)

அழகாகநீ யெங்கெங்கு மமர்ந்துற்றனை யதுவொத்திடப்
பழகாதிருந் தெய்த்தேனங் கங்கேயுனைப் பார்க்குநெறி
புழகாங்கிதங் கொள்ளத்தநு புன்கண்சலந் ததும்பமனங்
குழகாமெழு கொப்பவருள் குருநாதனே குருநாதனே. (௬௫)

இழுக்குற்ற மறப்பேதர விகழ்மாயையி னியல்பென்றிடின்
வழுக்குற்றவெத் துன்பத்தையு மறக்கப்பண லாமேதம
வழுக்கற்ற வகண்டத்து ளமர்ந்தேதினம் வதிசற்சனர்
குழுக்களுறப் பணிப்பாய்பர குருநாதனே குருநாதனே. (சுசு)

நீதானுனை நினையப்புகி னதுசெய்திலை யானக்கண
மேதான்பிறி தொன்றிற்புகு வித்தலியற் றினையவ்வணம்
போதாநின் றேனுக்கொரு புகலாய்குறை வுண்டோமிகக்
கோதாக்கினுந் தூய்தாகுவன் குருநாதனே குருநாதனே. (சுஎ)

தகையன்னைய ரயன்கூற்றிவர் தாமீன்றுதிப் பித்தேகெடும்
வகையேபுரிந் தும்மெய்த்திலர் மருள்கொண்டலை வேனெய்த்தில
னகையாடினும் வெகுளெய்தினு நாணுய்குவ னுலகெங்கணுங்
குகையாய்வளை வுற்றாய்பர குருநாதனே குருநாதனே. (சுஅ)

பிணக்குற்றுளன் பிணிமூப்புளன் பேதத்தினன் பிறழ்வுற்றுளன்
வணக்கற்றனன் மனமாசுளன் வன்கண்மையன் புன்சொல்லின
ன், கணக்கற்றன னெனையுமொரு பொருளாயெணிக் கழலீந்திட
க், குணக்கோலமாய் வந்தாண்டுகொள் குருநாதனே குருநாதனே

ஏலாதென வெண்ணிப்பல வென்வாழ்தின மிழந்தேன்சில
நூலாயினு முணர்வுற்றில னுண்மையறி வடைதற்கதி
மாலாயினன் கைவிட்டிடின் வாழேன்வெகு நாட்சென்றிடற்
கோலார்கைய னுவேனருள் குருநாதனே குருநாதனே. (எ0)

கருங்கைக்கொல ரியற்றுதவல் விலங்கேயிரு கால்சேர்வுற
மருங்கெய்திய சமுசாரமென் மாநீர்க்கட லுள்ளேவிழுந்
திருந்துன்பம தெய்தாதவி டெளிதிற்பெறக் கிடப்பேன்றனக்
கொருங்கேவுணர் தந்தாண்டவென் குருநாதனே குருநாதனே.

ஏகாக்கிர மனமெய்தியிந் தியமூற்றும டக்கியுயிர்
போகாமுன மசியாம்பதம் புகுந்தாற்சுகம் பொருந்துநனி
வேகாக்கொடுங் கோபத்தொடு வீழ்ந்தேயழு தெமன்வந்துறிற்
கூகாவெனப் புரண்டென்பயன் குருநாதனே குருநாதனே. (எ௨)

அமராதிப கருணாகர வாட்கொள்ளென தகவுச்சியி
னமராதிய தாய்தந்தைய ரில்லாள்சுத ரெனுநட்பின
ரமராதபொன் முதலாஞ்சுமை யழுத்தாலலி வாற்றேனருங்
குமராவிதை யிறக்கிப்பினர் குருநாதனே குருநாதனே. (எங)

அடுக்கும்பல சனனங்களி லரிதிற்கொளு நாற்சாதனந்
தொடுக்குமறைப் பொருணின்னமர் தூயோரறி வானந்தமோ
டெடுக்குஞ்சுமை கனமாயினு மிளைப்பாறிட வெனைநம்பியே
கொடுக்கிற்சுமப் பேனன்கறி குருநாதனே குருநாதனே. (எச)

அன்றெத்தனை சனனமெடுத் தலைந்துமறி விழந்தேன்றெரி
பின்றெத்தனை பிறப்பெய்தினும் பெறுவன்கொலோ வருளாவிடி
னென்றூழ் சசியுடோதிய வென்றுஞ்சுழல் வுறுமம்பொற்
குன்றொத்தவென் னிறைவாவருள் குருநாதனே குருநாதனே.எடு

நெஞ்சினொளிர் நீநானெனு நிதியைத்தெரி யாநின்றலைந்
தஞ்சுமுயி ரறியாமைவிட் டறிவேபிர மமதாய்க்கொள
மிஞ்சுங்கரி காட்டியதன் மேன்முப்புடி யகற்றிச்சிறு
கொஞ்சுங்குழ வியதாக்கியாள் குருநாதனே குருநாதனே. (எசு)

நானெத்தனை போதிக்கினு நலமற்றவென் னகங்கேட்டில
தானந்தவ மியற்றுத்தமி யேனைக்கரத் தாற்காட்டவு
மோனந்தனி னேய்வுற்றன முன்னினதி சயமேயிதைக்
கோனேகதி தந்தாண்டவென் குருநாதனே குருநாதனே. (எஎ)

பிரமஞ்சுக மென்பார்கணம் பிரிவற்றொளி யுணர்ந்தோர்சகச்
சிரமஞ்சுக மென்பார்பல பிரிவுற்றலை சிறியோரிரு
கிரமந்தெரி தரப்பக்குவர்க் கீவோயிதை வெளிசெய்தருள்
குரமார்கழ லிருதாளுடைக் குருநாதனே குருநாதனே. (எஅ)

உலகஞ்சுகம் பிரமஞ்சுக முணர்தீயெனப் பலர்வந்தெனைக்
கலகஞ்செய வதனன்மனங் கலங்குற்றனன் பாராய்சக
திலகமென விளங்குமிரு சிறுசீரடி சிரஞ்சேர்த்தொளி
குலவுமுணர் வளித்தாண்டவென் குருநாதனே குருநாதனே.எகூ

எட்டியெட்டிப் பார்ப்பாருளத் தெட்டாது நிகழ்ந்தாயுனைச்
சுட்டிச்சுட்டிப் பார்ப்பார்க்கதி தூரத்தொளிர் கின்றுயற
முட்டிமுட்டி யழினுமிந்த மோகஞ்சிறி தேகாச்சுகங்
கொட்டித்தரும் பொருளோவறை குருநாதனே குருநாதனே. அ௰

எல்லாருயி ருணவிச்சையா யெங்கெங்குமே படர்வுற்றனன்
பொல்லானவன் மாட்டேபுகி னுமைக்காண்கிலிர் புலவீர்மிக
நல்லாயிது நன்றேவெனி னுவாடில னுல்வேதமுங்
கொல்லாவிர தியென்றேதுறுங் குருநாதனே குருநாதனே. (அக)

தளையோதுறும் வேதப்பொரு டங்கிநிறைந் தெங்குமொளிர்
பளையாமதி பெற்றாரநு பவமாநிகழ் வதுவேபசிக்
கிளையாயதைப் புசிக்குமவ ரிறவார்பிற வாரோமிகு
துளையார்கழ லாய்தந்தருள் குருநாதனே குருநாதனே. (அஉ)

உன்னைச்சற்று முணராச்சில வுன்மத்தரை யடைந்தேவதி
யென்னைத்தெரி யாதெய்த்தன னுகெட்டன னிறைவாவினித்
தன்னைத்தரச் சமயமிது தக்கோய்வினைத் தாளாயெனிற்
கொன்னேநமன் வந்தாளுவன் குருநாதனே குருநாதனே. (அங)

ஆனுலெனை யொப்பாரிலை யயர்வில்லுடல் விட்டேயுயிர்
போனுன்மறந் துன்னுவிடம் புகுமேபிறி திடமோவிலைத்
தேனூர்கமழ் மலர்தூய்நிதந் தெரிசித்தடி யவர்போற்றிடுங்
கோனுய்நிகழ் பரமேசிவ குருநாதனே குருநாதனே. (அச)

மணிமந்திர மருந்தாலிருள் மடியாவரு ளினிதெய்திடிற்
பிணிமூப்பிறப் பிறப்பாதிய பிழையாநம னணுகான்றேடைப்
பணிபோன்றிடு முலகம்வினைப் பாழ்போகுமத் துவிதப்பொருள்
குணியாதுறும் பரமேசிவ குருநாதனே குருநாதனே. (அரு)

நெடிதாமில வைக்காத்ததி னின்றும்பய னடையாமிகக்
கடிதேங்கிடுஞ் சுகம்போன்றனன் காணிமனை சுதர்பொன்மணி
தொடியார்மனை முதலோர்தருஞ் சுகந்துய்க்குவ னெனநம்புமிக்
கொடிதாமன முடையேனையாள் குருநாதனே குருநாதனே.(அசு

காணுவுனைக் கண்டேனினிக் களையேறுத லரிதோபல
வாணுணனி செலினுமினி வருநாள்கழி யாமேயெண்
சாணுமுடற் குட்கண்டிடத் தனையுமகண் டாகாரமுங்
கோணுவுணர் தந்தாண்டபின் குருநாதனே குருநாதனே. (அஎ)

தாயுமிலன் றந்தையிலன் றனியேழைய னினிதாம்வகை
யாயும்பல நூல்சாத்திர வறிவாலெனை தழுக்கற்றிடத்
தோயும்பதி னோரானந்தத் துச்சியொளிர் சுகமீந்தகங்
கோயிலெனக் குடிகொள்ளுவை குருநாதனே குருநாதனே.(அஅ)

வடியேர்பத முடையாயுனை மௌனர்பல ரலர்தூறினர்
கடியார்பரம் பொருள்பெற்றவன் கழற்காம்பணி புரிதற்கொரு
வடியானில னென்றேயதை யறிவித்தனன் றமியேனருங்
கொடியேனெனி னுங்கொள்ளுவை குருநாதனே குருநாதனே.

ஆவாநட லேவாழ்வினை யடைந்தேபர மறந்தாரவர்
சாவாச்சுட லேசேர்ந்தனர் சான்றுயறிந் திருந்தென்பயன்
றுவாதலே வொளித்தேயவன் றன்மேனியை நினைந்தேமிகக்
கூவாய்பல காலத்தினுங் குருநாதனே குருநாதனே. (கூ0)

தேசாருனை யடுத்தாற்சிவந் திகழும்மென வடைந்தேனைவெம்
மாசாயினை யென்றென்னுடல் வாழுமுயிர் பொருள்கைக்கொடு
பேசாதுசும் மாவுற்றிரு பிறரோடிது கூறுயெனக்
கூசாதறைந் தாய்நன்றரோ குருநாதனே குருநாதனே. (கூக)

பற்றற்றிடிற் பரஞ்சேருவை யெனப்பற்பல பன்னியெனைச்
சுற்றுமினக் கலையிற்றனி கலைபோன்மிகச் சூதாயருஞ்
சுற்றத்தினின் றகற்றித்தனித் தொருசொற்கொடு மாயஞ்செயுன்
கொற்றத்தினை யென்சொல்லுவன் குருநாதனே குருநாதனே.(கூஉ

நறைகொள்கனி தின்றுமிலை நற்காய்சில புசித்துநனி
தறைசென்றிரந் துங்காலினைத் தானுண்டுதீ நடுநின்றுமோர்
நிறையாய்க்கிருச் சிரமாதிய நெடுநாட்பலர் தவமாற்றினர்
குறைதீர்த்தெனை வலிதாண்டனை குருநாதனே குருநாதனே. கூங

அந்தோவுன தறியாமையை யாரோடெ னறைவேன்பல
சந்தாதி திமிர்ந்தேவனி தையர்போகம தயின்றேகொடும்
பந்தாதி யுழன்றேவெறி பற்றித்திரி வேற்கேபரங்
கொந்தார்மலர்க் கழலாற்றருங் குருநாதனே குருநாதனே. (கூச)

நேசித்தவர் நெஞ்சங்கெடுத் தலுமேநித நினைந்தேமிகப்
பூசித்தவர் பொருளாதிய பொருந்தாசையிற் கொளலும்பர
தேசியென வந்தோருயிர் பருகல்பல தெரிந்தேமனங்
கூசியுனை யுன்னுவென்றன் குருநாதனே குருநாதனே. (கூரு)

வேதநெறி யிரண்டாமவை விதிவாக்கிய மொன்றும்பிறி
தேதந்தவிர் வாகுமிதிற் றெளிவில்லனை முதலீறுகொண்
டாதமுடன் றண்டித்துநன் காளிலுயர் வுறுவேன்றளிற்
கோதெய்துவ னறிவாய்சிவ குருநாதனே குருநாதனே. (கூசா)

போதவிழி கொடுபார்ப்பவர் புவனமறி யாரேபல
பேதவிழி கொடுபார்ப்பவர் பிரமமறி யாரேமத
வாதங்களி லிதுதீருமோ வயங்குமறி வாய்நின்றிடிற்
கோதுங்குண மாகும்பர குருநாதனே குருநாதனே. (கூஎ)

வரம்பிலசத் தியமேடணை மயல்காம மவித்தைமத
நிரம்பாநசை பலவைத்ததி நேர்செய்யினு மிழிவெய்துறு
நரம்பென்புதோல் கொடுமூடிமே னல்லோரரு வறுக்குமிழி
குரம்பையினை யானென்றுறல் குருநாதனே குருநாதனே. (கூஅ)

நூலைச்செவி நுழையாதடை நோயந்நெறி யூராதிருங்
காலேய்பிணி யுள்ளேயுறுங் கண்ணேயொடு மருள்பித்தமென்
பாலெய்தின பணமோவிலை மருந்தீயிலுன் பணிசெய்குவன்
கோலக்கழ லீந்தாளுவை குருநாதனே குருநாதனே. (கூகூ)

மறைநான்கொடு சுரர்மாதவர் மாபூசுர ரடியாரர
னறைகண்மணி திருநீறிவை யணிந்தோரெழுத் தைந்தோதுவ
ரிறையாயினு நீங்காதிருந் தீடேற்றுசொக் கலிங்கமிரு
நறையாரடி மலர்வாழ்கவிந் நாற்பூமியின் னூல்வாழியே. (ா)

முற்றும்.

## குருநாதப்பதிகம்.

பதினான்கு சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆதிநடு முடிவற்ற வறிவான போதமே
யருள்பழுத் தொழுகு தருவே
யானந்த வெள்ளமே மோனநிலை தருகின்ற
வன்பேயென் னன்பின் முடிவே
சோதியே துரியமே துரியங்க டந்தவெகு
தூரமே யிருவ ரறியாச்
சுத்தவெளி யேயிரண் டற்றவத் துவிதமே
சொரூப சூக்கும ஞானமே
நீதியே நித்யமே நிர்க்குண நிரஞ்சன
நிமலமே சபல மேயென்
னெஞ்சமே யிதயமொளிர் கஞ்சமே நஞ்சகள
நித்தனே யத்தா வுமை
பாதியே பந்தந்த விர்த்துண்மை நிலையையருள்
பாலிப்ப தெவ ரையனே
பசுபாச பதியெலாந் தானாய்வி ளங்குசிற்
பரசொக்க லிங்க குருவே. (௧)

குணமெலாங் குற்றமாய்க் குற்றநற் குணமெனக்
கொள்ளுவே னெள்ளத் தகுங்
கோபம்பொ றாமைகள வாசைகொலை திமையைக்
கொண்டுள மகிழ்ந்தி ருப்பேன்
கணமான வாயுவைக் கற்பமென் றெண்ணிவெகு
காலமவ மேக ழிப்பேன்
கற்றவர்க ணற்றவர்க டம்மையொரு கனவினுங்
கனிவாய்க் கருத்தி னினையேன்
பிணமருந் திச்சுற்று ஞாளிநிக ராகவிப்
பிரவஞ்ச வாழ்வி லலைவேன்
பேசற்க ருங்கொடிய பாவியே னாயினும்
பேரின்ப மீந்தா ளுவாய்

பணமாதி யீடணைகண் மூன்றையு நீத்தநற்
பரிசுத்த ரறியு மருளே
பசுபாச பதியெலாந் தானாய்வி ளங்குசிற்
பரசொக்க லிங்க குருவே. (௨)

சுருதிக ளொருகோடி கற்கினு முனதுண்மை
சொல்லவுந் திறமா வனோ
சோகமுட னஞ்ஞான போகம்பு சித்தின்ப
சுகவாரி கைத்திடு வனோ
கருதுமன வாக்கினுக் கெட்டாத நின்னடிக்
கமலமலர் காணு மலே
கன்னெஞ்ச முடையனுஞ் சொன்னபடி நில்லாது
காலங்க ழித்திடு வனோ
நிருவிகற் பந்தனை யடைந்தபெரி யோர்களி
னேசந்து றந்தொழி வனோ
நிகரிலாத் தறுகணொரு காலன்வலை யிற்பட்டு
நெஞ்சுபுண் ணாயலை வனோ
பருதியை யிருளெனப் பார்த்திடுங் கூகைபோற்
பரவெளியி னைப்பார்ப் பனோ
பசுபாச பதியெலாந் தானாய்வி ளங்குசிற்
பரசொக்க லிங்க குருவே. (௩)

காணும லூற்பொருள்க ளான்படி கத்துவேன்
கண்டவுட னணி நிற்பேன்
கருதரிய பொருளிருத யத்திலுணர் வேனெனக்
கழறுவேன் கற்றோர் முனே
நாணும னல்லோ ரவைக்களந் தன்னிலே
நடுவா யிருந்து கொள்வே
னன்னெஞ்ச மில்லாத வன்னெஞ்ச முடையினே
னுன்கடந் தேறும் வண்ணஞ்
சோணாச லத்தின்வடி வாயிருவ ரறியாத
சோதிநீ யருள்செய் குவாய்

சுத்தனே யத்தனே கத்தனே முத்தனே
சுருதிவடி வான பொருளே
பாஞதி நாதாந்த முடிவாகி யொளிர்பெரும்
பவளக் குணக்குன் றமே
பசுபாச பதியெலாந் தாளுய்வி ளங்குசிற்
பரசொக்க லிங்க குருவே. (௪)

இரவியோ டிந்துவான் வளியங்கி யப்புவு
மிப்பெரிய பூமி மற்று
மெண்ணரிய சேதஞ சேதனமெ வற்றினு
மிருந்துணர் பவன்று னுமா
யுரவுமஞ் ஞானமுடன் ஞானமாய் மோனமா
யோங்குசத் தாரூ பமா
யொன்றோடு மொன்றாத வொளியாகி வெளியாகி
யோமெனும் பொருளு மாகி
வரவுடன் செலவுமா யிரவுடன் பகலுமாய்
மன்னுபரி பூரண முமாய்
வாக்குமன மணுகாத தாக்கற்ற வத்துவாய்
வளர்பிர ஞ்ஞான கனமாய்ப்
பரவுகர ணம்பதி நான்குமா யல்லவாய்ப்
பாயொளி பரப்பு முதலே
பசுபாச பதியெலாந் தாளுய்வி ளங்குசிற்
பரசொக்க லிங்க குருவே. (௫)

விண்ணாதி பூதங்க ளத்தனையுந் தானாய்
விளங்கிநிறை முதல்வ தமியேன்
விண்ணப்ப மொன்றுகே ளெண்ணற் கடங்காது
வேறுவே றாயி லங்குங்
கண்ணாதி புலனகக் கரணங்க ளூடே
கலந்திருக் கவுமில் லையோ
காணப்ப டும்பொருள்க ளெவையினும பேதமாய்க்
கலந்திருப் பாயா கிலோ

வெண்ணுதி ருந்துமன மொன்றையு மெதிரிடா
தின்பவா ரிதி படியுமே
யெப்போது மோயாமற் சஞ்சரிக் கின்றவித
மியாதுகா ரண மறிகிலேன்
பண்ணூர்ந்த மறையினுக கப்பாலி லங்கும்
பரப்பிரம மான பொருளே
பசுபாச பதியெலாந் தானய்வி ளங்குசிற்
பரசொக்க லிங்க குருவே. (௬)

கானனீ ரெனுமுலக கூபத்தி லமிழ்கின்ற
கடையனைக் கருணை யென்னுங்
கைகொடுத் தேற்றித் தனிக்கலைத் திருகடைக்
கண்பார்வை யெனுநீ ரினூற்
றூனெனு மமதையறி யாமையிவை போக்கியே
சத்வவா சனைகொ ழிக்குஞ்
சந்தந்தி மிர்ந்துதலை யணிசெயத் தனதுபய
தாண்மலர்க ளைச்சூட் டியே
ஞானமும் ஞேயமும் ஞாதுருவு மில்லாத
நற்பரம வமுத மூட்டி
நாடொறும்வ ளர்க்குமின் றன்மைக்கு மெதிராக
நான்செய்கை மாறு முளதோ
பானஞா னங்கடந் தப்பாலி லங்குதற்
பரமசிவ மான பொருளே
பசுபாச பதியெலாந் தானய்வி ளங்குசிற்
பரசொக்க லிங்க குருவே. (௭)

அக்காலில் வானோர்க ளிந்திரன் மாலய
னறிவினுக் கரிய பொருளா
யாதிநடு வந்தமில் லாமலெங் கெங்கு
மகண்டவடி வாயி ருந்தா
யிக்கா ளெறும்புகடை யானைமுத லெவ்வுயிரு
மெளிதாக வுணரும் வண்ண

மேற்குமா னிடவடி வெடுத்தெனை நிகர்ப்பவரு
 மிப்பவக் கடல்க டந்து
மன்னாத சுகவாரி மூழ்கியா னெனதென்னு
 மமதையு நீங்கி மேலா
மௌனநிலை குடிகொண்டு பவசாக ரந்தாண்ட
 வாழ்வளித் தாண்ட பரிசு
பன்னளி லெம்முனோர் செய்ததவ மோவலது
 பரமேசின் கருணை தானோ
பசுபாச பதியெலாந் தானாய்வி ளங்குசிற்
 பரசொக்க லிங்க குருவே. (அ)

ஓயாம லலைகின்ற துள்ளமொரு பக்கத்தி
 லுயராசை யங்கி போலே
யொன்றைவிட் டொன்றிலே பற்றியு மாதர்மீ
 துறுமோக மயல்பூட் டியு
மாயாத நாட்செல்ல வார்த்திக மடைந்தேம
 னண்ணுமா ருற்று கிறதே
யானனு மித்துயரை யார்க்கெடுத் தோதுவே
 னையநீ யறியா ததோ
வீயாத மோனநிலை யுற்றபெரி யோரிதய
 விண்ணெனு மலர் மீதிலே
வீற்றிருந் திடைவிடா தின்பசுக வாரியின்
 வீங்குகளை தனையு டைத்துப்
பாயாது பாயச்செய் வித்துமுத் திப்பயிர்
 பலிக்கவிளை விக்கு மருளே
பசுபாச பதியெலாந் தானாய்வி ளங்குசிற்
 பரசொக்க லிங்க குருவே. (௯)

பெரியோர்க ளறிவிலாப் பேதையர்க ணட்பினைப்
 பேணர்க ளென்று மறைகள்
பேசுதல்கொண் டோபிரம நிஷ்டரின் றெளிவான
 பேரின்ப நிலையி னிற்க

## குருவிருத்தம்.

வுரியனல னென்றேபல் லுயிர்களுந் தானக
வோங்கியொளிர் கின்ற போதவ்
வுயிரிலிப் பேதையு மொன்றன்றி மற்றிலா
வுறுதிஞா னத்தி னலோ
வரியநின் னடியவர்க ளவைநடுவி லிவனையு
மசையா திருத்தி வைத்தே
யானந்த வுருவாக மோனந்த ரீத்வித
மறிகிலே னெனதை யனே
பரியாய நாமமாத் திரமாயி லங்குமிப்
பார்மீதி லூர்வன முதற்
பசுபாச பதியெலாந் தானய்வி ளங்குகிற்
பரசொக்க லிங்க குருவே. (ய)

முற்றும்.

ஆ. திருவிருத்தம் கக0.

## குருவிருத்தம்.

### கலிவிருத்தம்.

ஆதி வத்து வருள்வடி வாகியிம்
மேதி னிக்கு விளங்கவே தரர்த்தத்தைப்
போதிக் குமெனிற் புன்மையேற் கிம்மையே
சோதில் வீடு மெளிதிற் குறுகுமே. (க)

துரிய நாதனேச் சொப்பிர காசனேக்
கரிய மாலயன் காண்டற் கரியனே
விரியும் பூமி விளக்கும் விளக்கினைத்
தெரியிற் சின்மயஞ் சேருத றிண்ணமே. (உ)

எதனுற் பூதம் புரங்க ளிலங்குமோ
வெதனு லீரேழ் கரண மிலங்குமோ
வெதனு லீரேழ் புவியு மிலங்குமோ
வதனு லியானும் விளங்கே னேவையனே (௩)

மாணி னேக்கினன் மைந்தர் முதலிய
தானைப் போற்றிடிற் றற்பதம் வாய்க்குமோ
தேனைப் போன்ற திருவடி காத்திடி
னூனை மாற்றி யுறுங்கதி கூட்டுமே. (௫)

பொய்ய னென்று புறம்விடிற் பொய்ப்புலம்
பய்யனென் செய்வன் பார்ப்பவன் பார்த்திடின்
வெய்ய தீவினை நல்வினை விட்டுமேற்
றுய்ய னாக்கிச் சுகக்கடல் சேர்க்குமே. (௬)

தடிந்து போகவுஞ் சார்ந்த வினைத்தொட
ரொடிந்து வீழவு மொண்பொரு ளாதியான்
படிந்து நின்னருட் டோயவும் பார்ப்பையேன்
மடிந்து நிக்கும் வழிதூர்ந்து போகுமே. (௭)

கலங்கு காதலுங் கன்மத் திரயமும்
விலங்க நின்று வெறுமறி வாயொளிர்
தலங்கொள் ஞான தயாபர மூர்த்தியே
நலங்கொள் ளுன்னடி யென்னுள நாட்டிடே. (௮)

சிந்தை யிற்குடி கொண்டசீர் பாதனோ
முந்துந் தீவினை மும்மல முங்கெடுத்
தந்த மற்ற வருள்வடி வாக்கிறுற்
றெந்த மற்ற சுயஞ்சோதி சேர்வனே. (௯)

நீண்டுங் கோச மகற்றிச் செடத்துனோ
பூண்ட சிற்சொரு பந்தனைப் புக்குவித்
தீண்டு புன்பிறப் புங்கெடுத் தென்னோனன்
காண்டு நுண்மை யருள்வடி வாக்குமே. (௧௦)

ஆக்கினை னறிஞன் சொக்க லிங்கமீ
பாக்கிய மிதைப் பற்றறப் பற்றிறுற்
போக்கு மீழ்வு மறும்பரி பூரணர்
நோக்கித் தாக்கறுஞ் சின்மய ரூபமே. (௧௧)

எண்ணி யெண்ணி யிரங்க வினைக்குழுங்
கண்ணிருந் தென்கரு ளிற்கண் டில்லையோ
பண்ணி சைந்த மொழியுமை பங்கனே
நண்ணி யென்னுள நாளுமி ருப்பையே. (௪௧)

வஞ்ச முள்ள மனத்துயர் மூற்றுமே
துஞ்ச வைக்குஞ் சுயம்பிர காசனை
யெஞ்ச லின்றி யிதயத் திருத்தினு
ளஞ்ச லென்னு மபய மளிப்பனே. (௪௨)

பித்த னாயினும் பேணும் பெரியனா
மத்த னாயினும் வந்து வணங்குவா
னத்த னாரு ளன்பி னளித்திடுஞ்
சுத்தசை தன்ய மெய்நிச் சுகிப்பனே. (௪௩)

உள்ளத்தா லுள்ள வொண்ணு நிறைபொருள்
கள்ளத்தாற் கவர் வேனெனிற் காண்பனோ
விள்ளத் தான்வலி யாரெவர் விசுவத்திற்
றுள்ளக் கொள்ள வெவையுள சாற்றினே. (௪௪)

வத்து நிச்சயம் வந்தவர் மாட்டுறிற்
சுத்த வாசனை தோன்றிநற் சோதியைப்
பத்தி செய்து பரவச மாகிப்பின்
சுத்த தாகித் தனிப்போ தமாகுமே. (௪௫)

எட்டி ரணமு மறியாத வேழையைத்
துட்ட னென்றதி தூரத்திற் றள்ளிடாய்
கிட்ட வைத்துக் கிருபைசெய் தாளினே
யெட்டு மெட்டா தனவெலா மென்னிலே. (௪௬)

குற்றங் கண்டு குணித்தறி வித்தெனு
ளூற்ற வாவனை யன்றியொன் றில்லனே
பற்றும் பற்றறப் பண்ணிப் பணித்திடி
னற்ற வாவுணர் வேவலி கன்றுமே. (௪௭)

வஞ்ச நெஞ்சினன் வஞ்சியர் கண்வலைக்
கஞ்சி நின்னை யடைந்தனன் ஆதலிற்
பஞ்சின் மெல்லடிப் பார்வதி பாகநின்
கஞ்ச மாமலர்த் தாடந்து காப்பையே. (௰௮)

இற்றை நாளையென் றெய்திடு ஞ்செல்லாங்
கொற்ற வேமன் கொடுபோ வனையனே
பிற்றை நாள்கழி யாதுபி ரமத்தைக்
கற்று வாய் விளக்கக் கடனதே. (௰௯)

முட்டுப் பட்டுழன் மூட மனிதரைச்
சுட்டுச் சுட்டுத் தொலைப்பகண் டொல்லையாய்
மட்டு வார்குழன் மங்கைபங் காளனே
யிட்ட சொக்கலிங் கம்மென் றெதிர்ந்ததே (௨௰)

ஆண்டா னென்னிற் பசுவு மாற்றுமே
பூண்ட நெஞ்சே புரமெரித் தானடி
வேண்டி யென்று மிகக்கரு தாததென்
பூண்டத் தாசைநிற் பற்றிப் பிடித்ததோ. (௨௧)

அத்த னாகியு மன்னைய தாகியுங்
கத்த னாகியு மோங்கிய கண்ணுதல்
பித்த னாயினும் பேரரு ளீகுவான்
சித்தமே சிவனே சிவனே யென்னே. (௨௨)

சுத்த மேனியாஞ் சொற்பொரு ளானனை
மத்த மிற்ற மனத்தமர் சோதியைப்
பத்தி னைந்துமி ரண்டும்போய்ப் பற்றினுற
சித்தி பெற்றுச் சிவமாவ னானனே. (௨௩)

ஆற்றி விட்ட அறுகின் றுரும்புபோற்
றோற்றென் னுள்ளஞ் சுழன்றலைந்தேகெடி
னாற்றல் காணே னருங்கரை யேற்றிடு
மேற்றி ஊர்வோ யிடர்கள்விட் டோடுமே. (௨௪)

சுத்த வேதியன் ருென்னூ ருலக்கிஞன்
மத்த வாதியர் வாதித் துழன்றனர்
சித்தர் வானவர் தேற்றமு மெய்திலர்
பித்த னேனுய்வ தெவ்வணம் பேசினே. (உ௫)

கண்ட காட்சியைக் காரண மென்பரே
பண்டை வேதம் பகர்ந்ததும் பார்த்திலா
ரண்ட நாத னகண்ட வறிவென
வெண்டி சையு மிசைப்பது தேர்மினே. (உ௬)

முனிவர் கூடி மொழிந்தபன் னூலினிற்
கனிவிலா தவென் கன்மனந் தேறுமோ
பனிமதிச் சடைப் பண்ணவ நின்னடிக்
கினிய ஞக்கி யெனையுவந் தாட்கொளே. (உ௭)

பஞ்சுப் பாசி படர்ந்த குளத்திடை
யெஞ்ச மூழ்கின்மெய் யெங்கும தாவபோ
லஞ்சு மாயையி ஞடிமுத் தேகமும்
விஞ்சு காரிரு ளெய்தினன் வேதனே. (உ௮)

வேதந் தேர்ந்தும் விடமன நீத்திலார்
தாத னென்று தலைமொட்டை யாகியென்
ஞத விங்ஙன நானீ யெனமருள்
பூதைத் தீர்த்தின்ப வாரி வளங்கிடே. (உ௯)

ரன்மு கத்தைக்கண் ணுடி யெடுத்தல்போ
லுன்மு கத்தையு ணர்வினிற் காட்டிஞற்
பன்மு கங்களிப் பாரினிற் ருேன்றுமோ
நன்மதிச் சொக்க லிங்க நவில்வையே. (௩௰)

நாத வென்றென்று நாடுவர் நின்றிருப்
பாதங் கண்டும் பழவினை பார்ப்பரோ
வேதம் பேசி யெடுத்துப மித்துவிண்
வாத முற்று மயங்குவர் வாதியே. (௩௧)

தாட்டிகம் பேசித் தன்னை மறந்தையே
கூட்டிக் காலன் கொடுபோ யினென்செய்வா
யாட்டி யாட்டி யசைப்பிக் குமண்ணலி
ளுட்டிய மறிந்தா லின்ப நண்ணுமே. (௩உ)

ஆல முண்ட வரனடிக் காட்படக்
காலஞ் செல்லிற் கரணங்கள் சோர்வுறுஞ்
சீல மோடு சிவனே கதியென
வோல மிட்டவ ளுேய்ந்தொழி நெஞ்சமே. (௩௩)

அங்க நான்கை யடைந்தலை யாழிசூழ்
தங்குந் தாரணி யாளினு மென்பயன்
மங்கை பங்கன் மலரடி மன்னிளு
லெங்குந் தாளு யரசாள லெய்துமே. (௩௪)

முட்டுப் பட்ட முழுதுல கத்தினிற்
கட்டுப் பட்ட தனையறக் காயத்தே
மட்டுப் பட்ட மனஞ்சும் மகின்றிடத்
திட்டஞ் செய்யிற் சிவமவ ளுவனே. (௩௫)

வெட்ட வெட்ட விளைவிருக் கம்மெனக்
கட்டக் கட்ட மனங்கட் டினின்றில
வட்ட மூர்த்தங்கொள் ளண்ண லருளினைக்
கிட்ட வெட்ட வெளியது கிட்டுமே. (௩௬)

குற்ற மேபல கொள்ளு மனத்தினைப்
பற்று மிந்தியப் பாழிற் செலாவண
மெற்று கங்கையான் ருளி லிசைக்கினே
னற்ற வர்புகழ் நல்லருள் வாய்க்குமே. (௩௭)

எங்கு மீச னிலங்குவ தோர்ந்துளோ
ரெங்கு மீசனை யேத்தித் துதிப்பவ
ரெங்கு மீச னியல்பினை யுன்னுவோ
ரெங்கு மீசனு யென்று மிருப்பரே. (௩அ)

சித்தர் போன்றுசெஞ் சாந்தை யணிகிலென்
பத்தர் போன்று பலவேடம் பூணினென்
முத்தர் போன்றுவாய் மூடிய மோனமென்
சித்த மூடிற் சிவமது வாய்க்குமே. (௩௯)

அத்த னென்றவ னுவிக்கு மாவியான்
கத்தர் தேடியுங் கண்டில ரின்னமும்
பித்தன் காண்பனோ பாசம் பிடித்தலை
சுத்த நிற்குண சொக்கலிங் காசொலெ. (௪0)

கலிநிலைத்துறை.

நல்வி னைப்பய னென்றுமி லாதவ னேனே
னல்வி னோரகு ரகத்தினை யடைந்ததி னாலே
யெல்லுங் குன்றிட விலங்குமீ சாவென துள்ளங்
கல்வி னுமதி வன்மைய தாயின காணே. (௪௧)

அறிப வனறி தருமறி வாவதே சிவையாம்
பிரிவ றுஞ்சிவத் துக்கது பின்னம தாகா
நெறியி னுயிர் சிவமதே சத்தென நிற்குங்
குறியி னின்றறிசிவை தனைச் சித்தெனல் கொண்டே. (௪௨)

கட்டை யின்னர னுருவினைக் காணுவ போலே
மட்டி லாதவிம் மேதினி வத்துவிற் காணு
நிட்டை யெய்தின ரிவற்றினை நீத்துயர் சித்தா
யொட்டு வார்பர நிலையினை யோரென தகமே. (௪௩)

பொன்ம லைதனைப் பொருந்திய காகமும் பொன்னா
முன்ம யத்தினை நண்ணின ருன்னுரு வாவார்
சின்ம யம்மெனத் திகழொரு சிற்கன ரூபா
வென்ம யங்கெட விலங்குத னின்கட னன்றோ. (௪௪)

இடம கன்றவிப் பூமியி னுள்வெளி யெங்குந்
திடம தாய்ப்பரந் திகழ்வுறிற் சீவர்கள் பலவா
யடர்ந்தி லங்குவ தெங்ஙன முத்தியா யாயின்
படர்ந்த வத்துவை யன்றிமற் றுளதோ பகராய். (௪௫)

எண்ணி லாதவிப் பசுக்களு மனாதியே யென்று
லண்ண லுமிவை யாக்கவும் வலிமையில் லனுமாம்
பண்ணி னானெனின் முன்புகூ றியவுரை பழுதா
கண்ணி யாக்கின னெனின்வைத்த தெங்ஙன நவில்வாய். (சசு)

பாச மும்பதிப் புரையவ னாதியாய்ப் பகரிற்
பேசு சீவாக்குப் பின்னமோ வபின்னமோ கூறு
யேசும் பின்னம தெனினியல் பாயுயிர் சுசியா
மாசுறுஞ் செம்பை யனையவே யபின்னமாய் வருக்கின். (சஎ)

அன்ன பாசமுஞ் சீவனை யகல்வுறு தென்று
மன்னு முத்தியை மருவுவ தெங்ஙன மருந்தாற்
பன்னு தாம்பிரம் பலபுடத் தாற்பசும் பொன்னாய்
மின்னு மாறெனச் சீவன்றாய் தாமெனின் வினவாய். (சஅ)

கூறு மௌடத வலியுள வரைபொன்போற் குலவி
மாறுந் தொன்மைய தாமது போல மன்னுயிரு
மீறில் சாதன வலியுள வரைசிவத் திலங்கி
வீறிலா வுதித் தொடுங்குத லனைத்தையு மேவும். (சகூ)

கேட்ட லாய்தனற் றெளிவிறாற் பலர்மனங் கிளப்பும்
வாட்ட மற்றன ரபக்குவம் பக்குவ மற்றைக்
கோட்ட மாமுள மெனவிவை குறித்திடா தொல்லை
சூட்டி னான்றிருத் தாளினைச் சொக்கலிங் கனுமே. (ருய)

வேறு.

எண்ணி றந்த பிறப்பினை யீட்டவோ
மண்ணில் வீழ்ந்து மயக்குண்டு மாளவோ
வண்ணக் கன்னியர் வாஞ்சையின் மூழ்கவோ
அண்ணல் சேவடிக் கன்புசெய் யாமையே. (ருக)

வாசமா மலர்த்தா ளன்றலை மன்னிற்
பாச நீக்கிப் பரமுறக் கூட்டுமே
மாசறுத் தவருள் ளத்தில் வாழுமென்
னீச னேயெனை யீடேற்றல் வேண்டுமோ. (ருஉ)

முகமி னுக்கிய மொய்குழற் கேவல்பூண்
டகம கிழ வவர்கிழ லாயினன்
சகமெ லாந்தரு தாய்சொற் றடாதுமெய்
சுகமோ டத்த மளித்தசெஞ் சோதியே. (ருக)

சித்தத் தைச்சிவஞ் செய்யவும் வல்லனீ
யத்தைச் சீவனு யாக்கவும் வல்லனே
னித்த கையி லிருவரொப் பெய்தினு
மத்த நின்னடி யாசிப்ப தென்னையோ. (ருச)

நஞ்சை யொத்த கலிமனம் வென்றிலேன்
வஞ்சஞ் சூதுக்க டிமையாய் வாய்ந்தபின்
றஞ்ச மென்றுன் சரணடி தாழ்வனோ
மிஞ்சுஞ் சாதன மேவ வருள்வையே. (ருரு)

எண்ண முற்றுமெம் மீசன தென்பையே
நுண்ணும் போக நமதென வுன்னுறு
திண்ண மானசு கதுக்கஞ் சேர்வுறு
நண்ணும் பூரண நாளும் விளங்குமே. (ருசு)

பித்தங் கொண்டு பிதற்றுமென் னெஞ்சமே
சுத்து மூன்றவத் தைகடந் தேகிகழ்
நித்த னேயெம் மிறையென நின்றிடி
சுத்த னும்மெம் மடியனென் றூளுமே. (ருஎ)

ஆசை கோப மடியு மகலுமேற்
பாச மோகம் பறந்தோடும் பற்றிய
வாச னைமுத லியாவு மறித்திடு
மீச னேவலி தெய்துமென் னுள்ளமே. (ருஅ)

எதனைப் பார்க்கி னெலாம்பார்த்த தாகுமோ
வெதனைக் கேட்கி னெலாங்கேட்ட தாகுமோ
வெதனை யோரி னெலாமோர்ந்த தாகுமோ
வதனை நாயேற் கருள்செய்வா யண்ணலே. (ருகூ)

துக்கந் தீரத் துணையதா யுற்றுநம்
பக்கத் தேயொளிர் வான்பரம் பாவிப்பா
னொக்க லாய்வந் துணர்வினை யூட்டுவோன்
சொக்க லிங்கஞ் செயல்சொல முற்றுமோ. (௬௰)

எந்தை யேயென் றிரந்து தவிக்கினே
முந்தை யேதொடர் மூவினை நீங்குமே
சிந்தை பேர்ந்து திரியிற் சிவமதே
சந்தை யாய்ப்பல் சகத்தெனச் சாருமே. (௬௧)

ஆக்கை பொய்யென் றறிந்து மயர்வறுஞ்
சேக்கை யின்னுந் தெளிந்தில னெங்கெங்கு
நீக்க மின்னிறை வாயொளி செய்துமென்
னோக்கிற் கெட்டில நுண்ணறி வாளனே. (௬௨)

சங்கை யாள்பவன் சங்கரி யென்றிவர்க்
கங்கங் கூறிட் டளித்தமை பற்றியோ
தங்க வோரிடந் தானின்மை பற்றியோ
வெங்கும் பூரண மெய்தினை யீசனே. (௬௩)

நாற்றத் தோற்பையை நானென் மதத்தினு
லேற்ற னனிகழ்ந் தேகை விடினெனக்
காற்றல் செய்வதற் காருள ரையனே
மாற்றங் கூறு மறலுதை பாதனே. (௬௪)

விச்சை நாதனே விஞ்ஞான நீதனே
யிச்சை கொண்டின் னருளமு தெண்ணியே
பிச்சை புக்கினன் பெட்புட னீகுத
னச்சர வணி நம்பனின் மேலதே. (௬௫)

அண்ண லென்னு ளகத்துறை யத்தனே
கண்ணுஞ் சிந்தையு மொன்றக் கற்பிப்பையேற்
றிண்ணக் கூடத்தன் சேய்மைய தாகிமேல்
வண்ணப் பூரண வத்துவும் வாய்க்குமே. (௬௬)

கருத்தை யுத்தியாய்க் காணுந் துரியத்தி
விருத்தி வாக்குளங் காயமு மெட்டொணாப்
பருத்த நாதனைப் பார்த்தபார் வைகொடே
வருத்தி நோக்குறின் மன்னும் வெளியதே. (௬௭)

பிண்டப் பேதையன் பேய்மனம் பூண்டுபல்
கண்டங் கண்டுமைக் காரினைக் காண்கிறே
னண்டப் போதைய ராரறிவா யெல்லாம்
விண்ட சோதியாய் மின்னுகின் றார்களே. (௬௮)

கய்யி னூற்கந்தங் காணோணு வாறுபோற்
றுய்ய போதமன் றிப்பரந் தோன்றுறா
தய்ய வின்னமு மையந் திரிபுக
ணய்ய வில்லையே நானுய்வ தெங்ஙனே. (௬௯)

சருவ பூரண தற்பத சாக்கியைப்
பருவ மில்லவ னாயினும் பாவிக்கிற்
கருவம் போம்பிர ஞான கனம்வரு
மிருவி கற்பமிற் பேன்சொக்க லிங்கமே. (௭0)

சிற்ற முண்டோ சிவமேயென் றேகத்திற்
காற்றைப் பூட்டியென் கைகா லசைந்திடத்
தோற்றம் பொன்ற லறுக்கநற் றூயவா
போற்றுஞ் சிற்பரம் பூரித்தல் வேண்டுமே. (௭௧)

இழுக்கிற் றியேலீ றில்சிவா னந்தம்
வழுக்கித் தள்ளுமென் வார்த்தைகே ணெஞ்சமே
யொழுக்கங் குன்றா துயர்நெறி பற்றினு
லழுக்கு மற்றே யகண்டத்துள் ளாழ்வையே. (௭௨)

மய்ய லாதியெப் பற்று மடிவுறும்
பய்யப் பையக் கருவிகள் பட்டிடும்
வெய்ய பாவ வினைகளு மாண்டிடுஞ்
செய்யச் செய்யச் சிவனோந் தெழுத்தையே. (௭௩)

குய்யத் தாசையைக் கோடிசெய் தொன்றெடுத்
தய்யன் சேவடிக் கன்பி னளித்தியேல்
வய்யத்தே பொன்மண் ணாசை மடிந்துபா
செய்யுங் கூற்றையு மின்பிற் கடப்பையே. (எ௪)

காண்பான் மூன்றையுங் கண்டு களிப்பையேற்
சேண்பு கநீர்த்தி டரினைச் செய்யுமே
மீண்பொ காமல் வெளிக்குள் ளொளிப்பையேன்
மாண்பி லிச்சக வாசனை மாளுமே. (எ௫)

கோச மைந்தையு நீக்கிக் குணிப்பையேற்
பாச மாமலம் பாழுறும் வாதைபோந்
தூச கன்றபின் றொல்புவி தோன்றுறு
தீச னும்வலி தெய்துமென் னெஞ்சமே. (எ௬)

என்னை நெஞ்சே யிரந்துண் டிருப்பதை
யன்னை தந்தை யறியி னணைப்பபோ
லின்னு மேலோ ரிடமிரந் தேங்குறின்
மன்னுஞ் சோதி வளர்ந்தது வாக்குமே. (எஎ

சொல்ல ருஞ்சுக வாரிதியே யொரு
வெல்லை யற்றொளி ரீசனே யானுறு
மல்ல றீர்த்தறி வேயுரு வாக்கினு
னல்ல தற்பத வின்ப நணுகுமே. (எஅ)

முன்னை நான்மறை யோது முதல்வனே
யன்னை யாயிருந் தல்ல லகற்றுவான்
றன்னை யாய்ந்திடத் தக்கன சாற்றுவான்
பின்னை யென்குறை பேதையென் னெஞ்சமே. (எகூ)

பெத்த முத்தி பிரித்தறி விப்பையே
லத்த நின்னை யறிந்தொன்றி யாழ்வனே
நித்த நிர்க்குண நின்மல நிட்கள
சுத்த தத்துவ சொக்கலிங் கேசனே. (அ௰)

கன்னற் பாகுங் கசப்புறத் தித்திக்கு
மன்னு மாசறு மாணிக்கச் சோதியே
யின்னு மியான்படு மியாதனை யென்னுள
வன்ன தின்ன தென்றைய வறைவையே. (௮௧)

எங்கண் மாமணி யேயன் றிருபெய
ரங்கு மிங்குமாய்த் தேடி யலைந்தன
ரங்கு மிங்குமாய்த் தேடா தலைந்தனன்
றங்கு மெவ்வுயிர் தோறுந் தலைவனே. (௮௨)

ஞால மீன்றதை நன்னெறி சேர்வுறச்
சீலஞ் செய்தனின் செய்கட னல்லவோ
மூல வென்செயல் கொண்டென் முடிவுறு
மால முண்ட வகண்டித வண்ணலே. (௮௩)

வஞ்ச மாதர் வலைப்புண்ணுக் கஞ்சியே
நெஞ்சி லுன்னை நினைத்தன னிச்சலு
மஞ்சி னேனலந் தேனின் னருளினைப்
பிஞ்சி னேனுக்கும் பெய்யுமா பெய்வையே. (௮௪)

பண்டை நாத பரந்த பராபர
வண்டத் தப்புறத் திப்புறத் தானவா
பிண்டங் கொள்ளள வுஞ்சுகம் பெய்வையேல்
வண்ட னுன்னையும் வாழ்த்துவன் வள்ளலே. (௮௫)

காலன் வந்து கடுந்துயிர் கொள்ளுமுன்
சீலந் தந்து தெளிபொரு டற்றுவா
பால முண்டென் னழல்கையிற் றுங்கியென்
கோல நின்செயல் கூற முடியுமோ. (௮௬)

தன்னை விட்டுத் தனிமுத றேடியென்
மன்னை யோரிற் றலைவனைக் காணலாம்
முன்னைச் சிவனை யானென முன்னினுற்
பின்னை யும்மிறப் பிறப்ப தெய்துமே. (௮௭)

நன்றி கொன்றுநின் னுயிற் கடையினேன்
கன்றெனக் கரைவுற் றழல் காணியோ
வன்று சம்பந்த ராவென் றழுவகேட்
டொன்றி யன்னையோ டோடிவந் தாண்டவா. (அஅ)

தங்கச் சோதியென் றன்னினுள் ளேபுகுந்
தங்கு மிங்குமெங் கும்மொளி யாகினற்
கங்கு ளத்துள கங்குன் முதலியீ
ரெங் கொளிப்பீ ரியம்புமி னென்முனே. (அசூ)

காதிற் றேடணி கன்னியர்க் கேவல்பூண்
டாதி நான்முத லல்குலிற் றோய்ந்தவர்
சூதிற் சொல்லுந் தொண்டாற்றி யிளைத்தன
னேதுக் காவனென் றுண்டைசொக் கேசனே. (கூ௰)

ஆசிரியவிருத்தம்.

அநுபவ துரியத் தமர்ந்தரு ளண்ணு
தனுபவ மிரியத் தற்பதந் தருவா
யுனுபவ ருணர்வே யொண்சுட ரொளியே
மனுமுதன் மறையே வயங்கருட் டேனே. (கூக)

உணர்த்துவ துணர்த்தா யுவப்பவ ருவப்பே
குணத்தவர் குணமே கோதினன் கமுதே
பிணத்தன னுயிரோ பெருஞ்சுடாச் சோதீ
கிணத்தனன் வாழ நியமமொன் றருளே. (கூ௨)

துவமசி பதத்தாற் றுவந்துவ மறுத்துப்
பவவினை பரவாப் பணித்தருள் பரமா
தவநெறித் தலைவா சரண்மலர் தலைசேர்த்
தவமன மிரிய வநுபவத் தழுத்தே. (கூங)

எணமது மறிக்க வெழுந்தொளி ரெந்தாய்
குணகுணி குணிக்குங் கோமளக் கொழுந்தே
மணமறை முதல்வா மாளொணு வழியிக்
கணமருள் வரதா கற்பகத் தருவே. (கூச)

பிறப்பிடை புகுதாப் பேரின்ப மீவாய்
மறத்திருண் டாற்று மாணிக்கச் சுடரே
யுறுப்பிடை யுயிரே யுணர்வினி லுணர்வே
பொறுக்கலன் றுயரைப் புணர்க்கவந் தாளே. (௬௫)

அரும்பெருஞ் சோதீ யன்றறை பொருளைக்
குருமொழி யெனவுட் கொண்டனர் நால்வர்
பருவினை யுடையேன் பற்றிடே னென்றே
யிருவினை புகுத விறைவவெண் ணினையோ. (௬௬)

அன்றுநீ யென்னை யகற்றுவ வகற்றி
யின்றுநா னுன்னை யேத்துவ தெதற்கோ
நன்றுதீ தறியா நாயினே னுய்தற்
கொன்றினை யருளா யும்பர்க டேவே. (௬௭)

நஞ்சினை யனையு நமனிலை யெனிலோ
வஞ்சனே னுன்னை வழிபட லெதற்கோ
மிஞ்சிய வறிவாய் விளங்குமொண் பொருளே
தஞ்சமென் றேற்கொன் றளித்தறக் கதுவே. (௬௮)

இன்பவா ரிதியா யெங்குநீ யிருக்கிற்
றுன்பெவ னுதித்த வகையது சொல்லாய்
மன்பெறு மறனு முனையல வாயி
னென்பெரு முயிரெங் கிலங்கினு மென்னே. (௬௯)

வேடங்கள் பலவாய் விரிக்கிற்சொக் கலிங்கா
மூடனு மவற்றைத் தானென மொழியான்
கூடிலங் குணர்வைக் குணித்திடி னெந்தாய்
பீடில் சென்மங்கள் பிறக்கினு மென்னே. (௭0)

வேறு.

இரும்பைக் காந்த மிழுக்கின் றவாறுபோ
லரும்பொன் னேயரு ளாலீர்க்கி னுய்வனே
சுரும்புசூழ் குழலா டுணைவா வெறுந்
துரும்ப னேன்றனித் துய்வனோ சொல்லினே. (௭௧)

இடுக்கண் வந்துழி யேங்கி வெதும்பிமெய்
நடுக்க மெய்தினு மாறுமோ நன்னெஞ்சே
யடுக்கு நிர்க்குண வத்துவ தாயினாற்
படுக்கலா மின்பப் பாற்கடற் கண்ணதே. (௱௨)

அய்ய யானலைக் கழிந்த தெத்தனை
மய்யல் கொண்டு மயக்குண்ட தெத்தனை
தய்யலார்க் கேவ லுன்செய்த தெத்தனை
வெய்ய னேனையு மாட்கொள் விமலனே. (௱௩)

எந்தனுள் ளமுமுன் னையேயெண் ணல்போ
லெந்தை யேசற் றெனையெண்ணி னுன்முழு
வந்த னாயினு மமல னுருவேன்
பந்த மியாவும் பறந்தோடு மண்ணலே. (௱௪)

ஆதி யென்னுயி ரத்தனே நித்தியம்
பூதி சாதனம் பூண்டில னாயினும்
பேதி யாவுள்வெ ளிபிறங் கியாவையு
நேதி செய்தெனை நீயதா யாக்கிடே. (௱௫)

ஆற்றல் கண்டில னேமுக வத்தனே
தோற்று மாயையுந் தூசேய் வினைகளுந்
தீற்று மாசுஞ் செறியகங் காரமு
மாற்றல் செய்யின் மறுத்தெதிர் செய்யவே. (௱௬)

கன்ம மென்செயுங் காமமு மென்செயுஞ்
சென்ம மென்செயுந் தீவினை யென்செயும்
வன்ம மென்செயு மாற்றானு மென்செயுஞ்
சின்ம யம்வலி தேயெனைச் சேரினே. (௱௭)

வெய்ய பாவக் கடலில் விழுந்தனே
னுய்யு மார்க்கமொன் றுள்ளதோ கூறிடாய்
செய்ய வாதவூ ரற்குத் திருந்திய
துய்ய ஞானநி லைசொற்ற சோதியே. (௱௮)

இடைய றுதுபல் சென்ம மெடுத்தனன்
றடைய றுதும ரணமுஞ் சார்ந்தனன்.
கடைய னுக்கின்னுங் கட்டளை யென்னுள
விடையு கத்தவி ளம்பிட வேண்டுமே. (௯௯)

துஞ்ச லுண்ட றுணைமுலை யாருடன்
கொஞ்சிக் கூடன் முதலிய கொள்ளுமா
வஞ்ச நெஞ்சினன் மார்க்கமுங் கண்டிலன்
தஞ்ச மீந்துதற் காசொக்க லிங்கமே. (௱)

பாரு ம்ம் படுதழல் கால்வெளி
சாருஞ் சூரியன் சந்திரன் சீவனோ
டாரு மெண்வடி வாய பரமனே
சீருஞ் செல்வமு மென்று தினந்தொழே. (௱௧)

தூரியந் தேயொளிர் சோதிச் சொரூபமே
யுரிமை யின்வருந் துணர்வைத் தருமெனி
னரிய வோபிறப் போடிறப் பற்றிடல்
பிரிய மோடதைப் பேணுதி நெஞ்சமே. (௱௨)

நெஞ்சும் வாளா நினைந்துபுண் ணுயினை
துஞ்சித் துஞ்சிக் கரணமுஞ் சோம்பின
வஞ்சி யஞ்சி யகமு மடங்கின
குஞ்சி னேனினி யுய்வகை கூறிடே. (௱௩)

விடுத்த வைம்பொறி வேட்கையிற் றள்ளின
வடுத்த நாற்கர ணங்க ளலைத்தன
கடுத்த மாயையுங் கன்மத் திழுத்தன
படுத்தும் பாட்டினைப் பார்த்தரு ளண்ணலே. (௱௪)

ஊரைக் கேட்டுநா னென்று முணர்ந்திலன்
பாரைத் தேய்த்துமுன் பாதமுங் கண்டில
னூரைப் பார்த்துரை யாடுவ னையவென்
சீரைப் பார்த்துத் திருவருள் செய்வையே. (௱௫)

பெண்டிர் பிள்ளையும் பின்னுக் குதவியென்
கொண்டவ ரோடுங் கூடி மகிழ்ந்தனன்
சண்டன் றான்வந் தழைக்கிற் றடுப்பரோ
விண்டு காணா விளங்குஞ்சிற் சோதியே. (௱௧௬)

என்னை யுன்னதா யேறிட் டிருப்பையே
லுன்னை யென்னறி வாயுளங் கொள்ளுவேன்
முன்னைப் பூரண முப்புரஞ் செற்றவா
வன்னை யுமனக் கொத்தவ ளாவளோ. (௱௧௭)

சித்த மானைச் சினப்புலி தின்றுமேன்
மத்த மாகி மருண்டலை கின்றதாற்
சுத்த ரைத்துணை கொள்ளிற் றுயர்செயா
வத்த னும்வந் தபய மளிப்பனே. (௱௧௮)

நொய்மை யானசிற் போதமுண் டாகியே
பொய்மை யாவும் புறம்பொதிந் திட்டதான்
மெய்மை தோன்றில் விண்ணவ னேகருப்
பைம றுத்துமபு காவண்ணம் பார்ப்பையே. (௱௧௯)

பொய்ய தாமிப் புவனத்திற் புக்கியே
வெய்ய காமத்தில் வீழுண் டுதைந்தயான்
பய்ய னன்றோ பரசொக் கலிங்கமே
துய்ய னுக்த் துணைசெய்ய வேண்டுமே. (௱௨௰

கடத்தை மண்ணெனக் காண்பவ னியாவனே
சடத்தை வேறெனக் காணுவன் றன்னிலே
மடத்தைப் போக்க மனம்பொறி யொன்றுறுந்
திடத்தை யீயச் சமயமென் றேவனே. (௱௨௧

என்று துஞ்ச லெனைவந் தடையுமோ
வன்று காட்சிதந் தையவைந் தக்கர
மொன்றி நாமன மோய்வின்றி யுன்னவும்
மன்று ளாடு மலர்ப்பத மீவையே. (௱௨௨

இந்த ணிந்தவ வென்மனஞ் சிருறப்
பந்தந் தீர்த்துப் பழம்பொரு ளீவையேல்
வந்தித் துன்னையும் வாழ்த்தி வணங்குவ
னெந்தத் தொல்லையு மீடழிந் தேகுமே. (௱உ௩)

காமத் தால்வெதுப் புற்றனன் கங்கையும்
வாமத் தேயொரு மங்கையும் வைத்தவா
ஈமத் தாடியே யென்னுளத் தின்னுமுன்
னுமத் தைத்தரி யாததென் னுதனே. (௱உ௪)

அந்த மாதி யிலாத வகண்டமே
வந்தென் னுள்ளத் திலங்கின் மருள்படும்
பந்த முத்திப் பகுப்பும் புலப்படும்
சிந்தை யுஞ்சிவ மாகித் தெளியுமே. (௱உ௫)

சொந்த னென்றுன் றுணையடி துன்னினன்
மந்த னுக்கினு மாக்குக வாவென
வந்த மில்சத்த தாக்கினு மாக்குக
வெந்தை யேமற் றெதாக்கினு மாக்கிடே. (௱உ௬)

செல்வ நின்னைத் தினந்தினஞ் சிந்தியா
நல்லற் கூட்டத் தடைந்துண் டிருந்தனேற்
கெல்லை சொல்லி யிருப்பிடங் காட்டினுற்
றொல்லை தீர்ந்து சுகமடைந் துய்வனே. (௱உ௭)

பூவை வேண்டிலன் பூமியை வேண்டிலன்
கோவை வேண்டிலன் கொள்பொருள் வேண்டிலன்
வாவு முள்ள மொடுங்கி வயங்குமுன்
சேவை வேண்டினன் சேவடி யீவையே. (௱உ௮)

தன்னைக் காண்பவர் தன்பவம் போக்குவார்
தன்னைக் காண்பவர் சாக்கிய தாகுவார்
தன்னைக் காண்பவர் தற்பத மெய்துவார்
தன்னைக் காண்பவர் தாமது வாவரே. (௱உ௯)

73430

கரணக் காடு களைந்தெறிந் தங்ஙனே
யரணஞ் செய்தைந்து கோசமு நீத்தொளிர்
பூரண மெய்திப் பொழுதினைப் போக்கினுன்
மரண வேதனை மாறுஞ்சொக் கேசனே. (ராநய)

அன்னை யப்பனு மாயொளி ரத்தனே
யுன்னை யாசிப்ப தொன்றுள கேட்டியாற்
பின்னை வேறொன்று மில்லைப் பிரானிரோ
யென்னை யேயெனக் குத்தரல் வேண்டுமே. (ராநக)

பத்தி செய்பவர் தங்களைப் பார்த்திரேன்
றுத்தி யம்புரி வோரைத் துணைகொளேன்
சுத்தி யுற்றவர் தூமொழி கேட்டிரே
னெத்தி னுற்கனா யேறுவ னீசனே. (ராநஉ)

அகம்ப தப்பொரு ளையந் திரிபற
விகம திற்றெளி வித்தற் கெவருளா
ருகமாய்த் தோன்றின தோர்பக லையசிற்
சுகமற் றுற்பினைத் தோன்றுத தென்னையே. (ராநந)

பய்யப் பையப் பழுக்கு மருட்கனி
யய்யப் பட்டவர்க் கில்லை யதன்ருசி
வெய்ய துற்குணம் விட்டைந் தெழுத்தினைச்
செய்யச் செய்யச் சிவானந்தம் பொங்குமே. (ராநச)

மய்யுண் கண்ணியர் வீசும் வலையுளே
நய்யுஞ் சிந்தைய னுகிப் புழன்றனன்
வெய்ய காமத்தை விட்டுளஞ் செவ்விதா
யுய்யு மாறென் றுரையென தப்பனே. (ராநரு)

இருப்பை நம்பியென் வாணு ளிழந்தனன்
விருப்ப முற்றிலன் மெய்யடிக் காம்பணி
கருப்பை யுற்றுக் கலங்குமென் கன்மனந்
திருப்பி யாட்கொளச் செய்வ தருமையோ. (ராநசா)

காணத் தக்கது கண்ணுதல் காட்சியே
பூணத் தக்க தவன்றிருப் பொன்னடி
நாணத் தக்கது ஞானமில் புன்னெறி
பேணத் தக்கது பெம்மா னுரையையே. (௩௩௭)

மேனி நாறிடு மெய்மயிர் நாறிடும்
யோனி நாறிடு மூத்தைவாய் நாறிடு
மீனி னேக்கும் விழிகளு நாறிடு
மேனிவற் றிலுழன் றனையென் னெஞ்சே. (௩௩௮)

அன்றுமாற் கண்டற் கண்ணி திருத்தியோ
வின்று நாயேற் கிருப்பதி தூரமோ
வென்று மெவ்வெவ ருள்ளத் திடைவிடா
நின்று நட்டஞ்செய் நின்மலத் தெய்வமே. (௩௩௯)

பார்ப்பை யாயினெப் பாசமு நீங்குந்தாள்
சேர்ப்பை யாயி னிருள்செல் லுஞ் சீரருள்
வார்ப்பை யாயின் மனங்கரை வாகிடுங்
காப்பை யாயிற் சொக்கேகரை சேர்வனே. (௩௪௦)

வேறு

கதிரவ னொளிமுன்னே கறையிரு ணிலையாமோ
முதிர்மதி யுடுவனறீ முன்னவ னிகழ்வாமோ
வெதிரறு சிவமுன்னெவ் விமயவர் நிகழ்வாரோ
மதியறி தம்விருளு மன்னுமோ வதனெதிரே. (௩௪௧)

தனதுச னனதினத்தைத் தானய லவரிடத்தே
வினவிய றிதலென்ன விளங்குந் தனதுநிலையே
யனகர் தமையடைந்தே யறிவது முறையாமே
மனங்கொடு தனதுணர்வை வருந்தினுந் தெளிவாமோ. (௩௪௨)

ஒக்கலை மகவிருக்க வூர்புகுந் தலைவதுபோற்
றொக்கினுள் ளறிவிருக்கத் துறைபல வுணர்ந்தென்னே
சிற்கனர் பணிபுரியிற் றெரிப்பரன் னிலைவிளங்கும்
பைக்குளும் வரல்பொன்றல் பழவினை துயர்கெடுமே. (௩௪௩)

கடமெனின் மண்ணறியாக் காரண மதுபோலே
சடமெனிற் சித்தறியார் தாரணி வதிபவரோ
அடர்சிவ னுருவன்றி யகிலம துணர்வாரோ
திடமுறு மறிவகமாய்த் தெளிந்தநற் றூயவரே. (௱சச)

அறைதரு புவியம்பு மனல்வளி விண்பரிதி
நிறைமதி யுயிர்முதலா நின்றவெண் ணுருவெனுமா
விறையவ னலதொன்று மிலையென நூலுணர்ந்தோர்
கறையறு முரைகொள்ளி னொளிருமோ கலையுயிரே. (௱சரு)

சருவமும் பிரமமெனச் சாற்றிடு மறையோரார்
விரிதரு மாகமநூல் விளம்பிய பொருளுணரா
ரொருபசு தலையென்று முளதென நெறிதவறித்
தருபெலம் போற்சிலதைச் சாற்றுவர் புறம்போந்தே. (௱சசு)

கடவின் னுயர்விண்ணிற் கலத்தலை நிகரறிவும்
படர்பிர மத்தொன்றாய்ப் பரவுத லுமிற்சுகமு
முடன்றரு வோனுறுவோ னென்றுமில் சூநியமாஞ்
சடமெனி னதனியல்பைச் சாற்றுவ னதுகேளாய். (௱சஎ)

ஆண்டவ னடிமையிரண் டங்ஙனங் கொளினுயர்வோன்
காண்டருஞ் சிவமாகுங் கடையது பசுவாகு
மாண்டக விரண்டாயி னதற்கிது பயமன்னும்
பூண்டிடிற் பயமபயம் பொருந்துவ தெங்ஙனமே. (௱சஅ)

தவமுழு துடன்றியொரு சற்குரு வடிவடைந்தா
யவமுழு துந்திரண்டே யசத்துரு வெனவுதித்தே
னுவமையி லெனையாண்டா யொருவரு மறியாத
சிவநிலை தெரித்துணர்த்திச் சீர்செய னின்கடனே. (௱சகூ)

அழுக்கலை குழவிதனை யன்பினி லணைத்தன்னை
வழுக்கறத் தமுதூட்டல் போலவென் மனத்துள்ள
விழுக்கம தகற்றியெனை யென்றனக் குணர்விக்க
முழுக்கரு ணையுமிலையோ முன்னொளிர் சொக்கலிங்கே. (௱ருய)

வேறு

இருளை வாயின் விளக்கெனி னேகுமா
வருளை வாவென் றழைக்கினங் கெய்துமா
குருளைக் குமன்னை யாகிய கொற்றவா
தெருளையீ யினெலாம் வந்து சேருமே. (௩௫௧)

முத்தி சேருவர் மோன மடைந்தவர்
பத்தி செய்தவர் பாத மடைகுவார்
சுத்தி யுற்றவர் சொன்னெறி துன்னுவார்
எத்தை யான்செய்தீ டேற வியம்பிடே. (௩௫௨)

காணக் கண்ணிருந் தும்முனைக் கண்டில
பூண வுற்றுஞ் சிரங்கழல் பூண்டில
பேண நெஞ்சுற்றும் பெட்பி னினைந்தில
நாண வந்தா னடங்குமா றெங்ஙனே. (௩௫௩)

உன்னி னீசித் துணர்வெனு மியான்சித்தே
பின்னைப் பின்னமு மெங்ஙன் பிறந்ததோ
மன்னு மாறறி வாய்நிறை வெய்தினுற்
றுன்னுநா னீயெனும் பேதந் தோன்றுமோ. (௩௫௪)

விளங்கு முப்பத மேவி யிருந்தமை
துளங்கு முன்பொருட் டென்பொருட் டோசொலாய்
இளங் குழவிக் கிதுதெளி விப்பையேற்
களங்க மூழ்வினை முற்றுங் கரையுமே. (௩௫௫)

கண்ணனைத்தையுங் கண்டுந் தனைக்காணு
வண்ண மென்னுளந் தன்னையு மாய்ந்தில
திண்ண மாகத் தெளிபொரு ளெங்குற்றுங்
கண்ணிலான் போற்கலங் கினன் காப்பையே. (௩௫௬)

அய்ய கன்று மலறித் தவிப்பபோற்
பொய்ய னேனும் புலம்பித் தவித்தனன்
வெய்ய முப்புரஞ் செற்ற விமலனே
ய்யு நன்மன நல்கினன் குய்வனே. (௩௫௭

யோக ரானவ ரூகித் துணருவார்
சோக ரேபெருந் துஞ்சலிற் றுன்னுவார்
பாக மாமனத் தோர்பரம் பற்றுவா
ராக நம்பினற் கென்னுள வையனே. (௱௫௯)

பூணும் பந்தமும் போக்கி யிருப்பையேற்
காணு தற்கரி தாங்கரி வாய்த்துமேற்
ருணு விற்புரு டன்போலத் தாரணி
மாணு ளத்தின் வயங்கிச்சித் தெய்துமே. (௱௫௧)

எம்மான் சொக்க னிசைத்தது மீதுவாஞ்
சும்மா நிற்கினுஞ் சுட்டுத லற்றிடு
மிம்மார்க் கத்தான் வருபவ மெய்துருப்
பெம்மான் றன்னருள் வந்து பெருகுமே. (௱௬௰)

வந்தி மைந்தன் சகமென மன்னிரு
லந்தப் போத மநுபவத் தெய்துமே
சந்த தமு மதனைத் தரிக்கினேற்
பந்த மியாவும் பறந்தவண் மாயுமே. (௱௬௧)

ஆவா விந்த வருளுடை யண்ணலா
ரேவா நின்றன ரெக்கர ணத்தையு
நீவா போவிரு வென்னி னிலைக்குமோ
தேவா வென்றவன் றேசாய்த் திகழ்வையே. (௱௬௨)

சிட்ட னுகிச் சிவனுருக் காண்கிலை
துட்ட னுகி மகிழ்ந்து சுழன்றனை
இட்ட னுகியெம் மானுக் கிருத்தியேற்
பட்ட பாடனைத் தும்பறந் தோடுமே. (௱௬௩)

என்னை யென்றே யெழுதுவன் சிந்தையிற்
சொன்னச் சோதிச் சுயம்பிர காசனைத்
தன்னைத் தன்னறி வாகத் துணிதியேற்
பின்னைப் பின்னம் பிரிந்துபோ நெஞ்சமே. (௱௬௪)

பொன்பு தைத்த புவியிற் புலனிலா
ரின்பு றூரது போலென் றிருப்பினுந்
தன்பொ ருணிதந் தங்கியுந் துஞ்சலி
லன்பி லேனயர் வாலறிந் தில்லனே. (௱௬௫)

சாமந் தோறும் பயந்தரன் றுளிணை
நேம மோடுனி நூனெறி நின்றிடாய்
சோம சூரியர் தோன்றி யொடுங்குதல்
கோமா னுனையைக் கொண்ட பயமன்றே. (௱௬௬)

ஆல கால விடமமு தாயின
கால முங்கழற் காற்கிரை யாயின
பால னெஞ்சமும் பண்புறப் பண்ணுதன்
மூலனே யரிதோ மொழி முன்னினே. (௱௬௭)

சட்டை நீக்கிய சர்ப்ப மனையவே
கட்டை நீத்துச் சிறகன மதாயினு
னிட்டை யுமது நின்மல முமது
வெட்ட வெளியு மாமதென் னெஞ்சமே. (௱௬௮)

அன்ப ரீட்டத்தைக் காத்தங் களிக்கவோ
வன்பில் வேள்கய மாதினைக் காக்கவோ
அன்பு றுந்தொல் லுலகந் துலக்கவோ
வின்ப மோடிரந் தீரிது செப்புமே. (௱௬௯)

மேலைக் குன்னையே மேவி யிருந்தவர்
வால ராகியே வாழ்ந்துண் டிருந்தரால்
சீல மோடுசொக் கலிங்கஞ் செப்பிய
மூல மானது முன்னெதிர் தோன்றுமே. (௱௭௰)

தாயர் தந்தை யிருக்கிற் சகிப்பரோ
பேயோ டாடலும் பித்தனென் றேசலு
நேய மோடிரந் துண்ணலு நிச்சலும்
பாயுமா டேறிப் போதலும் பற்றியே. (௱௭௧)

தஞ்ச மென்றரு டன்னடை வன்றியே
நெஞ்சை நஞ்சிட்டுக் கொல்லினு நிற்குமோ
மிஞ்சி யெங்கும் விளங்கும் பிரமமே
யஞ்ச லென்றெனை யாதரித் தாள்வையே. (௱௭௨)

மோனமார்க் கத்தின் முட்க ணிறைந்தவோ
ஞானமார்க் கத்திற் கற்க ணவித்தவோ
தானமார்க் கத்திற் சாரர வுள்ளவோ
வேனி வற்றி னடந்திலை யென்னெஞ்சே. (௱௭௩)

சித்த சுத்தியைச் சேரின் மறைசொலுந்
தத்து வப்பொரு ளேவலி சாருமே
வித்வ ரன்வரி யாறொடு மேற்படுஞ்
சுத்த மாவரிட் டன்வகை தோன்றுமே. (௱௭௪)

தானவ னெனுந் தற்பதஞ் சார்ந்திலார்
கான கத்தின் வசிப்பினு மென்பயன்
ஆன நற்றுயில் காவிய தாக்கியென்
மோன மாகவாய் மூடினு மென்னையே. (௱௭௫)

திருக்காய் மிஞ்சிற் றிருசியந் தோன்றுமோ
தருக்கஞ் செய்யினு மையந் தணியுமோ
பெருக்கும் பற்றினைப் பேர்த்தெறிந் தேமன
முருக்க வேபர வொண்ணிதி தோன்றுமே. (௱௭௬)

மந்தி ரகலை மார்க்கமு மற்றுள
தந்தி ரகலைச் சார்புந் தவிர்ந்துமேற்
சந்தி ரன்புனை சம்புவை நாடினு
லந்த நத்தோ ரருந்தமு தெய்துமே. (௱௭௭)

என்னை யிங்கிருத் தல்பொய் யிறத்தன்மெய்
பொன்னைப் பெண்ணைப் புவியினைப் போற்றியென்
றன்னைப் போற்றிற் றினியனு மாகுமே
பின்னைப் போற்றுவ தென்னுள பேசினே. (௱௭௮)

ஆசைக் குத்தாச னானவன் பார்க்கெலா
மாசின் னல்லடி யானென வாய்ப்பனாற்
றாசை நீக்கித் துறவறம் பேணின்மா
பூசை செய்தவ னைச்சகம் போற்றுமே. (௱௭௯)

நெஞ்ச மேசொக்க லிங்க னிணையடிக்
கஞ்ச மாமல ரென்றுங் கருதுபு
தஞ்சமென் றடையிற் சனனங் கெடுத்
தஞ்ச லென்னு மபய மளிப்பனே. (௱௮௰)

அவத்தை யைந்து மறியா துழன்றனை
பவத்தைச் சூடிப் பயனிலி யாயினை
சிவத்தைத் தேடித் தினந்தின மோவிடுந்
தவத்தைச் சூடிற் றனிப்பொரு ளாக்குமே. (௱௮௧)

துரிய தற்பதத் துட்புகி னெல்லையா
யுரிய வத்து முணர்வா யொளிவிடு
மரிய தாயொளி ரன்னிலை நிற்கினேற்
பிரிவில் பேரின்ப மெய்துவை நெஞ்சமே. (௱௮௨)

ஐய மோடு திரிபு மறுத்திலா
யு யுமேலோ ருணர்வ துணர்ந்திலாய்
செய்ய சிற்சுகஞ் சேர நினைந்திலாய்
வெய்ய மாநர கெய்தி விழிப்பையே. (௱௮௩)

ஏதுக் கிங்கே யிருமாந் திருந்துபல்
வாதஞ் செய்து வழக்கிட் டுழன்றனை
ஏத மேதரு மென்னதி யானெனும்
பேதந் தீர்க்கிற் பிரமமு மாவையே. (௱௮௪)

வாசி தன்னை யடக்கி வருந்தினு
நாசி யின்னுனி நாட்டத் திருக்கினு
மாசில் வத்துவே தானென வாய்த்திலார்
பேசும் பின்னமுற் றேபசு வாவரே. (௱௮௫)

கட்டப் பட்டுக் கனபொரு டேடினும்
வட்ட மாமுலை மங்கையர் தேடினு
மட்டில் பூமி வளனுடன் றேடினுந்
திட்ட மான பரந்தெளி வாகுமோ. (௬அ௬)

சுத்தர் போலவே தொன்னூ றுலக்கியென்
பத்தர் போற்பல வேடமும் பண்ணியென்
சத்த சத்துச் சதசத்த தாயொளிர்
நித்த வத்து நிலைதெரு நிற்கினே. (௬அ௭)

என்பொல் லாமணி யாயொளி ரீசனை
அன்பி னோடு மகத்திற் றரித்தியேல்
வன்பெறு மெம னுன்னை யுளம்வையான்
றுன்ப மற்ற சுகக்கடல் சூழுமே. (௬அ௮)

பெட்ட மங்கையர் பேரின் பமீவரோ
நட்ட பொன்னுநன் முத்தி தருவதோ
வட்ட மாமதி சூடியை மன்னினு
திட்ட மானவெ வையும்வந் தெய்துமே. (௬அ௯)

வேத மோதிலன் வேதாந் தமோதிலன்
வாதம் பேசி வலித்துண் டுவாழ்கிலென்
காதனீத் துச்சொக் கலிங்கன் குருளூறிற்
சாத னீக்கித் தனிப்பொரு ளாவையே. (௬௯௰)

வேறு.

சிறியதோ ருருவின னெனினுந் தெள்ளிதா
மறிவினிற் பெரியவ னாயின் மேலனாஞ்
செறியுமூப் பொடுநரை திரைகூ டெய்திச்சற்
றறிவில னாயின னவன்சி றுருமாம். (௬௯௧)

எக்குல முதித்தவ னெனினும் வத்துவைச்
சிக்கற வுணர்ந்தவன் செப்பு மேற்குலன்
மைக்கருங் கடனிகர் மருளி னெய்துவோன்
மிக்கவ னாயினு மிகவுங் கீழ்மையே. (௬௯௨)

மெய்ப்பொரு ளொன்றினை மேவு ருதிகத்
தெப்பொரு ளெய்தினு வறிஞ னென்பரே
பொற்பண மெய்தில னெனினும் போதத்தை
யைப்பெனக் கொள்ளுவோன் வறுமை தீர்ந்துளோன். (௱௬௩)

பொய்படு முலகினைப் பொருந்திப் பொன்மனை
தய்யலர் தருஞ்சுகஞ் சாலுந் துன்பமே
மெய்படும் பரநிலை மேவி நிற்றலைத்
துய்யமே தாவியர் சொல்வ ரின்பமே. (௱௬௪)

அறுசுவை பாலன மடைய வுண்ணினும்
வெறுமைய னுண்டில னாக மேவுவான்
சிறுகனி காயிலை தின்று சிற்சுகம்
பெறுபவ னியாவையும் பொசித்த பெற்றியான். (௱௬(

தின்முறை மித்திக மாகச் சென்றுபல்
சுனைநதி மூழ்கினுந் தூய்மை யாகுமோ
மனம்பர வெளியினின் மாழ்கி நிற்றலே
புனிதர்க டேய்மையாய்ப் புகலு வார்களே. (௱௬௬)

கரணமிந் தியமுதற் கதுவி டாதுசிற்
புரணமாய் நிற்றலே புகலா சாரமா
மரணமீ யன்னதை மருவி யானென்றே
கிரணமற் றொளிர்வதற் கெதிர தாகுமே. (௱௬௭)

சித்தினை யுணர்ந்ததாய்த் தெளிந்தத் துவைதமாய்
நித்தமு மன்னலே யசங்க னென்பராற்
பத்தொடு மேழதாய்ப் பகரு மிந்தியத்
துற்றபி மானித்தல் சங்கன் சொல்லினே. (௱௬௮)

சத்துவம் ராசதந் தமந் தவிர்ந்துமேற்
சுத்தசித் தாயொளிர் வதுசு குணமா
மித்தைவிட் டெக்குண மெய்தி னுமம
சுத்தமென் றறிஞர்கள் சொல்லு வார்களே. (௱௬௯

இந்தியங் கரணங்க ளியற்று மியாதனை
வந்தடை யினும்பர மாதல் சாந்தமா
மிந்தகற் குணங்களை யெளியற் கீந்துமுன்
சொந்தனென் றுண்டுகொள் சொக்க லிங்கமே. (உ௱)

வேறு

மக்க ளென்பவர் வாளறி வுள்ளவர்
குக்க லென்பன கோபக் குணத்தினர்
கக்க லென்பன கைவிடு மத்தமாஞ்
சொக்க மென்பது சிற்சுகந் துன்னலே. (உ௱க)

விருத்த னாகிநன் மெய்கனி வெய்தினுங்
கருத்து மவ்வணமே கனிவெய் துமோ
பருத்த வெவ்வனத் தேபரம் பற்றினாற்
கருத்த னுங்கருந் தைக்கனி செய்யுமே. (உ௱உ)

அகில மண்ட மெனவனு வாகுவா
னிகில மோவனு வென்ன நிகழ்வான்
பகிர் முகத்தினு முள்ளும் பரவுவான்
புகினு ரைக்கப்போ மோபரன் பூதியே. (உ௱௩

முகக்கண் கொண்டு விழிக்கின்ற மூடனேற்
ககக்கண் ணீய வரியமோ வண்ணலே
சகக்குண் முப்புரங் காமன் சமன்முத
னகைத்து நோக்கி யுதைத்தவெம் மன்பனே. (உ௱௪

மோக சாகர முற்றும் வறழவுஞ்
சோக நீக்கித் துரியத்திற் றோயவு
நாகர் கோயி னடித்த நலத்தவா
பாக மோடு பணித்தருள் செய்வையே. (உ௱௫

ஊண லாடை யுடுத்தறு மிறன்மெய்
பேண லாதியிற் பேசரும் பெம்மகிற்
காணக் கண்ணில னாயினுங் காண்டியான்
மாண தாகிய நன்னிலை வாய்க்குமே. (உ௱௬

திண்ணக் கூட்டினைச் சேமித் திருக்கினும்
வண்ணப் பூரண வத்துவந் தெய்துமோ
வெண்ண மெல்லா யமிக்கும் பிரானடி
நண்ணி னல்லருள் சேருநன் னெஞ்சமே. (உ௱எ)

ஓடும் பொன்னையு மொன்றெனக் காண்குனர்
மாடு சென்றவர் வாய்மொழி பேணியிக்
கூடு சிந்தைவா யொன்றிக் குறிப்பையேற்
றேடு முத்தியுங் கையினிற் சிக்குமே. (உ௱அ)

இச்சை காட்டி யிழுப்பரே காமத்திற்
கச்சி றுக்குங் கனதன மாதரார்
மச்சம் விட்டிவிச் சைகொடு மாய்ந்தன
நச்ச ணிந்தவன் பாதமே நண்ணிடே. (உ௱கூ)

அன்னை யப்ப னருந்துணை யாயநீ
யென்னை யிங்ங னிடருறச் செய்யினுந்
தன்னைத் தந்துநற் றுண்மல ரீயினு
மென்னை செய்யினுஞ் செய்கசொக் கேசனே. (உ௱ய)

பிச்சை யேற்பவர் போற்றவர் பெண்களை
யிச்சை கொள்ள விசைவித்த வீசனே
பொச்ச வெண்மன நின்னடிப் போதினை
நச்ச வைப்ப தருமையோ நம்பனே. (உகக)

சகம னைத்துஞ் சந் தாகத் தெளிந்திலாய்
சுகமுந் துக்கமுந் தோன்றிட மோர்ந்திலா
மிக வுறவு மிதுவென வெண்ணிலா
யகமே யெவ்வண மும்மை யறைதியே. (உகஉ)

ஆருஞ் சீவ னகந்தையை நீங்கிமேற்
றீருங் கூடத்த னுய்த்தனைத் தேறினுற்
பாரு நீரும் பரந்த பரமமாய்ப்
பேருமூ ரும்போய்ப் பேரின்பம் பேணுமே. (உகங)

அய்ய விந்த வறிவறி யாமையாற்
பொய்ய னாகிப் புலம்பித் தவித்தனன்
செய்ய நின்செய றேறித் தெளிந்தில
னுய்யு மார்க்க முரைத்தினி யாட்கொளே. (௨௧௪)

கய்யி லாமல கக்கனி யாமெயொளிர்
மெய்யி னைநினைந் தேசிக னீங்கினன்
வய்யத் தாசைவ விந்துபற் றுதெனைத்
துய்ய னாக்கித் துரியத்திற் சேர்ப்பையே. (௨௧௫)

வட்ட மாமுலை மாதரார் யோனியிற்
கட்டுப் பட்டுக் கழிந்தது போதுமே
துட்ட னாயினுஞ் சோறாட் டனைநிக
ரெட்டொணா விறையே யெனையாட் கொளே. (௨௧௬)

துரிய நாதனே சூழ்வினை தீர்த்துளை
கரிய தாய்முற்றுங் காட்டி யருளியு
மரிய னென்று மவற்காண வேட்கையாய்த்
தெரிய வோசுட்டி நோக்கினை செப்பிடே. (௨௧௭)

வறியரைத் துயர்செய் தன்மா பாவமென்
றறிவுறப் பழ நூலை யறைந்தனை
செறியும் ஞானந் தெளிபொரு ளொன்றிலாக்
குறிய வேழையைத் துன்பித்தல் கூடுமோ. (௨௧௮)

கால மூன்றுங் கடந்தனை யர்தலிற்
பால னாயுளும் பார்வைக்குத் தோன்றுறு
மூல மாக முழுதுணர் ஞானத்தைச்
சீலமாகத் தெரித்திலை போலுமே. (௨௧௯)

பஞ்ச கோசத்தைப் பற்றி வருமினோர்
துஞ்சுங் காலுணர் சோர்வுறச் சூழ்ந்ததே
பஞ்சு தீயிடைப் பட்டபோற் சொக்கனே
கொஞ்ச மேனு மிலாது குறைப்பையே. (௨௨௰)

மனிதர்க் கஞ்சினன் மாக்களுக் கஞ்சினன்
றனிகர்க் கஞ்சினன் சார்களர்க் கஞ்சினன்
றுனிகர்க் கஞ்சினன் றுற்சனர்க் கஞ்சினன்
புனித கண்டில னஞ்சிலே பொய்யனே. (உஉ௧)

அன்னைக் கஞ்சின னப்பனுக் கஞ்சினன்
பின்னை யாண்டிற் பெரியருக் கஞ்சினன்
மன்னற் கஞ்சினன் வாத்திமைக் கஞ்சின
னென்னை யெத்துணைக் கஞ்சுவ னீசனே. (உஉஉ)

பந்த மற்றவர் நோக்கிற்பார் கண்டிடாப்
பந்த முற்றவர் பார்க்கிற்சித் தோர்வுறு
விந்த வாறிரு வர்க்கு மிலங்கிறு
லெந்த வாறுனை நிண்ணய மெய்துவேன். (உஉ௩)

அந்த மாதியில் லாதவென் னண்ணலே
யெந்த நாளினி னிற்பிரிந்தே னியான்
பந்தந் தோன்றின தெந்தநாள் பன்னவுஞ்
சிந்தை யானிவை தேறவுங் கூடுமோ. (உஉ௪)

பூத வின்வினை யன்றுதொட் டின்றள
வேத முற்ற வெனையுவந் தெய்துமேற்
பாத கத்தொகை பன்னவுங் கூடுமோ
நாத வெவ்வண நான்சுசி யாகுவேன். (உஉ௫)

ஆத வற்கிருட் கூட்ட மகல்வபோற்
பாத கம்மள வின்றிப் பருக்கினு
நாத நின்னொளி முன்னெது நாசமாம்
வேத நீயறி யாததோ விள்ளினே. (உஉ௬)

துன்பந் துய்க்கினே யின்பமுந் தோன்றுமென்
றென்ப ணிந்த விறைவசிந் திக்தையோ
வன்பி லேனடை யாற்றற் கருந்துயர்
மூன்போ காதென் மொழிந்தருண் மூலமே. (உஉ௭)

அன்பு வைத்துழி யல்லவு நல்லவாம்
வன்பு வைத்துழி நல்லவு மல்லவா
மென்ப வன்றேவிவ் வையத் தியற்கையே
யின்ப நல்லருள் வைத்தெனை யாட்கொளே. (௨௨௮)

தெருளி லேன்செய்த தீவினை யென்னும்வல்
லிருளை நீங்கிடு மென்னுள் ளிலங்கிறு
லருள னேயண்ண லேமறை யந்தமே
வெருள லென்றெனை யாட்கொள வேண்டுமே. (௨௨௯)

மாசி னன்மணி யாயினும் வாணிபர்
தூசி னுற்றுடைத் தேதினம் போற்றுவார்
பேசு மென்மன நன்கு பிறங்கினுங்
காசை மாற்றிக கழல்சேர் சொக்கேசனே. (௨௩௰)

குற்றஞ் செய்தவ ருங்குறை தீர்ந்தனர்
மற்று மென்பிழை மாற்றற் கரிதரோ
வத்த வென்னை யருட்கணு ணோக்குறிற்
சுத்த னுய்நின் றுணையடி சோவனே. (௨௩௧)

அன்ன மின்ப மளிப்பன வாயினும்
பின்ன மெய்திற் பெருந்துய ரீவபோ
லுன்னு சீவனும் வேறதா யுற்றிடின்
மன்னு மின்னலே வந்தெய்து நெஞ்சமே. (௨௩௨)

பாடி னார்கள் பரமனைப் பார்த்தனர்
தேடி னார்களோ வின்னந் தெரிந்திலர்
நாடிற் பாட லலமெனத் தேர்ந்தியான்
பீடில் புன்கவி பேசின னுட்கொளே. (௨௩௩)

இருணை சித்தற் கியன்ற வடிவென
வருணன் போன்றொளிர் மேனிய தாயநின்
கருணைக் கென்னைகைம் மாறுளன் கால்வழி
வருபவ ரொடுந் தொண்டென வாய்ப்பனே. (௨௩௪)

ஒருப தத்தினை யூனற முயலகன்
பருமு துகுகொ டுத்தனன் பாருறு
தருப்ப தந்தூக்கி யாடினை நோவுமேற்
கரும னேன்சிர மூன்றிக்கா லாறிடே. (௨௩

நறும லர்க்குழ னங்கைபங் காளனே
முறுவ லித்தனை முப்புர நீறின
சிறுக நோக்கினை காமனுந் தீய்ந்தனன்
வறியன் புன்மன மாயக்க வரியதோ. (௨௩௬)

வாதம் பேசி மயங்கிப் பலபல
பேத வாதியர் பின்னம தெய்தினர்
போதக் கண்கொடு பூன்றமாய் நோக்கினாற்
கோதொ ழிந்துசங் கோசமுந் தீருமே. (௨௩௭)

பந்த பாசம் படுமல கியாவையும்
வெந்த வத்திர நியாயமாய் மேற்கொளீ
யந்த மாதி யகன்றகல் சித்ததா
வெந்த நாளி விலக்குவை யையனே. (௨௩௮)

வெண்ணை தீயிடை வீழ்வபோன் றுள்ளத்தார்
பெண்ணைப் பாதியில் வைத்தவற் பேணியே
கண்ணை மூடி விழிக்கினுங் காண்பெரு
மண்ணைநீத் தெங்குந் தானாய் வளைவரே. (௨௩௯)

வேத நாத விமலசொக் கேசனே
யாதி யான்மிக யாதிமுத் தாபமும்
வேதிக் கின்றன னாற்றிலன் மீளியெப்
போதென் றார்க்கிறான் புக்கிட மில்லையே. (௨௪௰)

வேறு.

துனிவா யொருதுன் னெறிசெய் துமிரேன்
றனியே னொருநுண் ணுயிர்தா னலவோ
வினியா யினுமென் மனநின் றிளகப்
பனிமா மலர்மென் பதமீ குவையே. (௨௪௧)

பொருடேர் வழிபுக் கினன்பூங் கழலா
யருடேர் வழியன் பினளித் திடெனி
னிருடேர் வழியென் றனையீர்த் தல்செயா
தெருடேர் வழியே வலிவந் திடுமே. (உசஉ)

மிகவா கியவெவ் வினைசெய் தனனோ
வுகவா வுனதுள் ளமுவப் புறுமோ
தகவா தகவல் லதுசாற் றியெனைச்
சுகவா ரிதிலாந் துபுதுன் னுவையே. (உசா)

படிமீ துயர்நூல் கள்படித் தறியேன்
மடிகா மமயக் கமுடன் றியொரு
வடிவா யினனுய வகையொன் றுளதோ
வடிகே ளடிதந் தெனையாண் டருளே. (உசச)

சகமே பொருளென் றுதயங் கினனெ
மிகமே வியவல் வினைமீக் கொளலா
விகமே வருசென் மமெடா விதஞ்சிற்
சுகமே யருளீ தில்பெருஞ் சுடரே. (உசரு)

மலமோ வொருமூன் றுமறு மையினாற்
புலமோ சிறிதும் மிலனே புனிதா
பலமோ வருநா ளுளவோ பகராய்
நலமோர்ந் திடஞா னமுநல் குவையே. (உசசா)

புகலில் லகங்கா ரமும்பொங் கியெழுந்
தகமென் றனவல் லவையத் தனையும்
[illegible]செய் குவர்நல் லறிஞர் கடுவெண்
புகவெள் கினன்பொன் னடிசேர் பொருளே. (உசஎ)

இருளா மூடம் பினையெய் தியதைப்
பொருளா மெனும்புத் திபுகுந் ததனுன்
வெருளெய் தினன்விண் மணியைத் தமசாய்
மருள்கூ கையையொத் தனன்வாழ் வருளே. (உசஅ)

மனமா யையேவன் றிறன்மா யையதாம்
கனவா தியொழிக் கினசித் திடுஞ்சிற்
கனமா கிலைகை வருமிக் கதியிற்
சனகா தியர்வாழ்ந் தனர்தா னறியே. (உசகூ)

தொழுமா தவர்துன் னியுறங் கினரே
யெழுமேழ் புவியென் னுநிலத் தினிடை
பழுவா யினுமன் னிலையே பகர்ந்தே
நழுவா துசொக்கே யெனோநாட் டுவையே. (உருய)

வேறு.

நாடி நாடியென் னாட்கள் கழிந்தன
வோடி யோடியுள் ளங்கால்க டேய்ந்தன
வாடி வாடி யுடலும் வறழ்ந்தன
கோடி கோடிகற் றுமுனைக் கூடிலேன். (உருக)

எண்ண நீத்த விடத்தொளி ரீசனைக்
கண்ணு ளாரு மிலாருமுட் காண்பரே
மண்ணைத் தோண்டியும் வானிற் பறந்தும்பார்த்
தண்ணல் சேவடி யண்டிலர் நெஞ்சமே. (உருஉ)

ஞயதத் துச்சியின் மின்னுதற் சாட்சியே
பாதஞ் சூட்டிப் பரசுக மீயின்முக்
காத லோடு களைகள் கழன்றுமா
வேதனைத் துயரும் வெளி யேகுமே. (உருங)

மறைகள் விண்ணவர் மற்றையர் நித்தமு
மிறைவனே யென்று யேத்தித் தொழுதெழும்
பிறைதரித் தவன் பிஞ்ஞக னயினுங்
குறைத விர்ப்பன் குரைகழல் கும்பிடே. (உருச)

சித்தஞ் செல்லொணுச் செல்வனுய் நின்றவன்
சுத்தர் கூடி வளையவுந் தோன்றினன்
பத்த ரோவகப் பார்வையாற் பின்னியே
சித்தத் தேசிறை செய்தனர் தேர்வையே. (உருரு)

அன்னை யுமமு தூட்டிவ ளர்ப்பபோ
லுன்னை யுமுணர் வூட்டிவ ளர்ப்பனே
மின்னை யோர்பங்கில் வைத்தவன் மெய்யடி
தன்னை யெய்திச் சலிப்பற நிற்கினே. (உருசு)

கண்ட தெல்லாங் கழற்றிற் பெயருருப்
பண்டு மின்றுமி லாப்பரந் தோன்றுமே
பண்டங் காணி மனைசுதர் பண்ணையென்
பெண்டி ரென்னவும் பின்னலை நெஞ்சமே. (உருஎ)

பித்த னென்றுல கம்பேசினுங் கொளா
யத்த னுக்குமந் நாம மறைவதாற்
சுத்த நெஞ்சின னாகித் துவிதம்போய்ச்
சித்தோ டைக்கிய மாய்ச்சுகஞ் சேர்வையே. (உருஅ)

வார்த்தை பேசினும் வன்குற்றஞ் சேருமே
பாத்துப் பாண்டத்தின் பற்றைத்து றந்தொழி
பார்த்தன் வில்லடி பட்ட பரமனை
யேத்தி னெவ்வுல குக்கிறை யாவையே. (உருகூ)

பாவனை விட்டறி வாகப் பார்ப்பையே
லாவி யுஞ்சொக்க னேடிரண் டற்றுமேற்
றாவி யத்துவி தத்தினைச் சார்ந்திவ
னோவி யம்போன் றொளிர் வையீ துண்மையே. (உசூய)

பற்ப லபயின் றென்ன பயனுறு
மற்ப ருமறி வாரோ வதன்பொருள்
விற்ப னர்தரு மேலவர் கூட்டஞ்சேர்ந்
தொப்ப நிற்கி னுணர்வு பெருக்குமே. (உசூக)

வேத னாத விமலவென் றேதின
மோத வோத வவனுருக் காணுமே
பாத தாமரை பற்றி யுளமிகக்
காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கே. (உசூஉ)

பேத மாகப் பிதற்றுபொய்ப் பேதையைக்
கோத டையுங் கனவினுங் கொண்டிடாய்
வேத நான்கை யுணர்ந்தநன் மேலவர்க்
காதர வினவர் பணிசெய் வையே. (உசுங)

குற்ற நெஞ்சினர் கோதறு வார்களோ
மற்ற நெஞ்சினர் மாயையை வெல்லுவார்
செற்ற மார்வஞ் சினமுத னீக்கினீர்
கற்றைச் செஞ்சடை யானடி காண்பையே. (உசுச)

புத்தி யாய்ச்சிவன் பொன்னடி போற்றினன்
முத்தி சித்தி முழுவதும் வாய்க்குமே
வித்தி னுள்ளே விருக்க மிருப்பபோற்
சத்தி னுள்ளே யனைத்துந் தயங்குமே. (உசுரு)

ஞானவா னத்தை நாடி யுறங்குவோர்
தானா வனெனுந் தன்மை பெறுவரே
மோன மெய்தி யிரண்டென மூன்றுவோ
ரூன முற்றே யுறும்பொரு டெய்ப்பரே. (உசுசு)

விழைத லோடரன் மெல்லடி நம்பியே
பிழைகள் செய்யினும் பெம்மான் பொறுப்பனே
கழைவிற் காமன்பூ வோடு கரிந்ததும்
பழைய ரன்பொடு செய்ததும் பார்ப்பையே. (உசுஎ)

ஆழி போன்றவெண் ணெண்கலை யாவுமே
வாழி யென்று வணங்கித் துதிப்பன
வூழி செல்லினு மொல்லையுஞ் சென்றிடாப்
பாழி மன்னும் பரமதாய் நிற்கினே. (உசுஅ)

சார மற்ற மனத்தவர் சார்வரோ
தூர முற்றசொ ரூபத்தி னுண்மையை
யீர முற்றெந்த கோரமு மெண்ணினற்
பார மற்றுப் பரம்வெளி யாகுமே. (உசுகு)

கன்று முள்ளத்தர் தேடியுங் காணொ
தன்று மின்று மொருபடித் தாயொளிர்
துன்றுஞ் சொக்கலிங் கன்பதஞ் சூடினாற்
பொன்ற றோன்றற் பொருந்துத னீங்குமே. (உஎ௰)

தான முந்தவ முஞ்செய வேண்டுமோ
வூனக் கண்ணழித் துட்கணி னோக்கினால்
ஞான வானெய்து நாளுமதி னிற்கின்
வானு மண்ணும் வழிபடு முன்னையே. (உஎக)

அகில முற்றுநன் காண்டனே யாயினு
நிகில பேதங்க ணீங்குமோ நெஞ்சமே
பகிர் முகத்தினும் பன்னுண் முகத்தினுஞ்
சுகிய தாயுடற் சோதிக்கி னீங்குமே. (உஎஉ)

கண்ண தென்பன கண்ணுதற் காண்பன
மண்ண தென்பன சூரியம் வாழ்வன
புண்ண தென்பன பொய்யுடல் கொள்வன
விண்ண தென்பன சித்தாய் விளங்கலே. (உஎங)

ஆர ணங்க ளறிவரு மண்ணலின்
பூர ணத்திற் புகுந்தவ னோக்கினெக்
கார ணத்தொடு காரியம் வேறிலா
தேர ணத்தோ டிலங்கு மெளிதினே (உஎச)

ஆய்த லிற்ற வறிவினு லிங்ஙனே
நாயி னுங்கடை யாயின னுண்டையே
பேய் பிடிக்கினுந் தீரும் பிறப்பெனு
நோய்த ணிக்கு மருந்து நுவன்றிடே. (உஎரு)

மந்தி ரத்தினன் மாயை தணியுமோ
வெந்தி ரத்தி னினிவரா நிற்குமோ
தந்தி ரத்திற் றடுக்க முடியுமோ
சிந்தை கெட்டுச் சிவமா யினேகுமே. (உஎசு)

துட்ட மார்க்கத்திற் றுன்னல் விடுத்தினிச்
சிட்ட ஞகிச் சிவரூப மெய்திஞ
னட்ட மாகு நலிதரு மியாவுமே
மட்டு ருத பெருஞ்சுகம் வாய்க்குமே. (உஎஎ)

முட்டுப் பட்ட முலையார் மருங்குலிற்
கட்டுப் பட்டுக் களிக்குமென் னெஞ்சமே
வட்ட மாமதி சூடு மரன்கழ
லொட்டி நிற்கி னுயர்கதி கூடுமே. (உஎஅ)

கட்டும் பாசக் கயிறுடைக் காலனே.
மட்டு ருமன மாய்க்கவும் வல்லையோ
கட்டை தள்ளிக் கொடுபோயி னுங்கையை
விட்டெங் கேகினை விள்ளெனக் கித்தையே. (உஎகூ)

கனவிற் றோன்றுங் கனபொருண் முற்றுமே
நனவி னீங்குமத் தன்மையி னற்பொய்யாம்
நினையி னிச்சக நித்தம்போற் றோன்றினும்
டினையுஞ் சொக்கன் மொழியிற்பொய் யாகுமே. (உஅ0)

மூட நெஞ்சமே மூர்க்கர் தொடர்பினல்
ஈடின் மெய்யறி வந்துனக் கெய்துமோ
பீடு சார்ந்தவர் பின்பற்றிச் செல்வையேற்
றேட ருமுணர் வேவலி சேருமே. (உஅக)

சுத்த மேனியாய்த் தோன்றுங் குருவிடை
பொத்தை யூனுட லாவி பொருளையுந்
தத்தஞ் செய்துபு சன்மய மெய்திமேன்
முத்த னுயுயர் மோனத் திருப்பையே. (உஅஉ)

மய்ய லொன்றற விர்நிலை வாய்க்குமேற்
றுய்யதா முத்தி துன்னுமீ தன்றியே
செய்ய வெக்கன்ம மாற்றினுஞ் சித்தியா
வெய்ய நெஞ்சமே வீங்கிரு ணீங்கிடே. (உஅ௩)

வண்டு மொய்த்த மருமலர் சாத்துபு
வண்ட வாண னடியிணைக் கன்புசெய்
பண்டு தொட்டுப் பிறந்துண்டு பாவையர்
தொண்டி யற்றிச் சுழன்றது போதுமே. (௨அ௪)

சிந்தை மாசறச் செய்திலை கான்றருங்
கந்த மூலங் கனிகளைத் தின்றுமென்
பந்த பாசம் பறிக்கும் பரமனை
யந்தமில் லறிவா லறிந்துய் வையே. (௨அ௫)

வஞ்ச நெஞ்சினர் மாதர் வலைக்குளாய்ப்
பஞ்சின் மெல்லடி பைங்கிளி மஞ்ஞையே
மஞ்சு வண்டனம் வாய்மொழி சாயலாம்
விஞ்சையாற் கூந்தல் கண்ணடை வின்வரே (௨அ௬)

ஆக்கை யோநிலை யல்ல வதைமிகக்
காக்கு மத்தமுங் கட்டு மனைகளும்
பூக்கு மூன்மட வார்பொற் பணிகளுந்
தூக்கினை நிலையோ சொல்லென் னெஞ்சமே. (௨அ௭)

ஊர்நி லையல வுற்றார் நிலையலப்
பேர்நி லையலப் பெற்றார் நிலையலச்
சீர்நி லையலச் சேய்க ணிலையல
வேர்நி லையல விசனி லையதே. (௨அ௮)

வயனி லையல மாடு நிலையலச்
செயனி லையலச் சேர்ந்தார் நிலையலப்
புயனி லையலப் போக நிலையல
வயனி லையல வண்ணனி லையதே. (௨அ௯)

வாட்ட மற்ற மனங்கெடின் வெண்டலை
யோட்டி லேபலி கொள்பவ னெண்கழல்
காட்டி ஞானமுங் கையினளித் துமேல்
வீட்டி னும்புகு விப்பன்சொக் கேசனே. (௨௯௰)

வேறு.

குறையா நிறையாப் பொருளே கொணர்வே
னறையா வெனைநீத் தவனெங் குளனே
கறையார் மருளாற் கலுழ்ந்தே னுணர்வீர்
சிறையார் குயிலே தெரிப்பீ ரெனக்கே. (உ௬௧)

அனமே யருளா னறிவே கொடுபாழ்
மனமாய் வகையீந் தவனீங் குளனோ
கனவோ பலவாய்க் கனூறங் கிலையே
யினமோர்ந் திலனே யிசைப்பா யெனக்கே. (உ௬உ)

நறையார் பொழிலே நனுமியா னெனதென்
குறையான் மருளே குடியே றினவே
மறைவா கினனே மறவா நினையாத்
துறையே யளித்தா னுணரிற் சொலுமே. (உ௬௩)

உருவே கொளுநான் முதலா யொருசாண்
பெருகா வயிறேய் பசிநோய் பிணித்தே
கருகா வுழன்றேன் கடைநோக் கினனைக்
குருகே யுணர்ந்தா லுரையாய் குறித்தே. (உ௬௪)

இம்மா னிலமே யெளியேன் மயலாய்ச்
சும்மா விருக்கை துறந்தே யலைந்தேன்
கைம்மா றடையாக் கழலீந் தனன்முன்
னும்மாட் டுறினே நுவல்வீ ரெனக்கே. (உ௬

பழியார் வினையே பரமோர் தலுறு
திழிவா யினனே யெனினு மெனையாள்
விழியான் பிரிவாற் றிலனே விளம்பா
யொழியா தவனே குழையே யுணர்ந்தே. (உ௬௬)

மலையே தினமே மனமாய் வுறினு
நிலையா வெறுஞ்சூ னியமே யடைந்தே
யலைவா கினனே யெனையா தரித்தா
னிலையே யறிந்தா லுரையீ ரெனக்கே. (உ௬௭)

பொறியே மனமே புகர்சே ரனூரே
சிறியே னுடுதோன் றினிரே தெரிவீ
ரறிவே யறியா தலேந்தே னிரங்கிச்
சிறிதே யகல்வீர் தெளிவே பெறவே. (உகூஅ)

துணையா ளூறவே சுதனே யயனுய்
திணையே முதலாத் துறந்தே செகமீ
திணையே துமிலா விறைவா நினையே
புணையாய்த் தொடர்ந்தேற் கொருசொற் புகலே. (உகூகூ)

நனவோ பெரிதா நலிவீர் தனவே
கனவோ மிகவாங் கவறந் தனவா
லனகா விவையொன் றினிலொன் றறியா
நினைவா யினுஞ்சொக் கேநீத் தருளே. (நா)

வேறு.

எம்பி ரானே யிறையவ நின்கழ
னம்பி னேனினி யாருளர் நாயகா
வம்பி லேமனம் வாதித்து மாதரார்
கும்பிக் கேயெனைக் குப்புறச் செய்ததே. (நாக)

தந்தை தாய ரிலாத்தனிச் சேயினைப்
பந்து வாய்ப்பல ருநனி பார்ப்பரே
யெந்தை கைவிடி னியாவரே காத்துளா
ரந்த மாதி யிலாதொளி ரத்தனே. (நாஉ)

நீதி யாவன யாவு நினைத்திலே
யோதி யோதி யுணர்வு முணர்ந்திலே
யூதி யமென வுள்ளத்து ளூன்றிலே
பாதிப் பெண்ணுரு வாய பரனையே. (நாந)

கூடு விட்டுயிர் கூற்றன் கொளுமுனே
பாடு பட்டுப் பரனருள் கூடுவாய்
தேடு செம்பொனுஞ் செத்தபின் கூடவே
யோடி வந்தங் குதவியுஞ் செய்யுமோ. (நாச)

பாடு கின்றிலை பார்வதி பாகனைத்
தேடு கின்றிலை தேவர்க்குத் தேவனை
நாடு கின்றிலை ஞான நெறியினை
யீடு ளக்கிலை யிவ்வுல கின்கணே. (நு௱ரு)

பொக்கம் பேசிப் பொழுதினை போக்கினல்
விக்குளை யும்பித் துந்தடை மீறியித்
தொக்கினைத் தொலையத் துறவீ யுங்கா
ளக்க னேயெனி னன்முத்தி வாய்க்குமோ. (நு௱சா)

பெண்டு பிள்ளையென் பேய்க்கணங் கூடினன்
மண்டை யுள்ளளவு மருணீங் குமோ
வண்டு பாடும் வளர்சடை யண்ணலின்
றொண்டர் கூடிற் சுகமெய் தலுண்மையே. (நு௱எ)

கெண்டைக் கண்ணியர் கண்வலை கீழ்ன
ரண்டை சென்று மருட்டுமே தன்றியே
துண்ட மாமதி யண்ணலின் றொண்டரைக்
கண்டென் செய்யுங் கழறுவை யுள்ளமே. (நு௱அ)

வார்த்தைபேசித்தன் வாணாள் கழிப்பரைக்
கோர்த்துக் கோர்த்து நரகிற் குவிப்பரே
யார்த்தன் சொற்கொண் டரனை நினைப்பரைச்
சேர்த்துச் சேர்த்துச் சிவானந்தம் வார்ப்பரே. (நு௱கூ)

சத்த னுவான் சுடரினை நோக்குவான்
மத்த னுவான் மமதையுள் ளாழுவான்
பித்த னுவான் பிவஞ்சத் துழலுவான்
சொத்தை யேனையு மாட்கொள் சொக்கேசனே. (நு௱ம)

குருதிக் காட்டிடை கொள்ளும் பிணத்தினைக்
கருதி யானெனக் காலங்கள் போக்குதல்
சுருதிக் கொவ்வுமோ தொன்முனி வோர்சொலு
மிருதிக் கொவ்வுமோ விள்ளென துள்ளமே. (நு௱கக)

கரண மைம்பொறி காயங் கழற்றுமென்
மரண வேதனை மற்றோ ரறிவரோ
புரண னுக்கும திற்பொன்று வோனுக்கு
கிரண யத்தின் வெளிப்படு நெஞ்சமே. (௩௧௨)

யாகஞ் செய்தில னியாசகர்க் கீந்திலன்
யோகஞ் செய்தில னுத்தமற் சேர்ந்திலன்
பாகம் பார்வதிக் கீந்த பரமனே
தேகந் தானெனத் தேர்ந்தனன் காப்பையே. (௩௧௩)

காழி யுண்டொரு நான்முழஞ் சுற்றிமெய்
பாழி லேபல காற்றிரிந் தெய்த்ததென்
னூழி ஞானோ வுணர்வி னிலாமையோ
வாழி யென்றொரு வார்த்தை யருளையே. (௩௧௪)

வேளை தோறும் விவிதமா யுன்னுதே
நாளை நாளை யெனவு நழுவுதே
காளை யாம்பரு வத்துங் கனிவிலேன்
றாளை யேதந்து தற்காக்க வேண்டுமே. (௩௧௫)

சங்கஞ் சார்ந்திடிற் றர்க்கமே வந்திடுங்
கங்குல் சார்ந்திடிற் கத்த னிலையெனுந்
துங்கர் சார்ந்திடிற் சுத்தமு மெய்திமே
லங்க ணாயகன் றன்னரு ளண்ணுமே. (௩௧௬)

ஆடல் செய்தனை யாருயி ருள்ளத்தே
மூடல் செய்தனை மூர்க்கர் மனத்தையே
தேட வெட்டிலை சுட்டித்தெ ளிநர்க்கே
நாட வொட்டிலை ஞானமில் லேனையே. (௩௧௭)

அளிக்கி னின்னரு ளானெஞ் சழியுமே
தளிர்க்கி லுள்ளத் தருள்வந் தடையுமோ
பழிக்கின் மேலோர் பரசுகங் கிட்டுமோ
விழிக்கி னின்னெதிர் மேவுமோ மாயையே. (௩௧௮)

சோதி நின்னெதிர் துன்னிரு டோன்றுறு
நீதி கொண்டோவென் னெஞ்சிரு டோன்றிலை
யாதி யிம்முறை யாயி னடியவன்
கோதி னன்னிலை யெவ்வணங் கூடுமே. (௩௧௯)

தந்தை யுந்தாயு மான தயாபரா
முந்தை மூழ்வினை முற்கெட மாற்றினுற்
சிந்தை மாசுபோய்ச் சீருறுஞ் சொக்கநின்
கந்த மாமலர்ப் பாதங் கனியுமே. (௩௨௦)

வேட மிட்டுமென் வெண்பொடி பூசியென்
சேடன் றாங்குஞ் செகமுழு துநிறைந்
தாடல் செய்தங் கவற்றை யசைப்பிக்கு
மூட றியின் முழுதுணர் ஞானியே. (௩௨௧)

மறைய நிற்பன் விறகிற்றீ மன்னல்போ
லிறைய நிற்ப னிலமுண ராவணங்
குறைய நிற்பன் குருமனு வுக்குரு
மிறையன் செய்கை யியம்பவு மெட்டுமோ. (௩௨௨)

கண்டு கண்ணுற் களித்தவர் காசேனும்
விண்டிலார் விட்டு மெய்யுணர்ந் தோர்தமை
யண்டினன் மோனத் தாலொன் றறைந்தில
னுண்ட நானுய்யு மாறென் றறைவையே. (௩௨௩)

பத்தி சற்றுமில் பாழ்மன மீவையேற்
செத்துச் செத்துப் பிறக்கினுந் தேர்வனோ
சுத்த நன்மனந் தோற்றினத் தோற்றத்தே
யத்த நின்னடி யன்பி னடைவனே (௩௨௪)

அடுக்க வாயிர மாதித்தர் தோன்றினு
முடக்கு மந்தகன் முன்கண் டறிவனோ
விடக்கை மெய்யென நம்புமுட் கண்ணிலேன்
சடக்குட் டோன்றினுந் தானறிந் துய்வனோ. (௩௨௫)

காற்ற வாக்கையை நானெனு மதத்தினன்
ரேற்ற லாலெவர்க் கேனுஞ் சுகம்தோ
மாற்ற நின்வினைக் கென்னினு மாயுமோ
வேற்ற வாட லெனினீ பெரியையே. (௩௨௬)

சைவ நன்னெறி சாறிற் றவம்வரு
மெய்வ ருந்தச்செய் நோன்பும் விரதமுங்
கைவ ரும்பல கன்மமு மாண்டபின்
றெய்வ முந்தன்னோ டைக்கியஞ் செய்யுமே. (௩௨௭)

ஒன்றென் பார்பல வென்று முரைப்பரா
லன்றென் பார்சில ராமென் றறைகுவார்
நன்றென் பார்சிலர் நாமென நாட்டுவா
ரொன்று மாயையா னேங்கும் பரத்தையே. (௩௨௮)

செய்யு நல்வினை தீவினை யொப்புடன்
பய்ய வேமல மும்பரி பாகமாய்க்
கய்வ ரினரு ளுங்கதி காட்டுமெய்த்
தெய்வ மும்வலி தெய்துமென் னெஞ்சமே. (௩௨௯)

மோக பாசக் கடலுண் முழுகிமா
சோக முண்டுறு கந்தமாஞ் சந்தனந்
தேக முற்று மணிந்து தெரிவையர்
போக மாந்துயில் புக்கினன் சொக்கனே. (௩௩௰)

சத்தே சித்தெனத் தேறிற்றுன் மிஞ்சுமே
சித்தே யானந்த மென்னிற் சிவமதாம்
முத்த ரேயிந்த நிண்ணய மோருவார்
பேத்தர்க் கிந்நிலை பேசவெட் டாததே. (௩௩௧)

விந்தை யாகவே தாந்தம் விளம்பியென்
சந்தை போல்வெகு சங்கங்கள் சேர்ந்துமென்
னந்த மாதி நடுவிறந் தோங்கணல்
சுந்த ரக்கழற் பத்திதுன் னார்களே. (௩௩௨)

இச்சை யற்று ளிதமகி தம்விடடுப்
பிச்சை யேற்றுண்டு பேச்சின் மௌனமாய்த்
துச்ச வாக்கையாம் போர்வைமூ டித்துயின்
றச்ச மற்றறி வானந்தத் தாழ்வரே (௧௧௩)

அலறி யோடி யலேந்திலே யத்தவென்
முலறி லேயுணர் வானுமா ருண்மையைக்
கலரைச் சேர்ந்ததா லெய்தல் கழன்றனே
மலர டித்துணே வாழ்த்தன் மறந்தையே. (௧௧௪)

மொழிம றைமிற்சி வேசுர மூவுல
கழியு மென்றப்பா னுண்மை யறைவதான்
வழுவின் மேலோ ரகர்த்தாவாய் மன்னினூர்
பழிகொளக் கீழ்கர்த் தாவெனப் பன்னுமே. (௧௧௫)

விழியு ளோரறி வார்கள் விமலனே
வழிப டாரறி யாரிது வாய்மையே
பழிய கற்றிப் பரம்பர னுண்மையை
மொழிய வென்று கருணைமுற் கொள்ளுமே. (௧௧௬)

பலம தத்தினேப் பற்ற றுறந்தர
னிலைமை நேருற நெஞ்சி னமைக்கிலோ
லலையு மேழ்பிற விக்கட லண்ணுமோ
மலைமு டிவிளக் காய்மன்னி நிற்பையே. (௧௧௭)

அத்த நின்ற னடிமுடி காண்புறக்
கத்தர் தங்கள்கா யத்தினேக் கைவிட்டு
மொத்தை யேன மனத்தினே மோகித்தா
ரித்தைக் கொண்டியான் காண்ட லெளியதோ. (௧௧௮)

எப்பு ரமும் பொடிக்க விருக்குநீ
முப்பு ரத்தை முடித்தல்வீ றுருமோ
வெய்ப்பின் மோக மெரிக்க விருக்குநீ
செப்பு மோர்வே ளெரித்ததுந் தீரமே (௧௧௯)

அடிக்கி னுஞ்சிற்றத் தோடெம னெண்ணியே
பிடிக்கின் வெங்கர கேற்றிப் பெருகுட
லொடிக்கி னுமுனை யன்றிமற் றொன்றினைப்
படிக்கி லாவரம் பாவிப்பை சொக்கனே. (௩௪௰)

இயற்சீர் விரவிவந்த கலிப்பா.

துய்ய மறையறையுஞ் சுடரே யொருவடிவாய்
வய்யத் தெனதெதிரே வரவு மயலானேன்
பய்ய வருகெய்திப் பகரா தனபகர்ந்தா
னய்யோ வவன்செயலை யாரோ டுரைப்பேனே. (௩௪௧)

சுற்றத் திருந்தேனைச் சூதாய்த் தனிகொடுபோ
யற்றம் வருவித்தோன் றறியாப் பருவத்திற்
பற்றித் தனங்கதுவிப் பகலோ டிரவகலாச்
சுற்றுங் கலைகளைந்தே கலந்தான் சோலறகுமோ. (௩௪௨)

தந்தை யனையறியாத் தனியே யிருத்திவைத்தோர்
விந்தை யெனப்பார்த்தான் மெய்யை மறந்துநின்றேன்
சிந்தை கெடுமமயஞ் சேர்ந்தா னயலறியா
மந்த மிகவெய்தி வாயில் லனுமானேன். (௩௪௩)

விருத்த வயதெய்தின் மேவ றகவலதென்
பருத்தோங் கிளமையிலே பற்றிக் கொடுபோகிக்
கருத்தை நனிதிருத்தித் தூசைக் களைந்தெறிந்தங்
கொருத்தன் றனிப்புணர்ந்தா னுரைக்கவும் வாயிலனே. (௩௪௪)

என்மா வுயிராக்கை யெவையுங் கவர்ந்தெதிராய்ச்
சென்மச் சிறுகுழியைத் தீண்டா வுகையாகத்
தொன்மைச் சுகந்தோன்றத் துயிலாத் துயில்புகுத்தித்
தன்மெய் கொடுபுல்லித் தற்பிரி வொட்டிலனே. (௩௪௫)

துயில்கொள் ளலையென்றான் சுகமே பெரிதென்று
னயிறவ மென்னையென்று னனைத்து நீயேயென்றான்
பயில்கலத் தலையென்றான் பாரறி யாதென்றான்
செயலிதை விளலென்றான் செய்யாச் செய்தனனே. (௩௪௬)

வாடா மலர்சூட்டி மடியைக் களைந்தெறிந்தே
பாடார் கருக்குழியைப பார்த்தா னகன்றனுவே
கூடாச் சுகமளித்தான் றுயிலுரண் கொளவொட்டா
னீடா யெவருள்ளா ரெனைவிட் டகலானே. (௯௪௭)

செகமறி யாதென் றான் றெரியிற் சிரிக்குமென்றான்
புகலிலை யவனையன்றிப் புணர்த லொருபொழுதோ
வுகமொரு கணமாயிற் றுறவின ரெனையொறுத்தார்
சுகமல தொன்றறியேன் மறையினெ னெறிசொலுமே. (௯௪௮)

இருளிற் புணர்கில்லா னென்று னனிதொலைத்தான்
றெருளினி னுலவவுனின் சீரை யணியலென்றான்
வெருள வெவர்க்குமென்றான் விரும்பே லொன்றையென்றான்
பொருள்வலி தெய்துமென்றான் பொருந்துவ பொருந்திடினே.

கய்யினிற் காசுமிலான் கறையறு சோக்கன்வந்தென்
மெய்யைத் தருவன்சுக மேவப் புணரென்றான்
றுய்ய ரிதுசொல்லா ருலக நடைதோன்றான்
செய்யுஞ் செயற்கியைந்தேன் றினமு மகன்றிலனே. (௯௫௰)

வேறு.

சங்க ரன்சக லத்துக்குஞ் சாக்கியாந்
துங்க சாக்கியன் றிச்சகந் தோன்றுரு
தெங்கு நின்றே யிறைவ னியக்கினு
லங்கு நின்றே யவனி யசையுமே. (௯௫௧)

நீடு செஞ்சடை யாளனே நெஞ்சக
மாட லானுன்னை யாய்ந்தில னின்னுமே
தேடுஞ் சிந்தை யளித்துத் தெளிக்கினே
மூடும் பந்தமற் றுன்னையே முன்னுவேன். (௯௫௨)

என்னை விட்டக லாதிருந் து மியா
னுன்னை யோர்ந்தில னுன்செயன் முற்றுமோ
வின்னு மென்னை யிடமுறக் கூட்டினுற்
பின்னை மானுடப் பேறுவர் தெய்துமோ. (௯௫௯)

வஞ்சமா யென்னுள் வாழுங் கருவிகள்
விஞ்சு போத மறைத்து வெளிப்படும்
பஞ்ச பூத பௌதிக மாயலோ
கஞ்சித் தேயெனக் காட்டிய தையனே. (௫௫௪)

அத்த ஞான மருளா லளித்திடா
தெத்தனை நாளென் ஞேடமர் வெய்தினும்
பித்த னுணர தகும் பெற்றியோ
கத்த நீயறி யாததோ காப்பையே. (௫௫௫)

நாக முண்ட மதியென நல்லுணர்
போக முண்டு புலப்படல் காண்டியான்
மோக சாகர மூழ்க நிறீயெனை
யேக மாய்நின் றிலங்க வருள்வையே. (௫௫௬)

நுண்ம தியு நுடங்கு நுசுப்பினர்
கண்வ லையிற்கட் டுண்ணிற் கலங்குமே
தண்ம தியணி சம்புவே நாயினேன்
பெண்ம தியன்றிப் பின்றொன்று மில்லனே. (௫௫௭)

பிறந்து வாணளி னெல்லையைப் பேணுதன்
மறந்தி யாமிவ ணென்றும்வாழ் வாமென
விறந்த நாளைக் கணித்தில னெந்தையே
மறந்த ருஞ்சமன் வாவெனி னென்செய்வேன். (௫௫௮)

முல்லை மூரலார் தம்மெய் முயக்கினு
னல்ல வெவ்வனத் தோகற வுண்டயர்
புல்லி மைத்தலை வெண்மை புகாமுனஞ்
சொல்ல ருந்தவங் கூருதுன் னெஞ்சமே. (௫௫௯)

மாளா நிற்கும் வழியொன் றருளினு
ளாய் நின்னடிக் காம்பணி யாற்றுவேன்
வாளா நாட்கள் கழியின் மறலிக்கே
யாளாய் வென்னர காழ்வேனென் சொக்கனே. (௫௬0)

பிறந்த நாண்முதற் பேரவா வெய்திலெம்
மறந்த னைப்புரிந் தேன்புகழ் வாய்த்திலன்
வெறும் பொருண்மிக வீட்டின வீந்திலன்
றுறந்து தூயவ னும்வழி சொல்வையே. (௩சுக)

உருவி லாடவ னாகத்திற் பேதையாய்க்
கருவ மைந்தனன் கண்ணுதல் காண்பையே
பெருகுமுள் ளத்தின் பேதைமை மாற்றினு
லுருகு முள்ளத் தனுயுனை யுன்னுவேன். (௩சுஉ)

கெட்ட பாதையிற் கிட்டும னத்தினைப்
பட்டு வீழனா னக்கண்ணுற் பார்ப்பையேன்
மட்டிலா துழன் றேடுதென் மாறிமேற்
சிட்ட னுகினின் சேவடி சேர்வனே. (௩சு௩)

தூய்ய சாக்கிச் சுடருள்ளே தோன்றினு
லய்ய மோடு திரிபு மறுத்துமேல்
வய்ய மெங்கனு மன்னி நிறைந்தொளி
செய்யுஞ் சிற்பரஞ் சேருத லிண்ணமே. (௩சு௪)

கருத்துன் னுத கருத்தனே காசினி
யுருத்தெரி யாதொளி ருன்னுரு வினை
விருத்த னுகுமுன் மெய்யுள் விளக்கினுற்
றிருத்த னுகிச்சித் தம்பரஞ் சேர்வனே. (௩சுரு)

உள்ள தென்னு முறுப்பினைக் கூடினுற்
கள்ள மின்றிக் களித்துண் டிருக்கலாம்
வள்ளல் காட்டும் வடிவம தாயினுல்
விள்ளலற் றொளிர் வீட்டினை யெய்தலாம். (௩சுசு)

பொற்கு டமணி பொழியப் பெய்தல்போ
லெற்பு டம்பெண்ணி லாக்குணத் தானிறைத்
துற்றுட னுயிர்க் கருளை யோம்பினுர்
முற்றுட னுணர்ந் தானந்த முன்னினுர். (௩சுஎ)

புகழ்ந்து ரைக்கின் மகிழ்ச்சியும் போற்றலா
ரிகழ்ந்து ரைக்கினி கழ்ச்சியு மெண்ணிலா
ரகழ்ந்து கொண்ட வரும்பொரு ளாய்ந்தவர்
திகழ்ந்தெறி விளக் கெனனத் திகழ்வரே. (௫சா௮)

ஏதி லாநெறி னும்மிறை வன்னரு
ளோதி யமுடைய யானெவை யும்முளான்
காத விசுதன் காணியுண் டாயினு
மாதி யினரு ளில்லனென் றில்லனே. (௫சா௯)

பொக்க மான போகங்களைக் காண்டொறுங்
கக்குஞ் சோறெனக் கண்டுகை விட்டிடிற்
றுக்க மியாவு முளத்தினிற் றோன்றுருச்
சொக்கனும் பக்கத் தெய்தவ னுண்மையே. (௫எ௦)

ஆசை பின்சென் றலைந்து திரிந்தனன்
மாசை நீக்கி வயங்குல கத்தையா
டேசைக் கண்டு தெளியு முளந்தரிற்
பூசைசெய் துன்றன் பொன்னடி சேர்வனே. (௫எக)

சாகி னுமனஞ் சாகில தீயிடை
வேகி னுமது வேகில விண்ணவா
வாகை யான தழிக்கு மொருநெறி
பாக மோடு பகர்ந்தருள் செய்வையே. (௫எ௨)

சிந்தை மாசறச் செப்பஞ்செய் தேயுயர்
விந்தை யானமெஞ் ஞானம் விளக்கிப்பின்
னெந்தை பாத மிருத்தித் தரிசிக்கிற்
பந்த மற்றொளிர் வீட்டிற் படுமினே. (௫எ௩)

துரியத் தன்னைல் சுயஞ்சோ தியாமெவர்க்
குரியனு யினுங் கூரிய ருள்ளத்திற்
றெரிய நிற்ப னயலவர் தேர்ந்திலா
ரரிய சாதன மெய்தி னடருமே. (௫எ௪)

பெரிய வாட்கட் பிறர்மனை புல்லலும்
பிரிய மாய்ப்புறங் கூறல் பிழைத்தலோ
டிரியுங் கள்ளுண லின்று விளம்பலும்
புரியுந் தீக்குணம் போக்குதி யண்ணலே. (௩எ௫)

இன்பம் போல விருப்பினு மாதரை
யன்பிற் கூட லரியது யாமே
புன்பு லானரம் பென்புதோ லன்றிமா
தென்பு தொன்மிலை யெண்ணி னிதயமே. (௩எ௬)

ஆசை மாக்கட் கரிவைய ரின்பமாந்
தூசகன் றவருள் ளத்திற் றுன்பமாம்
யோசிக் கினுள மொன்றைமற் றொன்றதாய்
மாசி னெஞ்சரைக் காட்டி மருட்டுமே (௩எஎ)

கள்ள வாசைக் கயிற்றிற் பிணிப்புண்டு
தள்ளு மியாவையுந் தன்னது தானென
வுள்ளி யுன்னை யுணர்கில னும்பனே
வெள்ள லேயெனை வாழ்விக்க வேண்டுமே. (௩எ௮)

மெய்ப்புண் டீர்ப்பவன் மேவு முயற்சிபோ
லொப்பில் காம முவர்ப்பி னொழித்துப்பா
வப்படு குழிக்கஞ் சினேன் மாநிலத்
தப்பி றத்த விறத்த றொலைத்துளான். (௩எ௯)

ஆளி பாய்ந்த வடுகளி றென்னவேள்
வாளி தைத்து மருண்டது போதுமே
கோளி லைம்பொறி கூம்பவு நின்மலர்த்
தாளை யீந்துதற் காசொக்க லிங்கமே. (௩௮௰)

தூய்ய நல்லறி வினர் தொடர்பிலா
நொய்ய வுள்ளம் புகலி னுடங்கலால்
வெய்ய மாதரை மிக்க பொருளினை
நய்ய வெண்ணித் தம்மாவி நசிப்பரே. (௩௮௧)

ஆண்டா னீக்கி னடிமை பிழைக்குமோ
பாண்டப் பாசம் பறித்துப் பருப்பொருள்
காண்டகச் செயின் கண்களிப் பெய்திமேன்
மாண்ட பூரணப் போதத்துண் மன்னுமே. (௱அஉ)

உன்னைப் பற்றி யுணர்வினை யெய்தின
னென்னைப் பற்றிய டைந்ததென் னீசனே
யன்னை யைக்கொண் டெலாமடை யுஞ்சிசு
வன்னை யென்னடை வாளதைப் பற்றியே. (௱அங)

பொன்னை நாடியென் பூமியை நாடியென்
மின்னை நாடியென் வித்தையை நாடியென்
றன்னை நாடிற் றனியனு மாகுமே
பின்னை நாடுவ தென்னுள பேய்நெஞ்சே. (௱அச)

காச டர்ந்தகண் கண்டிடா வாறுபோன்
மாச டர்ந்தனெஞ் சுன்னை மருவுமோ
வீச நீயறி யாததொன் றில்லையே
யாச கற்றி யடுத்தெனை யாட்கொளே. (௱அரு)

உண்டி தேடி யுதர நிரம்பில
பெண்டிர் பிள்ளையும் பின்றுணை யாகில
வண்டி யுமெனை யாண்டுகொண் டாயிலை
வண்ட னேனுய்யு மார்க்க மருள்வையே. (௱அசு)

பொன்னை யீந்து புகழையுந் தேடிலன்
றன்னை யாய்ந்து தவங்களு மாற்றில
னென்னை யிவ்வணங் கைவிட் டிடுதியேற்
பின்னை யெவ்வெண முய்குவன் பேதையேன். (௱அஎ)

அறிவாய் நிற்கி னவித்தையு மாளுமே
முறிவாய் நிற்கிற் பவக்கடன் மூழ்குமே
குறியாய் நிற்கிற் குறித்தது கூடுமே
வெறியாய் நிற்கி னெதைநெஞ்சே மேவுவாய். (௱அஅ)

நஞ்சை யுண்டு நலிவுறு மெனியே
பஞ்சின் மெல்லடி யாடனம் பட்டதின்
விஞ்ச வல்வடு வெய்தினின் மெல்லடி
நெஞ்சி ருத்தினென் றுமென் னினைந்திலேன். (௩அ௯)

பிச்சை யேற்றுப் பிதற்றித் திரியினுந்
துச்ச வாக்கையின் றூச தகலுமோ
விச்சை வைத்துநஞ் சொக்கனை வேண்டினு
லச்ச நீங்கி யகண்டறி வாகுமே. (௩௯0)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பத்தியாய் ஞான நூலைப் பயிலுதல் கேட்ட லத்தை
யுத்தியா யுணர்த லாசா னோதிய முறையி னிற்றல்
சுத்தியா யுள்ளங் காயம் வாக்கிவை தோன்ற மன்ன
லெத்தினும் விளங்குஞ் சித்தை யெய்துமுற் குறியீ தாமே. ௩௯௧

உடலினி லுள்ள சத்த தாதுவைப் பிரித்தங் கோர்தல்
கடலின தாழ மென்னக் கருத்தினு லாழ்ந்து நோக்கல்
விடலவா வுக்கு ரித்தாம் விடயத்தி லிச்சை யற்ற
நடுமுறுஞ் சித்தி லொன்றாய்ச் சேருமுற் குறியீ தாமே. (௩௯௨)

எதற்றினை நோக்கி னுலு மதனுண்மை யிதயத் தோர்தல்
பதத்தினை யுன்னுங் காலை பயமுற றனியி ருந்தே
தவத்தினை நோற்ற லன்னோர் தம்மிடை சேர்தன் மின்னுஞ்
சிவத்தினத் துவித மாகச் சேர்க்குமுற் குறியீ தாமே. (௩௯௩)

சாதன நான்கை யெய்தல் சகத்தினி னும ரூப
பேதனந் தள்ளி நிற்றல் பேச்சிறந் தூமை யாத
லாதனங் கட்ட லியோக மடைதலே காந்த மெய்த
னுதனுஞ் சிவத்து டாழு நல்லமுற் குறியீ தாமே. (௩௯௪)

பொறியினை விடயத் துன்னு தடக்கலுட் புகுந்தங் குள்ளே
செறியுநாற் கரணம் வாளா திரிதலை யொடுக்க லாங்கே
முறியுஞ்சூ னியங் கடத்தன் முன்னெளிர் கரியை யோர்தல்
குறிகுண மிலாத சித்தை யெய்துமுற் குறியீ தாமே. (௩௯௫)

பரத்தினைப் பார்த்த பார்வை யால்விரி வுலகம் பார்த்தல்
கரத்திலா மலகம் போலக் காட்டுஞ்சற் குருவைக் காத்த
லுரத்தினைத் தூய்மை செய்த லோங்கு முப்புடியை நீத்தல்
பரத்தினோ டிரண்டற் றொன்றாய்ப் பண்ணுமுற் குறியீ தாமே.

பத்தியாய்ப் பரனைப் பூசை பண்ணுத லக்க மாலே
சுத்தியா நீற ணிந்தைந் தெழுத்தினை யன்பிற் சொல்ல
னித்தியங் கோயில் புக்கி நேயமோ டீசற் போற்றல்
சத்திய சிற்க ணத்தைச் சாருமுற் குறியீ தாமே. (௩௬எ)

வானென வெங்குந் தானாய் மன்னியே நிறைதன் மெய்யைத்
தானென தெனும கந்தை சார்தரா நிற்றல் பின்ன
மானவை யபின்ன மாக்கி வாழ்தன் மனதை மூடி
மோனமாய் நிற்றல் வத்தோ டொன்றுமுற் குறியீ தாமே. ௩௬அ

பாரினை யுணருங் காலே படர்பர முணர்த லிந்தை
சீர்புக ழிவற்றை யோரா தொளிர்சித்தா யிலங்க லுன்ப
மார்சுக மடையின் வாட்ட மகங்களி கூர்த லற்றே
யோர்கொள் வத்தகமா யென்று மிலங்குமுற் குறியீ தாமே.

தந்தைதாய் மனைவி மக்கள் சனங்களை யணின்மீ தேற
வந்தநாய் பார்த்தல் போல மனத்தவா வறுத்துப் பார்த்தல்
சந்ததம் பரந்தா னாகிச் சலிப்பற நிற்றல் சொக்கே
யிந்நாற் குணங்கண் முற்று மெளியனேற் கருள்செய் வாயே. ௪௭

வேறு.

காம மாறையுங் கைவிட் டிருப்பையே
லேமம் போன்றொளிர் வாயென்ற னுள்ளமே
நாம ரூபமில் ஞான மடைந்துபின்
சேமமா குஞ்சித் தெய்துவை யோர்தியே. (௪௭௧)

அனிய மில்லா வகர்த்தனு யாகினன்
முனிலை நீங்கிய மூதறி வெய்தலா
னனிலை யும்மது நற்றவ மும்மது
சொனிலை கேட்டுச் சுகிப்பை யென்னுள்ளமே. (௪௭௨)

பேய்க ளோடு நடித்த பெரும்புன்
னாயினே னிதயத்து நடித்திலை
தாயருஞ் சொல்ல மூகைய நாயினார்
சேய னேன்றெளி வெய்துவ தெங்ஙனே. (சாங)

நிந்தை தூடண நீக்கியி ரண்டையு
மந்த மாதியி லாத வழிவினைச்
சந்தத மகமென்று தரிப் பையேற்
சிந்தை மாண்டு சிவமாய்த் தெளியுமே. (சாச)

நித்த நித்த நினைப்பவர் நெஞ்சுளே
யத்த னுமக லாதங் கிருப்பனே
பத்தி சற்றுமில் பாமரர் நெஞ்சுளே
கத்த னைச்சற்றுங் காண்டற் கரியதே. (சாரு)

பருக்கி னெங்கும் பரவிப் பருக்குக
சுருக்கி னின்னுருத் தோன்றாச் சுருங்குக
விருக்கி னோடாது சும்மா விருக்குக
திருக்கிற் சென்மங்கள் சேர்வையென் னெஞ்சமே. (சாசு)

மறியுஞ் சத்தத்தின் வாழுயிர் மாள்வபோற்
செறியும் போதத்தைச் சேரத் துறந்தியாழ்
பறியுங் கீத மடவரல் பாணொலி
யறியு மாசையி னாருயிர் வீவையே. (சாஎ)

மத்த யானைப ரிசத்தின் மாள்வபோற்
சுத்த மாம்பர போதந் துறந்தொழிந்
தெத்து மாத ரிளமுலைக் கீடழிந்
தத்தந் தேடி யருமுயிர் வீவையே. (சாஅ)

விட்டில் ரூபத்திற் றன்னுயிர் வீவபோ
லொட்டி லாதொளிர் போத மொழித்துயர்
பட்டு பண்டம் பலபல பார்த்திச்சை
நட்டு வாளா நசித்த லுறுவையே. (சாகூ)

பேசிப் பேசிப் பிரமம தானேயோ
தேச மோடித் தெளிஞனென் ருனேயோ
மாசில் சொக்கனை வாழ்த்தி வணங்கினுற்
பாச மியாவும் பறந்தோடிப் பாறுமே. (சாய)

மச்ச மான திரதத்தின் மாள்வபோற்
றுச்ச மாமிர தத்திற் சுழல்வையே
னிச்ச லும்மிரை தேடி நினைப்பரு
மிச்ச மாமறி வற்றுயிர் வீவையே. (சகக)

வண்டு கந்தத்தின் மன்னுயிர் மாள்வபோற்
பண்டு மின்று முளபோதப் பற்றறுத்
தண்டுஞ் சந்தன புட்பம தாதியைக்
கண்டு தேடி னுயிருங் கரைவையே. (சகஉ)

எவனருள் பெற்றிய மனோ டிந்துவுந்
தவன னங்கி சதுர்முகன் மான்முதற்
கவனம் வைத்துக் கலங்கி நடப்பதோ
வவனுக் கஞ்சி யடங்கென துள்ளமே. (சகங)

தசமன் றன்னைநீத் தெண்ணித் தயங்கல்போ
னிசம தோர்கிலா நெஞ்சினில் வாட்டமாய்ச்
சசவிஷா ணம்போற் றோன்றுமித் தாரணிக்
கசம தில்விழுந் தேன்கரை சேர்ப்பையே. (சகச)

குழவி யாய்ப்பிறந் தோங்கிக் குமரனாய்
விழைவு தீர்கிழ மெய்தியுங் காண்பனோ
பழைய வெங்கும் பரந்த வுணர்வதாய்ப்
பழக நின்னருள் பாலிப்பை யையனே. (சகரு)

இளமையின் மூப்புஞ் செல்வத் திடும்பையும்
வளமையின் னோயும் வந்தெய்து மென்னவே
யுளமகிழ்ந் துயர்ந் தோர்ந்துற வெய்தினர்
தளர்வகற் றிச்சத் தாகுலை நெஞ்சமே. (சகசு)

முயல கற்கு மொருபத மீந்தனை
யயனி னிற்கு மரவரிக் கன்பொடு
வியன் மலர்ப்பத மீந்தனை நாயினேற்
கியல்பி னியவி லாதென்னல் போலுமே. (சகஎ)

எறிசு டர்க்கதிர் முன்பிரு ணிற்குமோ
சிறிய வேனை யொளிக டிகழுமோ
பொறிகொள் ஞானத் தெதிரஞர் புல்லுமோ
செறியு மான்முத லோர்க டெரிவரோ. (சகஅ)

ஒருகண் ணேய்தர வொன்றதைத் தீர்ப்பதாற்
பெருகு வன்பிணி பின்மருந் தாயுமென்
றிருகு நெஞ்சினன் செவ்விய னுவதற்
கருகி ருக்குஞ்ஞா னக்கண் ணளிப்பையே. (சகசு)

மக்க ளாக்கையில் வந்து பிறத்தலு
மொக்க லோடுண் டுடுத்தி யிறத்தலு
மொக்கு ளென்றுபற் றற்று முளன்பினிற்
சொக்கன் சேவடி துன்னுவை நன்னெஞ்சே. (சஉ௦)

மயறகை யால்வரும் வன்பவந் தோறுமே
செயற்கை யாற்செறி துன்பத் திடைபுக்கிக்
கயற்க ணின்றெழு நீரைக் கணிக்கினேல்
வியக்க நிற்குங் கடன்மடு வென்னவே. (சஉக)

ஆக்கை யுள்ளுறை யாங்கார நீத்தவ
ணோக்கி னுன்ன றிவெய்து மங்குநஞ்
சேக்கை யென்று தினந்துயில் கொள்ளினே
னீக்க மின்னிறை வாயெங்கு நிற்பையே. (சஉஉ)

அரக்கின் பாவை யனற்படி னென்னவே
யுருக்க மும்மெய்யை யுள்ளொளி தோன்றுமே
திருக்கு மாத்திர மாய்நின்று சேடிக்கி
னுருக்கொ ளாவகை யுய்யலா நெஞ்சமே. (சஉங)

பந்த மியாவனைப் பற்றிய தோவவ
னுந்து முத்தியை யுற்றிடல் வேண்டுமே
சிந்தை யாலிவை சிந்திக்கிற் போதமோ
முந்து கூறு நிலையினின் மூழ்குமே. (௪௨௪)

எவனாற் கண்களெ வற்றையுங் காண்பவோ
வெவனாற் சோத்திர மெச்சத்தங் கேட்பதோ
வெவனாற் கந்த மெவற்றையுங் கொள்வதோ
வவனன் றோபர மான்மாவென் றுய்வையே. (௪௨௫)

எவனா னாவுமி ரதம றிவதோ
வெவனான் மெய்யு மிலங்கூ றறிவதோ
வெவனா லுள்ளமு மேவப் படுவதோ
வவனன் றோபர மான்மாவென் றுய்வையே. (௪௨௬)

எவனாற் புத்தியு நிச்சய மெய்வதோ
வெவனாற் சித்தமு மூகித்த லெய்வதோ
வெவனா லேயகங் கார மெழுவதோ
வவனன் றோபர மான்மாவென் றுய்வையே. (௪௨௭)

தன்னைக் கொண்டு சகத்தினைச் செய்தனன்
றன்னைக் கொண்டு சராசரம் பண்ணினன்
றன்னைக் கொண்டு தமியனைத் தந்தனன்
றன்னை யேயிறை யாக்கித்தா னிற்பனே. (௪௨அ)

ஒருகா னேக்கி னுலகமாய்த் தோன்றுவா
னொருகா னேக்கி னுயர்பர மாகுவா
னொருகான் முத்தியு மாகவே யோங்குவா
னொருகாற் சூனிய மாகவொ ளிர்வனே. (௪௨௯)

வரவு போக்குமி லாதென்று மன்னுமே
யிரவொ டும்பக லின்றி யிலங்குமே
கரவொ டுவெளி யாகவுங் காணுமே
விரவி யெங்குஞ்சொக் கேசனுய் மின்னுமே. (௪௩௰)

அருவு ருவம தாகி யொளிருவான்
குருவுஞ் சீடனு மாயுருக் கொள்ளுவா
னிருவி கற்பம் விகற்பமாய் நேருவா
னொருவ ரானு முரைக்க முடியுமோ. (௪௩௧)

அறிவி னொன்றோ ரடர்வினை நீத்துயர்
நெறியி னேகியின் பக்கட னிற்பரே
பொறியெ னுமைந் தலையராத் தீண்டிப்புன்
வெறியராய்க் கீழோர் வேதையின் வீழ்வரே. (௪௩௨)

நெஞ்செ னும்பட மீது நினைவெனு
மஞ்ச னத்தா னரனுருத் தீட்டியுள்
விஞ்சு மன்பினீ ரிட்டக மென்மலர்ச்
செஞ்ச ரண்மிசை சாத்திச் செவிமினே. (௪௩௩)

வீக றோன்றல் வினையின் பயன்களா
மர்தல் போன்ற லருத்தத் தியல்பதாஞ்
சாதல் போன்றலிற் றாழ்வுதாழ் வின்மையு
மாக றொன்றலி னெய்தலஞ் ஞானமே. (௪௩௪)

பார்மென் பஞ்சணை யாகப் பரவுவான்
சீர்கொள் மேற்கட்டி யாகத்தன் றேகமே
யேர்கொள் போர்வையா யின்பமே மாதராய்க்
கூர்ம கிமினர் கொண்டு சுகிப்பரே. (௪௩௫)

கருணை யோகட லாகவொ ளிர்வதான்
மருளு மாசினை மாற்றரி தன்றரோ
வருளே யோர்வடி வாகியி லங்கலாற்
றெருள ளிப்பதிற் சிக்கொன்று மில்லையே. (௪௩௬)

அங்க முற்றுமொய் வொன்றா யகற்றினு
லெங்கொ ளிருமியா னென்னதென் மானமே
பங்கஞ் செய்யபி மானமும் பாறினுப்
செங்க திருமி ருளத்தே செய்துமே. (௪௩௭)

ஆக்கை யென்னதோ யானோவென் றையுற்றுத்
தூக்கின் யானெனிற் சொன்னவன் பின்னமாஞ்
செக்கை யாற்சினை யொவ்வொரு பேர்செப்ப
னோக்கி னென்னதென் றெத்தை நுவல்வதே. (சஙஅ)

ஆதலா லியானு மல்ல வெனதல
வேத நான்கொடு மேலவ ருஞ்சொலும்
போத மொன்று மகம்பதத் துட்பொரு
டீதி லப்பொருள் சேர்வையென் னெஞ்சமே. (சஙகூ)

ஏமம் போன்றொளிர் சொக்கலிங் கேசனே
காம லோபங் குரோதங் கலந்தலை
தீம னத்தைத் திருத்தித் தெளிக்கினே
யூம னுயுள நாளு மொழிப்பனே. (சசய)

கலித்தாழிசை.

வித்தையா வித்தையின் முன்பின்வி ளங்கினன் வெளிசென்றான்
கத்துறு பாழ்கடற் றெங்கனுந் தேடியுங் காணேனே
அத்தம னைத்தையு மன்றென வொளிருவ னடையாளஞ்
சித்தொரு தானாய்த் திகழுவீர் காணிற் செப்பீரே. (சசக)

ஏகன னேகனு மென்றும் விளங்குவ னேகுற்றான்
காகரு மலையுங் கடனதி தேடியுங் காணேனே
ஆகமூன் றுங்கடந் தப்பா லொளிர்கரி யடையாளம்
யூகம் துற்ற வுணர்வினர் காணி னுரையீரே. (சசஉ)

தெளிமறை முடிவிற் றிகழ்பவன் வெளியே திரிவுற்றான்
களிதரு மானந் தக்கதி தேடியுங் காணேனே
அளிமுதல் சரமோ டசரமாய் நின்றா னடையாளம்
வளியடைத் துணரு மாதவ ரீரே வகுப்பீரே. (சசங)

கடவச டங்கண் முற்றும் விளக்கினன் றான்சென்றான்
கடபட முதலா வனைத்திலுந் தேடியுங் காணேனே
அடர்தரு மூலக மனைத்து மடக்குவ னடையாளந்
திடதர மாகத் தெளிஞரே காணிற் செப்பீரே. (சசச)

மிஞ்சிய வறிவாய் விளங்கின னொருகால் வெளிபடுக்கான்
னெஞ்சொடு போய்ப்பல துறைகளு நேடியுங் காணேனே
அஞ்சுகோ சங்கடந் தப்பா னிகழுவ னடையாள
மஞ்சலற் றிருக்கு மாதவர் காணி னறையீரே. (சசரு)

சத்தொடு சித்தா னந்தமாய் நின்றான் றனிசென்றான்
கத்துரு போக்தா வாகினான் றேடியுங் காணேனே
அத்தியா ரோப வவா தமுமில வடையாளஞ்
சுத்தமெஞ் ஞான முணர்ந்தவர் காணிற் சொல்வீரே. (சசசா)

பலமதங் கட்கு மிறையென நின்றான் பதிவிட்டான்
கலைகளெந் துள்ளுஞ் சென்றவ னோடியுங் காணேனே
அலதுள தென்னு மத்தமு மாகுவ னடையாள
மலமகன் முதியோ ரவனுழை காணின் வகுப்பீரே. (சசஎ)

எங்குமி ருந்தா னென்னுளொ ழித்தா னீதென்கோ
கங்குலொ டும்பக லெங்கணுந் தேடியுங் காணேனே
அங்கம ணிந்தான் றிங்கள ணிந்தா னடையாளந்
தங்கிட மோரின் மாதவ ரீரே சாற்றீரே. (சசஅ)

மன்முத லெவையும் பிரேரகஞ் செய்தான் மறைவுற்றா
னினைவொடு பன்னுன் குலகமு நேடியுங் காணேனே
அனல்கதிர் மதிமுன் றாகிய கண்ண னடையாளங்
கன்னன வகல்சிற் கனரவ ணோர்ந்தாற் கழறீரே. (சசகூ)

மண்டலம் விண்டல முற்றும் விளக்கினன் மறைவுற்றான்
கண்டல னுழையாக் கானகந் தேடியுங் காணேனே
அண்டம னைத்தையு மாக்கி யழிப்பா னடையாளங்
கண்டம கன்றொளி ரடிகளே காணிற் கழறீரே. (சருய)

வேறு.

காம மாறுங் கருத்தின் குணங்களாம்
வாம நற்குண முற்று மதனதே
நேம மாக விவற்றை நிறுத்திடு
லேம மாகக் குணியு மிலங்குமே. (சருக)

சங்கை தீரமெய்ச் சாத்திரங் கற்கிலென்
கங்கை கொண்டுபெல் காண்மெய் கழுவியென்
மங்கு ளிக்கும் வகையறி யாதுழன்
றெங்கு மோடித் திரிந்தலைந் தென்னையே. (சருஉ)

அத்த னும மராற்றிலை மேனியைச்
சுத்தஞ் செய்யினுஞ் சோதியுட் டோன்றுமோ
கத்தல் விட்டுக் கருத்தைச் சிவத்துள்ளே
செத்து நிற்கச் செயிற்கதி சேருமே. (சருங)

எவ்வுயி ருளு மீச னிலங்கலைச்
செவ்வ னேக்கித் தெரிசிக்கி னெஞ்சமே
யவ்வ வற்று னடர்சுக துக்கமுங்
கௌவ லற்றுச்சிற் ககன மாவையே. (சருச)

சரவ சரத்தி னுள்ளுஞ்ச தாசிவ
நிரவி நிற்றறெ ரிசிக்கி னெஞ்சமே
கரவு மாயையின் கற்பிதத் தோற்றத்தாற்
பரவு பல்வடி வங்களும் பாறுமே. (சருரு)

உண்ட வர்க்கன்றி யுட்பசி தீருமோ
கண்ட வர்க்கன்றிக் காட்சி களிக்குமோ
வெண்ட ருந்தவத் தோர்க்கல திவ்வுண்மை
மண்ட லத்தவ ருள்ளத்தின் மன்னுமோ. (சருசா)

பாவஞ் செய்தலை யின்பமாய்ப் பற்றினே
மேவு புண்ணிய மேல்விருப் பற்றனே
யாவு லோடுமெஞ் ஞானத் தழுந்தினே
கோவை யெவ்வணங் கூடுவை யுள்ளமே. (சருஎ)

ஆசை யாங்கட றன்னி னமிழ்ந்தினுற்
பேசு மைந்தர்பெண் டீர்சுற்றம் பின்னவர்
தாச ராமக ரங்கடன் னூனினைத்
தூசி லாதுபற் றித்தினுந் துன்னியே. (சருஅ)

கற்ப முங்கண மாங்கணங் கற்பமா
மற்ப மும்பெரி தாம்பெரி தற்பமாங்
கற்பு மூடமா மூடமுங் கற்பதாம்
பொற்பு றுமன வன்மை புகன்றிடே. (சஙக)

கண்ட தியாவுஞ்சொக் கலிங்க ணுக்கொளி
லண்ட ணுமெவ னன்றிமற் றின்மையான்
மண்டு கேளிவர் வன்பகை யாமிவர்
பெண்ட தாமிதென் பேதந் தொலையுமே. (சஙய)

மனமு மோர்வடி வாயுமின் மாய்க்கலாங்
கனவைப் போலிதுங் காட்டி மறைதலா
லனகன் றன்னரு டன்னி னடங்குமா
னனவி னிற்கன நாசமாம் போலுமே. (சசக)

பொன்னின் செஞ்சடைப் பூதல நாதனே
யன்னை யும்மப்ப னுகவந் தாண்டுபின்
றன்னி லென்னையுந் தானவ னுக்கியே
யின்னி லத்தினி லின்புறச் செய்வனே. (சசஉ)

புராண போதனே புத்தனே நித்தியா
கருணை கொண்டு கனிமன மீவையேன்
மரண மோடுதிப் பின்னிலை மன்னிமேற்
சரண காமனை யுந்தலை சாருமே. (சசங)

காம மேயகக் கண்ணை மறைத்திடுங்
காம மேமயற் கள்ளை யயில்விக்குங்
காம மேபுலா லுண்டு களிப்பிக்குங்
காம மேபொற் களவினுக் கேவுமே. (சசச)

காம மேபெரி யோரைக் கறுவுமே
காம மேயன்னை யப்பனைக் கன்றுமே
காம மேகொலை செய்யக் கருதுமே
காமம் போற்கொடி தென்னுள கன்னெஞ்சே. (சச

காம மேகற்ற கல்வியைப் போக்குமே
காம மேகைப் பொருளகல் விக்குமே
காம மேகடு நோய்க ளருத்துமே
காமம் போற்கொடி தென்னுள கன்னெஞ்சே. (௪௬௬)

காம மேகன துக்கங்க டந்திடுங்
காம மேநற் குணங்கள் கடத்திடுங்
காம மேபல பொய்சொலக் கற்பிக்குங்
காம போற்கொடி தென்னுள கன்னெஞ்சே. (௪௬௭)

அய்ய மின்றி யரனடி சேரினே
கய்யி னெல்லிக் கனியெனக் காட்டுமே
வெய்ய மாயையின் வீங்கிரு ணீங்குபு
துய்ய தாயொளிர் சுத்த நிலையையே. (௪௬௮)

கண்ணீ ரோடக் கசிவிலன் சிந்தையைத்
தண்ணீ ராக்கித் தன்றுண்மலர் சேர்க்குமே
கண்ணன் கண்மலர் சாத்திக் கனிவுறு
மண்ண னுமமா மைந்தெழுத் தோதவே. (௪௬௯)

தேச தாயொளிர் சிற்சந்நி தானத்தில்
வீசென் முன்கானல் போன்மித்தை யாய்வரும்
பாசங் கெட்டுப் பசுத்துவங் கெட்டுச்சொக்
கேச னோடங் கிரண்டற் றிலங்குமே. (௪௭௰)

அங்க ணாள வருளுடை யத்தனே
திங்கள் சூடுஞ் செழுமறை யத்தமே
துங்கச் சோதியே சொன்மன மண்ணுறு
வெங்க ணையக வென்னையாட் கொள்வையே. (௪௭௧)

வஞ்ச நெஞ்சே வருத்துந் துயரெலாம்
பஞ்சின் மெல்லடி யாடிணை பற்றினாற்
செஞ்சுடர் முன்னிம மெனத் தீர்ந்துடன்
மிஞ்சும் போதம் விளங்குமென் றுளுமே. (௪௭௨)

இன்சொற் கூறு மியல்பிலி யாயினும்
வன்சொன் ஞளும் வழங்கல் விடுத்தினி
யென்சொற் சொல்லினு மியாவர் மனங்கொளீ
நன்சொல் லென்றெணி நாட்டுவை நெஞ்சமே. (சஎங)

கங்கை யைத்தலை ரோமத்திற் கட்டியும்
வெங்கட் கூற்றை யடியினில் வீழ்த்தியுந்
துங்க முப்புரஞ் சுட்டு மிறுதியி
லங்கம் பெண்ணுரு வானதென் னையனே. (சஎச)

தாண்டிக் கங்கை தலைமேலு மேறினுள்
வேண்டி மற்றையாண் மெய்யரை யாக்கினு
ளாண்டி யாயைய்ய மேற்றதைக் காத்தனை
யீண்டை யேனையுங் காப்பதெவ் வண்ணமே. (சஎ(

இரும்பைப் பன்மருந் தீந்தொளி கான்றிடு
மரும்பொன் ஞக்கினை யாதலி னண்டினேன்
மரும்ப னேனுளத் தூசை யழித்துமென்
பிரும்பின் கட்டிய தாக்கக் கடனதே. (சஎசு)

புரத்தோ டேழு கருவியும் பாழ்செய்து
நருத்த மெய்யுணர் வெய்திச் சுகமுறத்
மரத்து வெண்டிரை சூழூர் தரணியை
சரவுத்த ழிக்குமா தேவவ ருள்வையே. (சஎஎ)

பத்தி சற்றிலாப் பாமர நெஞ்சினர்
செத்துச் செத்துப் பிறப்பது திண்ணமே
யத்த ஞம மகத்துள் ளழூந்துவார்
கத்தன் றன்னடி கண்டு களிப்பரே. (சஎஅ)

பித்த ரென்றுல கம்பேசு ஞனியை
மத்த ரென்றவர் மண்ணை வகுப்பரே
யித்தி றத்தவ ருள்ளிறை யுள்ளதா
லத்த னுக்கு மன்றும மடைந்ததே. (சஎகூ)

எக்கு லத்தவ னாயினு மீசனை
நெக்கு நெக்கு நினைப்பவ னேநம
தொக்க லென்றவற் குள்ளன்பு பற்றினாற்
பக்கத்தே சொக்கன் றன்னருள் பற்றுமே. (௪௮௰)

எப்பி றப்பினு மேற்றமா மானிட
மப்பி றப்படைந் தும்மறி வண்டிலன்
றப்பின் மேல்வரு சன்ம முணர்ந்தில
னொப்பி லாயணி யேயுவந் தாட்கொளே. (௪௮௧)

இந்தி ராதி யிருக்கைவந் தெய்தினு
மந்தி ராதி கலைகண் மருவினு
மந்த ரத்தி லுலாவ லடையினும்
பந்த மில்பர ஞானமுட் பற்றுமோ. (௪௮௨)

காரிட் டாணவங் கன்மமுஞ் சேர்ந்துபல்
பேரிட் டேவெகு பேதம தாயின
போரிட் டன்னதைச் சேதிக்கிற் போதமே
யேரிட் டெங்குஞ் சிவமா யிலங்குமே. (௪௮௩)

மால றாதவ ரின்ப மறிவரோ
தோல றாதவர் துன்பந் துடைப்பரோ
நூல றாதவர் நுண்ணறி வாவரோ
கால றாதவர் காணுங் கதியதோ. (௪௮௪)

விடைய விச்சையில் வீழ்ந்திட லாகுமோ
தடைய தாமடஞ் சாருத றக்கதோ
வடைய வைங்கோசத் தாழுதல் கூடுமோ
கடைய தாகிக் கழியுமென் னெஞ்சமே. (௪௮௫)

சீமை முற்றுந் திருத்துவர் போன்றுபோய்த்
தீமை செய்தனை சித்தினைத் தேறிலா
யாமை போலைந் தடக்கவுங் சற்றிலா
யூமை யாயி னுணர்வுளே தோன்றுமே. (௪௮௬)

நானெ ருதவர் ஞானிக ளாவரோ
வூன ருதவ ருத்தம ராவரோ
தேன ருதவண் டென்னமுத் தேகத்திற்
றூன ருதவர் சாருங் கதியதோ. (சஅஎ)

கொடிய வெம்பிறப் பாழியிற் கோத்தரு
மிடிய ருயினன் வெந்துயர் தீர்த்திடக்
கடிய நின்னிரு காற்றுணை யன்றியிப்
படிமீ தொன்றையும் பார்த்தில னையனே. (சஅஅ)

பொன்னைச் சோதிப்ப ரத்தம் புரப்பவர்
மின்னைச் சோதிப்பர் வெங்காம நாலினர்
தன்னைச் சோதிப்பர் தத்துவந் தேர்ந்துளா
ரென்னைச் சோதித் தரிந்தனை யென்னெஞ்சே. (சஅகூ)

சித்தைப் பார்க்கிற் செடமறை வாகுமே
[illegible]தைப் பார்க்கி னறிவு மறைவுறுஞ்
[illegible]த ஞான வடிவாய்த் துலங்கநன்
[illegible]யித்த வாசொக்க லிங்கநன் வீட்சியே. (சகூ0)

கலித்தாழிசை.

புர[illegible]பமேயுயர் சகமீதினு முளமீதினுஞ் செறிந்தாற்
கரு[illegible]மேதொடர் வினையேபக ரருரேபுகன் மதமே
மர[illegible]மேயலை மனமேயைம் பொறியேயடை தநுவே
சர[illegible]மாஞ்சூ னியமேயெவ ணகல்வீரதை நவில்வீர். (சகூக)

கூறும்பொருள் விரிவாயினுங் கூர்ந்தோரினுஞ் சிவமே
தேறுந்தெளி வறினுமதை யன்றிப்பிறி திலையால்
வீறுமுள மேயந்நில புகினும்வே றெங்கெய்தினு
மீறில்சுக மேபெய்துவ னையுற்றில னறிவே. (சகூஉ)

ஒளியேபர வெளியேயுனை மறந்தேயுணர் வொழிந்தே
களியேன்மயற் கள்ளேயயின் றதனாற்கண் கலங்கித்
தெளிவெய்தில னெனைத்தேர்ந்தில னந்தோதெரி கில்லா
யெளியேன்படு துயரேகவு மெழிலாரருள் பொழியே. (சகூங)

உனையேதெளி யுணர்வன்றியோ ருணர்வுமுணர் வாமோ
நனையாவருட் கடலாடுதற் கிணையோபல நதிமூழ்குத
லனையேநீ யறியாததோ வகிலம்பல கண்டாற்
பினையெவ்வண நினையோருவன் பேசற்கரு மீசா. (௪௬௪)

மதியோசிறி தில்லேன்வளர் மதிசூடிய விறைவா
முதியோர்பதம் பணியேனென்று முதிராமுலை பங்கா
சதியோபல செய்தேனதைச் சகித்தேயரு டருவாய்
விதியோதுயர்க் கடல்வீழ்த்தின விதியோடணி பரனே. (௪௬௫)

உரியேகழற் றுரகம்மென வொருமூன்றுட லகன்றே
கரியேயக மெனவேயகக் கண்ணுறநிந் திலங்கின்
விரிவேய்சகம் பொய்யாய்விடும் வெளிவந்துதற் சூழ்ந்தே
பிரிவேயற விளங்கிந்நிலை பிறத்தற்கரு டிறந்தோய். (௪௬௬)

மனமோபொறி வழியேவலிந் தீர்த்தேசக வாழ்விற்
றினமேபுக வதனுனினைத் தெரியாதுணர் விழந்தேன்
முனமேயுள வோவின்றுள வோவிம்மருண் மொழிவா
யனமேனமு மறியாதொளி ரமலாதமி யேற்கே. (௪௬

இலவாம்பொரு ளுளவாம்பொரு ளெவையுஞ்சிவ மென்றே
புலமூடிய மேலோரது பவித்தேபொழு தகல்வார்
மலமாதியி லுழல்வாரவை வெவ்வேறென மயங்கிப்
பலமெய்துவர் போலியானென தெனவேபகர் வுறுவார். (௪௬௮)

மறவாமலு நினையாமலும் வளர்பூரண வுருவாய்த்
திறமாயெவ னின்றுனவன் சித்தாயொளிர் வுற்று
னிறமாமன முருவொன்றினை நினையினதன் வழியே
மறநீத்துணர் வுய்த்தேவரன் முறையாயுயர் வருமே. (௪௬௯)

கண்ணுன்மனக் கண்ணுற்றனைக் கண்டாற்கதி யுண்டே
பெண்ணுணவி யுற்றேயொளிர் பிவஞ்சத்துணர் பெருத்தே
விண்ணுதிய வசரஞ்சரம் வெவ்வேறதாய் மருட்டிப்
புண்ணுங்குழி யிடையேசிறை புகனீத்தொழி சோக்கே. (௫௭௦)

வேறு.

அறிவாய் நிற்கி னறியாமை கூடுமோ
செறிவாய் நிற்கிற் றிரிபுடி தோன்றுமோ
முறிவாய் நிற்கிற் பரமுளே காணுமோ
குறியொன் றில்லாக் குறிப்பினை யோர்வையே. (ருாக)

பொன்னை யொத்த பொருளொன்று மின்மைபோ
லென்னை யொத்தவ ரிவ்வுல குந்திலை
யன்னை யாகியெம் மத்தனு மாயிலங்
குன்னை நம்பின னுற்றது செய்வையே. (ருாஉ)

அண்ண லென்றுய ரார்பிற லல்லது
மண்ணி லாற்ற வலியரு ளார்கொலோ
திண்ண மாயிதைத் தேர்ந்துமென் மீதிலே
புண்ணி யாவிரங் காதிருந் தனைபுகல். (ருாங)

[illegible]ப்பைக் காட்டி னிறப்பதே நன்கதா
[illegible]ப்பைக் காட்டினு நெஞ்சங் கொடியதாம்
[illegible]ப்பைக் காட்டினு மேன்மை வெறுப்பதாம்
[illegible]ருப்பைத் தூக்கிவ ளைத்தவென் புண்ணியா. (ருாச)

[illegible]ட்டி யாதிய செய்மாயா சத்தியே
[illegible]ட்டி விட்டேப மாவர ணங்களா
[illegible]ட்டிற் றென்று மிருஞ்சக சொப்பனம்
[illegible]ருட்ட நொந்தனன் வாழ்விக்க வேண்டுமே. (ருாரு)

சுத்த வாசனை தன்னமுன் னுள்ளவ
சுத்த வாசனை தூரத் தகலவும்
பெத்த சித்தந் தூய்தாக்கவும் பேசருஞ்
சித்த தாயெங்கு நின்றொளிர் செம்மலே. (ருாசு)

நேற்றி ருந்தவர் நில்லாது மாண்டனர்
காற்றி ருக்கும் பொழுதுக ழைக்கண்ட
னூற்றல் சேவடி யண்மினர் தாண்மலர்
போற்றிற் கூற்றினைப் போற்றுவ னெஞ்சமே. (ருாஎ)

இறக்கச் செய்யுமோ வின்னமோ ரன்னேவாய்
பிறக்கச் செய்யுமோ பெண்மக வாறிய
துறக்கச் செய்யுமோ சூழ்வினை சூழுரு
வறக்கச் செய்யுமோ வாழ்வில னெஞ்சமே. (ருாஅ)

நெக்கு நெக்கு நினைந்திலா நிந்தையேன்
புக்கி நிற்பனோ பூரண போதத்து
ணக்க நிற்பனோ நானிலஞ் சூழுற்றே
செக்கர் வானிறத் தெந்தையே காப்பையே. (ருாகூ)

விவித மாகவி ரைந்தெழும் வேட்கையாற்
றுவித மாகிற் சொரூப மறைவுறும்
புவிதனிற் றேன்றும் பூரண சோக்கனே
குவிபு முள்ளம் பரவிற்கோ தெய்துமோ. (ருாய)

அன்ன வூர்தி யலைகடற் றுஞ்சினே
னின்னந் தேடி யறிந்தில ரென்னினே
லுன்னி யானே வுணர்வனீ சாவெனே
முன்னி னின்னருண் முன்வந் துதிக்குமே. ந)

பேதமை யெனும் வித்திற் பிறந்துமா
வேதனை மரம் வேட்கைவேர் வீழ்த்துப்பின்
காத லுங்களிப் பென்னுங் கவடுவிட்
டோது மின்னல்காய் வீதல்கனி யுண்டேன். (ருச)

சுரிகு ழன்மட வார்சுகந் தேடியே
யுரிய பொன்னை யுதவின னூண்டயிற்
பிரிய மோடுகைப் பற்றினன் பேதையேன்
புரியுங் குற்றம்பொ றுப்பையென் னையனே. (ருகந)

இந்தி யம்பத் திடர்செய்து நிற்பதால்
வந்தித் துன்னை வழிபட லெவ்வித
மந்தி வெண்பிறை சூடுமென் னத்தனே
புந்தி யிந்துநின் பொன்னடிக் காட்கொளே. (ருகச)

சிவசி வாவென்ப ரேபெருஞ் செல்வர்கள்
சிவசி வாவென்ப ரேசென்மந் தீர்ந்துளார்
சிவசி வாவென்பர் தேகஞ்சி வாலயஞ்
சிவசி வாவென்ப ரேசிவ ஞானியே. (ருகரு)

தேக போகத் தியக்குண்டு தேயுமென்
மோகந் தன்னை முனிய வரியதோ
வேக மாய்ப்புரம் வேளிவர் மெய்கெட
வேக ஞய்ச்சினத் தீக்கீந்த வீசனே. (ருகசா)

மோக பாசங்கண் மூடிய மூர்க்கனேன்
சோக முண்டு துயின்றது போதுமே
போக நீக்கிப் புணர்ப்ப புணர்ப்பைபேற்
றேகந் தோன்றல்போய்ச் சித்துரு வாவனே. (ருகள)

பீற்றற் கூடு பெருமலக் கூடுதண்
[illegible]டைத்தயன் கட்டிய கூடுபுன்
[illegible]லக் கூடு துவர்துவக் கூடுவெங்
[illegible]றற்பிரிக் குங்கூடென் னெஞ்சமே. (ருகஅ)

[illegible] நிற்பவர் தன்னை யுணர்ந்தவர்
[illegible] நிற்பவர் சன்ம மறுத்தவர்
[illegible] நிற்பவர் தத்துவ மோர்ந்தவர்
[illegible] நிற்பவ ரானந்தத் தாழ்வரே. (ருகக)

பொய்ய ஞகினன் புன்மைய ஞகினன்
வெய்ய காம விடனென வாகினன்
றுய்ய சற்குரு வாஞ்சொக்க லிங்கமே
செய்ய ஞகத் திருத்துதல் செய்வையே. (ருஉய)

சித்த சுத்தி தெளிவுறக் கைக்கொளீ
பத்தி செய்யப் பரமக மாகுமே
தித்திப் பாகச் செவியுண் சிரவணத்
தத்தம் பற்றி னகண்டம தாகுமே. (ருஉக)

நான்முகா விந்த நானிலத் தென்னைப்பல்
கான்மு றைபடைத் துங்கடுங் கூற்றழித்
தானெ னிற்சமர்த் தென்னுள நாதலா
லூன டைத்தலோ யன்றே லுறுதிசெய். (௫௨௨)

சரண தாமரை தந்திடிற் சங்கரா
மரண மாம்பகை வந்தெனை மன்னுமோ
புரண போதனே பூமி யடங்கலுந்
திரண மாயிற் சிறியனுந் தோன்றுமோ. (௫௨௩)

தேறி னார்களே செம்பொருள் கண்டவர்
தூறி னார்களே சொன்மட்டி னின்றவ
ரீறி லாத விறைவ நினையன்றி
வேறி லாதெனை யின்னவைத் தாள்வையே. (௫௨௪)

அருத்த முடனே யன்புறு மக்களுங்
கருத்தி னாயிற் கணமு நிலையல
வொருத்த னுயல கெங்கு மொளிர்வுறுந்
திருத்தன் சேவடி சேர்வை நிலையதே. (௫௨௫)

இடையு மின்றி நிறைந்திலங் கெம்பிரா
னடைய வுமவ னாகி யடர்வதாற்
கடைய னுக்கிடம் வேறுகா ணுமையிற்
றடையொன் றின்றித் தருவன் கருணையே. (௫௨௬)

சத்தி யமில் சளக்கனென் றேவெனைச்
சுத்தி செய்திலை தொல்லுல கியாவையு
முத்தி யாலாயி னுன்னில்வே றல்லவாய்
வைத்தி ருப்பதி னாலோசொல் வள்ளலே. (௫௨௭)

ஆவ தெல்லா மகண்டத்து ளாயினுற்
போவ துமது தன்னினன் றேபுக
றேவ னன்றிமற் றில்லை யெனவுணர்ந்
தாவ லோடும டங்குதி நெஞ்சமே. (௫௨௮)

அகர்த்த னாக வெவனடை வுற்றனன்
சகத்தின் றுக்க சுகங்களிற் றாழ்ந்திலா
னிகத்தி ருக்கினு மேத்தும் பரத்துள
சுகத்தி லென்று மழுந்துவ துண்மையே. (௫௨௯)

அன்னை யன்பின் வளர்த்த வருஞ்சிசு
மன்னும் பித்தம்வந் தெய்தி மருட்டினுந்
தின்னு மௌடத மீந்ததை[illegible]தீர்ப்பபோன்
மின்னுஞ் சொக்க வெனைமறுத் தாள்வையே. (௫௩௰)

மூத்த ரென்று முனிவரை யனாடினன்
பித்த னென்றென்றும் பேசிலர் மோனத்தாற்
சுத்த னேநின் றுணையடி யிந்துபுன்
மத்த னாயினும் வாழ்விக்க வேண்டுமே. (௫௩௧)

பிரபு வென்பவர் பேரறி வாளர்கண்
ம[illegible] தென்பன வன்னர் வழிப்பட்டோ
ரி[illegible]லென்பதிக் காயங் கொணருத
[illegible] தென்ப துயர்நெறி நிற்றலே. (௫௩௨)

[illegible]லை வாழு நிமலவென் சிந்தையாங்
க[illegible]ன் மேற்கழ லுற்றிடிற் கன்றுமென்
செ[illegible]லை வெள்ளிவெற் பூன்றி யுரத்தபின்
பு[illegible]ல னுள்ளுநென்ற வெண்ணினை போலுமே. (௫௩௩)

என்னை செய்கினு மென்மனந் தீய்ந்தில
வின்னல் செய்தது மிப்பவ மட்டுமோ
வன்ன தையர னேயறி யாய்கொலோ
மன்ன வாவதை மாய்த்தருள் செய்வையே. (௫௩௪)

கிளைத்தெ ழுமன தீயுங் கிலேசத்தா
விளைத்து நொந்தன னென்றுமோர் பக்கத்தே
தளைத்த பாசமுந் தன்னையு ணரொணா
விளைத்த மையன் மிகுத்ததோர் பக்கத்தே. (௫௩௫)

காமக் குரோதங் கலந்ததோர் பக்கத்தே
தீமைச் சேனை செறிந்ததோர் பக்கத்தே
நேம முற்று நெகிழ்ந்ததோர் பக்கத்தே
தாம தக்குணஞ் சார்ந்ததோர் பக்கத்தே. (ருகசு)

ஆசை கோப மடுத்ததோர் பக்கத்தே
யீச னேச மிழந்ததோர் பக்கத்தே
வாச னைபல வந்ததோர் பக்கத்தே
பேசும் பொய்யின் றொடர்ந்ததோர் பக்கத்தே. (ருகஎ)

இன்ன வாறிவை யெஞ்சா னுடம்பினிற்
றுன்னி னுலது தூய்மைய தாகுமோ
வன்ன தையொன்றோன் றாக வகற்றவு
முன்னி னுன்முடி மோவாயு ளுள்ளவோ. (ருகஅ)

இரவி முன்னிம மேகல்போ னின்னருள்
விரவி னியாவும் விலங்குமற் றொன்றினுற்
கரவு மோகங்கை கூடிய கத்தனே
பரவு மன்னதென் பால்வைத்த தென்னையே.
(ருக-ரு)

ஒட்டி யென்வினை யுள்ளஞ்சி ராக்கிமெய்
காட்டி மற்றுள காரண காரிய
மேட்டி மையோடு கீழ்மை விளக்கியின்
னூட்டி னல்லவ ளுக்கியாள் சொக்கனே. (ரு ம)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பஞ்ச பூத மொன்று கூடிப் பௌதிக வுலக தாய்
மிஞ்சு போத வொளி மழுக்கி மீத டர்ந்த தைம்புல
னஞ்ச லற்ற டைந்த கத்தை யண்மி நின்ற தாதலி
னெஞ்ச மேதூ தேகி யாண்டா னிடை யுணர்த்தி மீள்வையே

நாம மென்னு மொரு குணங் கறித்தெ ழுந்த கத்தடைந்
தூம வார்கு ழலின் மங்கை மீது துன்னி யீர்த்ததாற்
சேம நற்கு ணங்கள் குன்றுஞ் சித்தெ ழுந்து நெஞ்சகிட்
டாம னுய்வி லங்கு மாண்டான் கழற்கு ணர்த்தி மீள்வையே.

ஓசை யூறு ருவ மிரத முற்ற கந்த மீதெழுந்
தாசை யாகித் தத்தம் விடயத் தழுத்த தீர்த்த தால்வெகு
மோச மெய்து நெஞ்சே யிப்போ மூன்றெ டூழ்ந்து தூதுபோய்க்
காசை நீத்தி லங்கு மாண்டான் கழற்கு ணர்த்தி மீள்வையே. *

வீடு ணர்ந்தோர் கூறு நூலின் மேல்வி ருப்ப மற்றுயர்
மாட கூட மானி லத்தில் வாவி யாசை மன்னிமே
லோட வேக முற்ற நெஞ்சே யுடனெ ழுந்து தூதுபோ
யீடி லாண்டான் கழற்கு ணர்த்தி யிக்க ணத்தின் மீள்வையே. *

என்வி டென்கா டென்பெண் டாக விலங்கு தூல விடயமு
மென்புத் தியென் சித்த மென்றே யிலங்கு சூக்க விடயமு
மென்சு ழுத்தி யெனதஞ் ஞான மென்ற வேது விடயமுந்
துன்ன னெஞ்சே தூது போகித் தூயற் குரைத்து மீள்வையே.

ஆதி யந்த நடுவு மற்ற வாண்டா னண்டை தூதுபோய்த்
தீது றுமி வற்று ளாழ்ந்து தேக மூன்று நலியுமென்
சேதி யோடு மவன்வைத் தாளுஞ் சித்தை யியின் வாழ்வனென்
றோதி யன்ன தற்கவ னுரைக்கு மாற்றம் புக னெஞ்சே. (ருசசு)

நனவிற் றோன்றும் விவித மான நாம ரூபப் பொருளையுங்
கனவிற் றோன்று பவற்றை யுங்க ருத்த தென்று ணர்கிலான்
றினம வன்று யரை யாயின் செனன மரண முறுவல்சிற்
கனம ளிக்கி னுய்வ னென்று கழற்கு ணர்த்தி மீள்வையே. ருசஎ

கண்ணை மூடி னூலு மெண்ணில் காசி னிக டோன்றின
வெண்ண மூடி னூற்சு ழுத்தி யீர்த்த கழிற் றள்ளின
திண்ண மாய்வி ழிப்பி னுமுன் செப்பு முலகங் கண்டன
வண்ணன் முன்றா தேகி யித்தை யறிவி யென்ற னெஞ்சமே.

பந்த முற்றோ ரெவரை யும்மோர் பார்வை யாற்ப ரஞ்செய
வந்த விறைவ னூத லினென் மாச றுத்து ணர்தரு
மந்த காச மேன்ம யக்க மாயினு னெனச் சொலிச்
சிந்தை யானந் தத்திற் றூது சென்று மீடி விரைவினே. (ருசகூ

இருள்வி ழூங்கி யொளியைக் காலு மெனது சொக்க லிங்கனி
னருள்வி ழுங்க வாசை யெய்தி யவற்குத் தொண்டென் றடைந்த
கருளிற் றெருள்சற் றில்ல னாயி னுஞ்சிற் கனம தாக்கிட [னன்
மருளி னெஞ்சே தூது சென்று வற்பு றுத்த றக்கதே. (ருரும)

வேறு.

கண்வாய் மூக்குட் கலந்தம னனேசெம்
புண்வா யோனி புகுந்தது போதுமே
பண்வாய்ந் தின்னமு தாமூவர் பாடலைத்
திண்வாய் நாத்தழும் பேறச்செப் பென்றுமே. (ருருக)

கண்ணுக் கெட்டான் கரணத்துக் கெட்டிடா
னுண்ணெக் காக வுருகுவர்க் கெட்டுவான்
தண்ணென் கொன்றையின் றாரோடு கங்கையும்
வண்ணச் சேஞ்சடை வைத்த பரமனே. (ருருஉ)

சகத்தைப் பார்த்துத்தத் தளித்ததுஞ் சென்ற
வுகத்தைப் பார்த்துள்வெ தும்பினதும் மொளிர்
சுகத்தைக் காணு துழன்றதுஞ் சொக்கனே
யகத்தைக் காட்டி னனைத்து மொழியுமே. (ருருங)

முற்றும்.

ஆ திருவிருத்தம்- ருாருங.

சத்திக் குறுவிருத்தம்.

பொன் மலியும் புவன மடங்கலுந்
தன்ம யமெனச் சால்பு விளக்குறுஞ்
சின்ம யானந்தத் தேவிசெஞ் சீரடி
புன்மை யேற்குப் பொருந்துந் துணையதே. (க)

துணைக்க ரத்திற்பா சாங்குசத் தோடுபூங்
கணைக்க ரும்பின் சிலையுங் கவின்பெற
விணைத்த கோலமுங் காட்சிதந் தென்மனம்
வணக்கி யின்ப மளித்தருள் வாரியே. (உ)

வாருங் கூந்த லழகும் வரதமு
மாருஞ் சங்கம் வளையு மபயமு
மேரு லாவ விலங்குநா ராயணி
கூரி லானுக்குன் காட்சி கொடுப்பையே. (௩)

பய்ய ரவப்ப ணியுங்க பாலமும்
வெய்ய வன்னி யுடுக்கும் விளங்கவிர்
செய்ய மேனி திகழு முருத்திரை
யய்யயே நல்ல காட்சி யளிப்பையே. (௪)

பைங்கி ளிப்புரை மேனி பவளவாய்
செங்கை யாருஞ் சிலேகுல நீலப்பூ
பங்க மற்றநாற் பத்துமுக் கோணத்துட்
டங்கு முப்புரை தந்தருள் காட்சியே. (௫)

காட்சி யானவிக் காமினி தாங்கரு
மீட்சி யிற்றுயர் வீழ்ந்து மகிடவின்
பூட்சி சேதித்துப் பொன்முடி யேனட்ட
மாட்சி யிற்செய்யு மம்மையே காப்பையே. (௬)

காக்க வுங்கை விடவுங் கணத்தினி
லாக்க வுமவை தழிக்கவு மங்கிலே
போக்க வுமுற்றும் பின்னம தாக்கவுந்
சேர்க்க வுமற்றுஞ் செயவல தருணமயோ. (௭)

அரிய [illegible]
பிரிய [illegible]
யுரிய காய [illegible]
விரியு மென்மலர்த் தாடர வேணுமே. (௮)

வேண்ட னீக்கன் முதலிய விட்டுமேற்
றாண்டி டாவிளக் குள்ளத்திற் றுன்னலைக்
காண்ட லாதி யறுத்தவ ளைக்கிளை
லாண்ட சோதி வளைந்தண்மிப் பற்றுமே. (௯)

பற்ற றுத்துப் பரகதி கூட்டினுஞ்
செற்ற மார்வச் சிறையினிற் சேர்த்தினு
மற்று மெவ்விதம் வைக்கினு மன்னேயே
யெற்றுக் கென்று தடுப்பவ ரியாவரே. (ல)

வருதல் போதலிவ் வையத்திற் றங்குத
லூரிய ஞயினு மேலிருந் தோர்சிசு
பெரிய கொப்பத்து வீழினும் பெற்றவ
டெரித மோடெடுப் பாளிது தோன்றுமே. (லக)

தோன்ற லெத்தனே சூழினு மேவுவேன்
சான்ற தாயொளிர் நின்னெளி சாரினே
யீன்ற தாய்தந்தை யேவரு மாய்நிகழ்
மூன்ற நாரணி புக்கிட மில்லனே. (கஉ)

இன்மை யுண்மைப் பொருள்க ளெவையுநின்
றன்மை யன்றியித் தாலத்தி லென்னுள
புன்மை யேனுயர் போதக்கண் ணற்றவித்
தின்மை நீக்கித் திருவடி யீவையே. (கங)

ஈத லற்ற விரக்கமில் லேற்குநின்
பாத தாமரை பாலிக்கி னம்மையே
யேத முற்றவென் னுள்ளமும் விள்ளரும்
போத மெய்திமெய்ப் பூரண மாகுமே. (கச)

மேதி னியிலுள் ளார்மயன் மேவிட
மாத ராகியு மாயைய தாகியு
மோதும் விச்சை யவிச்சையா யோங்கியுந்
தீதி லாடல் செயினெவர் தேர்வரே. (கரு)

தேறு வார்தெளி வில்லுணர் வாகியு
மாறு வார்மதி யின்மரு ளாகியு
மீறி லாவுமை யேயங் கிலங்கிஞ
லாறு வாரெவ ருன்னே யறிந்தரோ. (கசு)

அரவி னஞ்சையு மாற்று மௌடதந்
திரைசெய் மாயையைத் தீர்க்குமோ நின்னிரு
விரைசெய் பங்கயத் தாளன்றி வேறுண்டோ
தரையி னெங்குந் தனித்தனி தேடினே. (௧௭)

நேய மாக நிலவணி நின்மலன்
காயம் பாதி யளிப்பனைற் காசடை
சேய னேனீவ தென்னுள நின்னருள்
பாயச் செய்வதுன் பாரமென் னம்மையே. (௧௮)

அம்மை யென்றே யரற்றின் மருள்கெடு
மிம்மை யேயறி வானந்த மெய்துறு
மும்மைச் செய்வினை முற்று மழிவுறுஞ்
செம்மை யேயவள் சொல்வழி சென்மினே. (௧௯)

மின்னை நேருட லீயுமுன் பூமியி
லுன்னை யுன்னி யுருகு மனத்தொடு
வென்னை யானறி யும்வழி யீந்தரு
ளன்னை யேயென தாருயிர்க் காவியே. (௨௰)

ஆவி யேயடி யேனறி வாய்நின்று
சேவி யாப்பெருந் தீவினை வந்தெய்திப்
பாவி யேன்பவ வேலை படிகிறேன்
றேவி யேகரை சேர்த்தருள் பற்றியே. (௨௧)

பற்றற் றூர்தொழும் பார்வதி தேவியே
நற்ற வம்புரி யாமன நல்கினை
யற்றைக் கொண்டடை யுந்துய ராற்றிலன்
கற்றை வார்சடைக் கன்னியே வாங்கிடே. (௨௨)

வாங்கு நீர்க்கடல் சூழுமிவ் வையத்தே
யீங்கி னேனலந் தேன்மெல் லடியுனித்
திங்க ரும்பினுந் தித்திக்குந் தேவியே
யீங்கெ னக்கதை யின்பினி லீபொன்னே. (௨௩)

பொன்னைப் பூமியைப் புத்திர ரையெழின்
மின்னை வேண்டிலன் மேதகு தேவியே
நின்னை வேண்டின் னின்னருள் வேலைதாழ்
தன்னை வேண்டினன் றன்னந் தனியனே. (௨௪)

தனிய னென்றெனைச் சால நினைத்தியோ
கனிவில் புன்மனங் கன்மம் பலசென்மம்
புனித மில்லுடல் பூதங்க ளாரணி
யினிய கேழொ டெழில்பெற் றுகந்தனே. (௨௫)

கந்த மாமலர் சாத்தக் கருதிலன்
சிந்தை யொன்றிநின் சேவடி யேத்தில
னந்த கன்வந் ததட்டிலென் செய்குவ
னெந்தை யாயு மிலங்கு கௌரியே (௨௬)

கௌவை நீரினைக் கார்வளி தின்வந்தே
வௌவி யுண்டுவர் மாசுத்தி யாக்கல்போற்
றௌவை யேனுறும் பந்தங்கைக் கொண்டுமேற்
செவ்வி தாக்கித் திருத்துவ னன்னெஞ்சே. (௨௭)

சேய்க ளிலொன்றைத் தீமனச் சேயெனத்
தாயர் கைவிட றக்கதன் றென்றுநீ
தூய நீதிகள் சொற்றனை யாதலி
னுயி னேனம்பி னேனென்ற னன்னையே. (௨௮)

அன்னை யேயென் றாற்றியு மேனியை
மின்னை நேர்சொப் பனத்தினு மேவிலன்
முன்னைச் செய்வினை மோக மொழித்திலன்
பின்னை நாயினன் பேரன்ப ஞேபொன்னே. (௨௯)

பொன்னை யொத்தொளிர் போதச் சொரூபியே
யுன்னை நீமகிழ் வோடளிப் பாயெனி
னென்னை யானுமின் போடெதி ரீகுவன்
பின்னை யாரொடும் பேசிடத் தக்கதே. (௩௰)

தக்கோ னல்லனின் றாளைநி னைக்கிலன்
மிக்க கீழ்மைக்கண் மேவியு நாணிலன்
செக்கர் வானவற் கைந்தொழி மீற்றினின்
கைக்கு ளாக்கினை காப்பதெவ் வேளையோ. (௧௧)

வேளைப் போலெழின் மேனியுங் கேட்டிலன்
காளை யாம்பரு வத்தைக் கருதில
னாளை நீடித் திருக்க நயந்திலன்
றாளை வேண்டினன் றந்தரு ளம்மையே (௧௨)

அம்மை யேகடை நோக்க மளிக்கிலியா
னிம்மை யேயின் புறலுனக் கின்பன்றோ
வெம்மைத் துன்பொழி மென்சிசு நோக்கியே
தம்மை யின்புறல் போலதன் முன்னரே (௧௩)

முன்னைப் பல்வினை மூண்டெழுந் தேதுயர்
தன்னை யியினுஞ் சண்டன் வருத்தினுந்
தன்னை யானவஞ் சாலம றைக்கினு
னின்னை நாடுமு ளந்தா னிமலையே. (௧௪)

மலையெ னத்துயர் வந்து பொருந்தினு
மலையெ னப்பல சென்ம மடையினுங்
கொலைகொள் வென்னர கங்குடி யேறினும்
புலைநெஞ் சேயடை பொற்கழற் பத்தியே. (௧௫)

பத்தி பண்ணிலன் பற்றினை நீத்தில
னெத்துக் காவனென் றெண்ணிநீ கைவிடேல்
சுத்தி செய்துளத் திற்சுக மன்னவுங்
கத்தி னேன்கழ றந்தருள் கன்னியே. (௧௬)

கன்னி யென்றுங்கணவனு ளாளென்று
மின்னும் லோகங்க ளீன்றவ ளென்றுமே
யுன்னு வாரவ ருன்னிய வண்ணமே
மன்னு வாளடி மாண்புற வெண்ணிடே. (௧௭)

எண்ணில் சென்ம மெடுத்து மிளைத்திலன்
புண்ணி ணுறுடல் பொய்யென் றறிந்திலன்
புண்ணி யந்தவ மொன்றும் புரிந்திலன்
பண்ணி னேர்மொழி யாய்பற்றிக் கொள்வையே. (௩௮)

கொள்ளி னுமுன் குறைகழ லெய்துவன்.
றள்ளின் வேறிடஞ் சார்தற்கு முள்ளவோ
வெள்ளி னெண்ணைபோ லெங்குநீ யுண்மையா
னள்ளி ருணனு காம லழிப்பையே. (௩௯)

அழிவில் விண்ணவ ராதிய பண்ணவர்
பழிய கற்றிடும் பார்வதி தேவியே
யொழிவில் சென்ம முனைக்கொடு பெற்றனன்
கழுவ னிற்பெற்ற தென்னை கழறிடே. (௪0)

கழற வாயுள காணவுங் கண்ணுள
் முழற லற்றுத் துதிக்க மனமுள
புழற ரிக்கக் கமலையு ளாள்கொடு
மழன ரகினி நீத்தற் கரிதன்றே. (௪௧)

அரிய யனரா ளுருமுத் தேவர்க்குப்
பிரிய மாமகள் பெண்டன்னை யாயினை
யுரிமை யாயெனக் கன்னையா யுற்றிட
லருமை யோபர மானந்த வல்லியே. (௪௨)

வல்ல நெஞ்சே வகுப்பது கேட்டியான்
மெல்ல மெல்ல விளங்குமை பாதத்தைச்
செல்லச் செல்லச் சிவானந்த மாக்குவாள்
சொல்லு மென்னுரை சோதித் தறிவையே. (௪௩)

சோதி யேசுட ரேசுக வாரியே
நீதியே நித்தி யானந்த ரூபியே
யாதி யேயகி லாண்டமெல் லாநிறை
வேதி யேகை விடாதெனை யாட்கொளே. (௪௪)

கொள்ளத் தக்கது கோதறு ஞானமே
விள்ளத் தக்கது மேலாமுன் னாமமே
நள்ளத் தக்கது நாரணி பூம்பதந்
தள்ளத் தக்கது தத்துவச் செத்தையே. (௪௫)

செத்துச் செத்துச் செனித்துஞ் சலித்திலேன்
பற்றிப் பற்றிப் படைத்துஞ் சலித்திலாய்
விச்சை பிந்திடின் மேலுமோ வித்துன்ப
மெட்டு மிவ்வழு யற்சையோவ் றின்றியே. (௪௬)

இன்றுளே னாளை யில்லே னெனச்சொல்வ
தன்றி யேயழி யாமலி ருப்பனோ
மன்ற லங்குழ லேவளர் சோதியே
நின்ற நாளையி னோர்ந்தருள் பத்தியே. (௪௭)

பத்தி யோடுறுஞ் சென்மங்கள் பற்பல
வெத்த லத்தி லெடுக்கினு முத்தியே
யத்தை நீங்கி யடையும் பிறப்பினை
நத்தி லேனெங்கு மாய்நின்ற நாரியே. (௪௮)

நாரி மண்பொன்னை நாடுமூ வாசையை
யோருங் கூறுநா ருக்கிய திலொன்றைத்
தேருஞ் செம்மலர்ப் பாதத்திற் சேர்த்திடி
னூரு முத்திநற் சித்தி யடையுமே. (௪௯)

அடைய லோகங்க டன்னு ளடக்குவா
ளுடன்வி ரிப்பாளஃ துள்ளு மொளிருவா
ளிடைய றாது வெளியு மிலங்குவாள்
கடையின் முற்றுந்தா னுக்கொண்டு காப்பளே. (௫௰)

காப்ப தற்கொரு கைம்மாறு வேண்டிடா
ளாப்ப சைத்த குரங்கொத் தலைநெஞ்சே
பூப்ப லகொண்டு பொன்னடி பூசித்து
நாப்பி ளக்கத் துதிபல நாட்டிடே. (௫௧)

காட்டை யாளினு நற்கலை கற்பினுங்
காட்டி லேகினுங் காவி புனையினுந்
தீட்ட றத்தின முஞ்சுசி செய்யினுங்
கேட்டி டாதம்மை கிண்கிணி யோசையே. (௩௨)

ஓசை யாயு மொளிருவள் பாதத்தை
யாசை செய்பவர்க கக்கணந் தோன்றுவா
ணேச மில்லவர்க் கென்றுநோர் பட்டிடா
டேச விர்சிவை தன்விளை யாட்டிதே. (௩௩)

இதுவ துவெனச் சுட்டவு மெட்டிடாள்
யதிக டன்னறு பூதி யதாகுவாள்
கதிர்க ளாயிரஞ் சேர்ந்தெறி காந்திக்கு
மதிக மாகவென் னன்னைநி கழ்வளே. (௩௪)

நிகழ்த லாதிமுக் காலமு நீங்கினள்
புகழுந் தேயமும் பொங்கொளிர் வத்துவுந்
திகழ்ப ரிச்சேத மின்றிச் செறிகுவா
டெகழில் சீரினைச் சொல்லத் தொலையுமோ. (௩௫)

தொலையும் பூதமைந் தாகவுந் துன்னுவா
ணிலையி லிந்திய மாக நிறைகுவா
ளலையு மந்தக் கரணமு மாகுவாள்
கலையு மத்தமு மாவாண்முக் கண்ணியே. (௩௬)

கண்ணி னுள்ளுங் கருமணி யாகுவாள்
பண்ணி னுள்ளு மிசையாய்ப் பரவுவா
ளெண்ணி லிச்சை யனிச்சையு மாகுவாண்
மண்ணிற் றங்குயிர் மற்றது மாவளே. (௩௭)

ஆவ லுற்றிவ் வகிலத் துதித்தலுஞ்
சேவ டித்துணை சேரம றத்தலும்
ஜீவ னும்பினர் மீட்டுமெவ் வாறுறப்
பாவி யேற்கெவர் பாலித்த தம்மையே. (௩௮)

தம்மைத் தாமுணர்ந் தாரது சங்கமு
மும்மை தீர மொழிநூலின் வேட்கையுஞ்
செம்மை ஞானமுஞ் சேர்வயி ராக்யமு
மிம்மை யேதரல் வேண்டு மிறைவியே. (௫௯)

இறைய ளவுமி ரப்பவர்க் கீந்திலேன்
குறைக டீரக் கொடுப்பன கொண்டிலே
னிறையைப் போல நடுநிலை நின்றிலே
னறைய முற்றுமோ வன்னையென் பொய்மையே. (௬௰)

பொய்யை மெய்யைப் பொருந்த வுணர்ந்திலா
வய்ய நெஞ்சா லறியவொண் ணாததே
துய்ய சுவாநு பவத்தினிற் றோன்றுமே
செய்ய சிற்சத்தி செம்மலர்ப் பாதமே. (௬௧)

பாத லத்தினும் பன்றிய றிந்தில
மீது தேடியும் வேத னறிந்தில
வாத வன்போ லொளிரத்தன் பங்கியைக்
காதல் செய்யிற்கண் ணில்லனுங் காண்பனே. (௬௨)

காண்ப வன்காட்சி காட்சிப் பொருளெனப்
பூண்ட தாமுப் புடியற்றுப் போதமாய்ச்
சேண்போ லெங்குஞ் செறிந்திலங் கன்னையே
வீண்போ காதுமே வாமன்மே வென்னெஞ்சே. (௬௩)

நெஞ்சி னெக்குநெக் காய்நின் றுருகிக்கார்
மஞ்செ னக்கண்ணீர் வார வழுதழு
தஞ்சி னேனென் றரற்றிடி னன்னைவந்
தெஞ்ச லில்லமு தீந்தருள் வாண்மன்னே. (௬௪)

வாட்ப டைகொடு வந்திடுங் கூற்றனுக்
காட்ப டவோவ மைத்தனை யன்னையே
நாட்செ லச்செல வார்த்திக நண்ணுமே
தாட்க டிமையாய்ச் சார்வதென் னாளிலே. (௬௫)

நாளைச் சிந்திப்பா மென்னி னமனுமெவ்
வேளை சந்திப்பே னென்று விரைகுவான்
கேளை யேவுமை யைக்கீழ்ப்ப ணிந்தவ
டாளை மேவத்த ரித்துக்கொள் பத்தியே. (௬௬)

பத்தி சற்றற்ற பாமர நெஞ்சமு
முத்தி பற்றுறு மோகவன் பந்தமுஞ்
சித்தத் தேதுயர் செய்தல்போ தாததோ
வெத்துக் காக வெமனையின் றுயன்னே. (௬௭)

அன்ன மாதியைங் கோசத்துக் கப்புற
மன்னி நிற்பான் மலரடி பெற்றிடின்
முன்னை வல்வினை முற்றுமொ ழியும்பி
னென்னை தான்கிடை யாதிவ் வகிலத்தே (௬௮)

அத்த மும்மனை யாளொ டடிமையுஞ்
செத்த போதினம் பின்றுணை செய்வரோ
வித்தைக் கைவிட் டிமையவள் பாதத்தைப்
பற்றி னெஞ்சே பரகதி வாய்க்குமே. (௬௯)

வாயை மூடி மௌனமா யென்பயன்
பேயைப் போன்று நூல் பேசினு மென்பயன்
சேய தாயுமை சேவடி சிந்திக்கிற்
றூய தாகித் தருவணன் முத்தியே. (௭௰)

முத்தி தன்னினு மொய்த்துள சுற்றத்தோ
டொத்து வாழ்தலின் பென்னவு ணர்ந்தயான்
பத்தி செய்துநின் பாதம டைவனோ
சத்தி யேயரு டந்தெனை யாட்கொளே. (௭௧)

கொள்ளத் தக்கதுங் குற்றமென் றென்றினைத்
தள்ளத் தக்கதுந் தாரணிக் கண்ணுண்டோ
வுள்ளி னும்புறம் பெங்கினு மாயொளிர்
தன்னை யென்னைத்தா னுய்க்கொண்ட பின்னரே. (௭௨)

பின்னம் போலக் கடவின் பிறங்கினு
மின்னு பாதியை நீக்கில்வா னென்றதா
மின்ன தன்மைபோ லென்மருள் கெட்டிடி
லன்னை யேதா னெனவரு ளாக்குமே. (௭௩)

ஆக்கை யினிலை யாமையு மெங்கணும்
போக்கி லாமையும் புல்லறி வான்மையுந்
தாக்கி நாயேன் றயங்கலை முக்கணூற்
பார்க்கி னுந்தெரி யாதோ பவானியே. (௭௪)

வான ளாவிய மாமுதன் முக்கனித்
தேனுங் கைத்திடத் தித்தித் தொளிருவா
ளூனை யோம்பு முணர்வினுக் கெட்டிடாள்
ஞான நேக்கினர் நாடத் தெரிவளே. (௭௫)

தெரிசித் தேதுதி செய்யு மடியாரைப்
பரிசித் தாலுநம் பாவம கன்றிடும்
வரிசை யோடிதை நெஞ்சமே மன்னிடிற்
றுரிச றுத்துச் சுகக்கடல் சேர்வையே. (௭௬)

சேர லாமட்ட சித்திக ளெட்டையும்
பாரெ லாம்புகழ் பன்னிட வாழலாஞ்
சீரெ லாம்பெற்றுச் சேணி லுலாவலா
நார ணிபக நண்ணின் வலிவந்தே. (௭௭)

வந்தி யேயன்மித் தைநகர் மன்னிநற்
சிந்தை யோடர செய்தின னென்றலைப்
புந்தி செய்பவர் பொய்யெனக் கண்டிடா
ரிந்த மானிலந் தன்னையென் னெஞ்சமே. (௭௮)

மேனி யெங்கும்வெண் ணீற்றை விளங்கியென்
பானை போற்சிர முண்டிதம் பண்ணியென்
ஞன நற்கனி காய்வே ரருந்தியென்
றேன் மலர்ப்பதஞ் சிந்தைவை யார்களே. (௭௯)

வைத்த தேகம் வளர்பொரு ளாவியுஞ்
சித்தத் தைத்திருத் திச்சிவ மாக்குமோ
வித்தை முற்று மிமயவட் கீந்திடிற்
சுத்த சித்தாய்த் துலங்கவ ருள்வளே. (அ௰)

அருளைக் கொண்டிவ் வகிலத்தைப் பார்த்திடி
னருள தன்றிவே றொன்று மறியொணா
மருளைக் கொண்டிந்த மாநில நோக்கிடின்
மருள தன்றிமற் றொன்றுந்தோன் றாநெஞ்சே. (அ௧)

நெஞ்ச மேயிக லோகமாய் நேர்படு
நெஞ்ச மேபர லோகமாய் நின்றிடு
நெஞ்ச மோநர கேழாய்நி றைந்திடு
நெஞ்சைக் கொண்டவை யுநிலைப் பிப்பளே. (அ௨)

நிலைய தாயுட னிற்றலும் வாசியை
யுலைவி லாதுகும் பித்த லுடன்விடல்
கலையி லுட்கொள லாதிய கன்மத்தான்
மலைம கள்பத மன்னுமோ வுள்ளமே. (அ௩)

உள்ளத் தாலுள்ள வேயுமை தண்ணருள்
வெள்ளத் தாற்பற்றி மேல்வீ டளிப்பளே
கள்ளத் தாற்கவர் வேமெனி னெஞ்சமே
யள்ள லேழுங் குடியா யமர்வையே. (அ௪)

வையத் தார்களு மன்னவொண் ணாதது
வய்ய நெஞ்சின ரண்டக்கூ டாதது
நய்யு முள்ளத்தி னண்ணு மருட்கனி
பய்யப் பையப் பரசுகந் தேக்குமே. (அ௫)

தேக்கு வாள்பர மானந்தத் தேனினைத்
தாக்கு வாளெனைச் சாரும்புன் மாயையைப்
போக்கு வாள்துவி தங்கெடப் பூரண
மாக்கு வாள்பத மன்பிற் பணிமனனே. (அ௬)

மன்னர் வாழ்வுமிவ் வையகத் தேகன
வென்ன லாகுமென் னெஞ்சமே யுன்னிடேல்
சொன்ன மொத்தொளிர் தோகை யளிப்பளே
பன்ன ரும்பர மார்த்தநி லேயையே. (அஎ)

நிலேயி னிற்கினு நித்திரை செய்யினு
மலேத லாயினு மன்னம் புசிக்கினு
முலேத லாயினு முள்ளவெக் காலத்துஞ்
சிலேநு தற்பரை சேவடி சிந்தியே. (அஅ)

சிந்திப் போர்களுஞ் செம்மலர்ப் பாதத்தைச்
சந்திப் போர்களுஞ் சந்தமலர் கொடு
வந்திப் போர்களும் வாழ்த்தும் படிக்கரு
டந்திப் போதெனேத் தற்காத்தல் வேண்டுமே. (அகூ)

மேவு நாசி நுனிமேல் விளங்குறுஞ்
சேவ லர்ந்த விதழா யிரஞ்செறி
பூவ மர்ந்தொளிர் குண்டலி பொற்பதஞ்
சேவை செய்துள மேயங்ஙன் செத்திடே. (கூ0)

செத்தி டஞ்செனித் திட்டவி டத்தையும்
புத்தி யாலுட் புகுந்தவண் பார்த்திடி
னித்தி யானந்த மாகநி கழ்வுறுஞ்
சத்தி யேகதி யென்றடி சார்மினே. (கூக)

சார்ந்த வாறு தலத்தினுந் தங்குவா
ளார்ந்தி லங்கும்பு ருவமத் தியாவளாற்
சேர்ந்த வாசியுஞ் சீவனு மாகுவா
டேர்ந்த நெஞ்சமே தேவியைச் சேவியே. (கூ௨)

சேவி யாத தொழும்பனன் சீருறத்
தேவி யேகடை நோக்கஞ் செயத்தினங்
கூவி னேன்செவி கூர்ந்திலே யோவிந்தப்
பாவி நெஞ்சமும் பற்றிக் குதித்ததே. (கூங)

குதத்தி னின்று குதித்தெழும் வாசியை
யிதத்தி லேசுழி னைவழி யேற்றிப்போய்ப்
பதத்திற் கும்பிக்கின் மூலநோய் பாறியெவ்
விதத்தி னும்மேலை வாயில் விளக்குமே. (கசு)

விளங்க வாசியை நாவினுன் மீட்டியே
துளங்கு மூலத்திற் றுன்னவைத் தம்மையை
யுளங்கொ ளச்சிந்தித் துற்றமூக் கின்வழி
களங்க வாயு கழிக்கக் கைகூடுமே. (கரு)

கூடும் பின்கலை யால்வளி யுட்கொண்டு
நீடு கும்பித் துமையை நினைந்துபின்
னோட விட்டிடை யாலுள மேயுயர்
வீடு வந்து வெளிப்படு முன்னரே. (கசா)

முன்பின் னாக முறைப்படி செய்திடி
லென்பு போல வுடலு மிறுகிப்பைம்
பொன்போ லாகு நரைதிரை பொன்றிடுந்
துன்பொ ழிந்து சுகமும் வந்தெய்துமே. (கஎ)

எய்த ரும்புரு வத்தி னிடைவரும்
பொய்த விர்ந்த வமுதத்தை யேபற்றிச்
செய்த வத்தா னன்னுபியிற் சேர்த்தங்கார்
நொய்த வன்னி வெளிக்கொள நூக்கிடே. (கஅ)

நூக்கத் தண்மையா நொய்யுடன் முற்றுமே
தீய்க்கு நோய்க ளனைத்துந் தீர்ந்தேகிடுந்
தாக்கும் வெவ்வினை சால வழிந்திடும்
பார்க்குள் ளிந்த யோகநனி பண்ணிடே. (கக)

பண்ணு மக்கினி தாரணை பற்றினு
னண்ணும் வெவ்வழன் மீறிநற் சூடதாந்
தண்ணெ னுளிர் சாரு மமுதத்தை
யுண்ண நாயினேற் கூற்றுதி பைம்பொனே. (௱)

முற்றும். ஆக திருவிருத்தம் எசுரு.

நேரிசை வெண்பா.

ஆதியந்த மில்லாத வானந்த ரூபமதை
யோதி யுணர்த்தவல்ல வுத்தமா—பேதித்தே
நீரா னெனநிகழ்ந்து நீக்கருமஞ் ஞானத்தைக்
கோனுகி வந்தருளாற் கொள். (௧)

ஆக்கை யழிவுளதா மவ்வணமே யெவ்வனமு
நீக்கமுறுங் கண்டறிவாய் நெஞ்சமே—சாக்ஷி
யநுபவமுற் றுனந்தத் தாழிற் றிரிவாந்
தநுபவமு நீங்குமே தான். (௨)

எமமததி னுட்சருத்து மெண்ணினகங் காரமிறச்
சம்மதமாய்ச் சாற்றினுந்தற் சாக்ஷியினை—விம்முதலா
யோங்கும் பரவுருவா யோதலரி தாமிதனி
னீங்கா நிகழ்ென்னெஞ் சே. (௩)

அறிவறியா வெவ்வனத்தே யாசிரியன் சொற்கள்
பிறிவரிதாம் பேதமையைப் போர்த்தே செறிவரிதாஞ்
சின்மயத்தி னுள்ளே நிறம்பா வகைசெலுத்தி
யென்மயமெல் லாங்கரைத்த வே. (௪)

உற்பத்தி நாசமிலா தென்றுநிக ழொன்றையறி
விற்பத்தி யுள்ளவரே மேவுவார்—கற்பத்துந்
தாமே பரமமதாய்ச் சர்வபரி பூரணமாய்ப்
பூமேவி வாழ்வார் பொருந்தி. (௫)

உவமையிலா மாதவமே யுற்ற பெரியோர்
நவநவமா யேசுகித்து நாளுஞ்—சிவமேதா
னெல்லையறு மேகரச வின்பமெனக் கண்டொடுங்கித்
தொல்லையகல் வார்நெஞ்சே சூழ். (௬)

என்னை யறியா திருந்தநா ளுய்ந்திடவே
தன்னை யறிவித்த சற்குருவின்—பொன்னடியைப்
போற்றினு னெஞ்சே பொருந்தும் பிறப்பிறப்பை
மாற்றலாஞ் சொன்னேன் வழி. (௭)

காய முயிர்பொருளைக் காதலித்த காவலனை
நேயமுட னேபணியி னெஞ்சமே—மாயைமுத
லெல்லாமா யல்லதுமா யெங்குநிறைந் தேயொளிர
வல்லானு யாக்குவான் வந்து. (அ)

உயிரைப்பி ரேரிக்கு முள்ளுணர்வா யுற்றுற்
கயிறைப்பாம் பென்னுமுணர் காண்மோ—துயிலைச்
சாக்கிரத்தைச் சொப்பனத்தை தள்ளித் துரியநிலை
பார்க்கிறதை நெஞ்சே பதி. (கூ)

இக்குந் துவர்ப்ப விரசவுருவாஞ் சொக்கலிங்கம்
பக்கத் திருக்கிற் பயமென்னே—புக்கக்
கதிதருவான் ஞான கனந்தருவான் மேலா
மதிதருவா னெஞ்சே மதி. (ய)

நிட்டை நியமமுத னித்தியமுங் கைக்கொள்ளிற்
கட்டை கடைத்தேறக் காட்டிவிடு—மொட்டைத்
தலையாகி யென்னே தவவேட மிட்டென்னே
நிலையாநில் லாநெஞ்சே நீ. (யக)

ஆரு மறியாத வத்துவித வத்துவினைக்
கூரு மறிவுடையாற் கூடினு—னேரிற்
சகமனைத்துந் தானுய்த் தரிசிப்பாய் நெஞ்சே
சுகம்வலிதிற் றுன்னுஞ்சொன் னேன். (யஉ)

சித்தை யறியார் செகமன்றி யுள்ளத்தி
னெத்தை யறிவா ரென்னெஞ்சே—பொத்தைச்
சடமுள்ள போதே சனனந் தொலைக்குந்
திடகுருவை யென்றுமே தேடு. (யங)

பேய்போ லலைந்தாலும் பேசரிய மெய்ப்பிரம
மாய்வரிதா மென்னெஞ்சே யாவலுடன்—றூய்மையிலாப்
பத்தோ டெழுகருவி பாயுந் தொழிலறுக்கிற்
சித்தஞ் சிவமாகுந் தேர். (யச)

பூதமுத ணுதாந்தம் பொங்கொளியா யோடிக்கு
நாதனின் பாதத்தை நாடினல்—வாதையறுஞ்
சித்திவரு முத்தியுறுந் தேகோக மென்றலறும்
பத்திதரு நெஞ்சே பதி. (௰௫)

ஆன பிரணவஞ்சித் தம்பரமா மன்னதிலே
தானெழுக்கி னெல்லாச் சளக்கறுமே—யூனுடம்பின்
மேலாசை வைத்தியெனின் மேவும் பிறப்பிறப்பே
மாலாகி வந்தடுக்கு மால். (௰௬)

சுத்த வெளியின்னபே சூனியமென் பார்வாதப்
பித்த ரறிவென்னே பேச்சற்ற—சுத்தசிவந்
தானுகி யெங்குஞ் சடசித்த தத்தனைக்கும்
கோனுகி யோங்கல் குணி. (௰௭)

சொப்பனத்திற் ருேன்றரிவை தோய்சுகம தீவதுபோன்
முற்பவத்தின் வாசனையான் மோகத்திற்—றப்புலகம்
வேறுவே ருக விழிக்கெதிரிற் ருேன்றியரு
மீறிறுய ரீந்தனவே யெண். (௰௮)

அம்பரமாந் தேவுக் ககமு மமுதாக
வெம்பும் பொறிகறியா மேவிடினே—விம்பர்
திருக்காக வேயிலங்குஞ் சிற்சுகத்திற் ருேயுங்
கருக்குழியு மேவறழுங் காண். (௰௯)

மபாக்கும் வரவுமிலாப் போத மளித்தாலு
நீக்கமற வெங்கு நிறைவேனே—தாக்கற்ற
பூரணனே யோர்சொற் புகன்ருலு மாயையறுங்
காரணனே சொக்கலிங் கா. (உ௰)

மோனவிசா ரத்தினினே மூழ்குறவுஞ் செய்வையெனிற்
ருனவனு யென்றுந் தனித்தொளிர்வேன்—ஞானமிலேன்
சீலமிலேன் றீமையுளேன் செய்தவங்க ளொன்றுமிலேன்
வாலறிவ வென்னையுவந் தே. (உ௧)

காமன்கை யம்பழியுங் காரிகையா சையொழியு
மேமன் வரவொழியு மெக்காலும்—பூமிசையே
தேகமக மென்றலறுத் தேகபாத் தூடமூந்த
யோகமுறு முள்ளத்தோர்க் கே. (உஉ)

அஞ்ஞானத் தாளழியு மாசை கழன்றொழியு
மெஞ்ஞான வித்துண்டாய் வீறுமே—எஞ்ஞான்றுஞ்
சும்மா விருந்தொன்றாற் சுட்டப் படாதிலங்கு
மெம்மானே தானுகி னே. (உ௩)

மங்கா வளரொளியாய் மாபோத மேயுளதா
லிங்கா ரதனையகத் தில்லாதார்—கங்கு
லுருவம்போ லஞ்ஞான முற்றதெங்கே யன்றிச்
சருவமுமே பொய்யாகிற் றுன். (உ௪)

சீரியர்க்குட் சீரியரே தேசொளிருஞ் சித்தடைந்தார்
வீரியத்தை விள்ள வெவராலுங்—காரியமாய்த்
தோன்றுலக மத்தனையுஞ் சொப்பனமாய்க் கண்டதற்குச்
சான்றெனவே தாம்விளங்க லான். (உ௫)

பழுவென்பார்க் குப்பழுவாம் பல்வகையா லாயிற்
சுழுவென்பார்க் குச்சுழுவாய்த் தோன்று—மெழுதரிய
வேத முடிமீதே விண்ணைப்போ லேயொளிரும்
போத வடிவாம் பொருள். (உ௬)

எல்லாருங் காண வெளிதாமோ வேழவத்தை
வல்லாரே கண்டு மகிழ்வாரே—யல்லாதார்
மின்னர் மயல்கொண்டு மேதினிக்குப் புன்சுமையாய்
மன்னு விருத்தன் மதி. (உஎ)

பொன்னின் மலையடைந்த மன்னுயிரும் பொன்னுருவா
முன்னை யடைந்தார்க் குருவுனதாய்—மன்னி
லலையாவென் னெஞ்சத் தடர்களங்க முற்று
நிலையா யெதிர்நிற்கு மோ. (உஅ)

நல்லார் பலரிருக்க நாட்டார்கள் கூட்டாத
பொல்லா வெனையாண்ட புண்ணியா—வெல்லாமு
நின்சொருப மென்றே நிசாநுபவம் வந்ததும்பி
னென்சொருப மெங்கொழித்த தே. (௨௯)

அப்பில் வருமுப்பை யாங்கமல தற்பரம
மொப்பின் மனித வுருவெடுத்தே—யிப்பவத்திற்
றூயாகி வந்தாண்ட சொக்கேசா தக்கபொருள்
சேயே னிடத்துளதோ தேறு. (௩0)

ஆறுதலில் லாதுழலு மந்தகற்குக் கண்டிறந்த
வாறதுபோன் மன்னுள்ள மாசகற்றித்—தேறறிவாய்
வீற்றிருக்க வைத்த விமலமே நின்மகிமை
சாற்றவுமென் னாலாமோ தான். (௩௧)

கோதைச் சிதைத்தறிவிற் கூடி நிகழ்வதுவே
வாதையிலாப் பேரின்ப மாகுமே—வேத
மறையு நெறியிதுவா மல்லாத வெல்லா
மறையு நெறியாகு மால். (௩௨)

சீவே சுரசகத்தாய்ச் செப்பும்பல் பேதமெல்லாங்
கோவே யெனவுணர்விற் கொண்டக்கால்—வீவேது
முற்றுழியுங் கைகொடுக்கு மோடி யலைமனதைப்
பெற்றுழியு மைகெடுக்கும் பேண். (௩௩)

சத்தாகிச் சித்தாகித் தற்பரா னந்தமுமா
யெத்தாலுந் தேர்தற் கிசையாதாய்ச்—சுத்த
நிருமலமாய் நிட்களமாய் நிர்நாம ரூப
வொருபிரம நின்றெருளிரு மோர். (௩௪)

எண்ணாத வெண்ணமெலா மெண்ணித் தினந்தினமும்
புண்ணாதன் மட்டோ புகறற்கே—கண்ணாதி
பத்திந் திரியங்கள் பஞ்ச விடயத்திற்
றத்தி யலைகிறதே தான். (௩௫)

சொப்பனத்திற் கண்டதனைச் செப்பினிலே வைப்பவர்போன்
மைப்படியுங் கண்ணூர்பொன் மாடமுதற்—பற்பலவாய்
வய்யத்தின் றோற்ற மடங்கலுமே புந்தியிலே
மெய்யாகக் கொள்பவரே வீண். (௩௬)

வேண்டியவா வாண்டிடலா மிக்காளுய் வாழ்வுறலாந்
தூண்டிடா மெய்ச்சுடரிற் றன்னினுன்—மாண்டலத்தி
லுள்ள பொருண்மே லொழியாத காதல்கொண்
டெள்ள நடக்கினென் னும். (௩௭)

கண்ணுனுங் காண்பரிதாய்க் காசினிக டோர்வரிதா
யெண்ணுனு மெட்டரிதா யீண்டயன்மா—னண்ணுதாய்ப்
பாவாபா வங்கடந்த பாயொளியே சேயேனைக்
காவாய்வந் திவ்வுலகின் கண். (௩௮)

ஓசை பரிச முருவஞ் சுவைகந்தத்
தாசை யகன்ற வகமதனுற்—றாசைத்
துடைத்ததுவீ தென்றுன்னுஞ் சுட்டறுத்து நிற்கி
னுடைத்தொழுகு மானந்த முண். (௩௯)

ஏகமதா யெங்கணுமா யென்று மழிவிலதா
யாகமதி லங்கங் கமர்வதுவாய்—லோகமதி
லொன்றோடு மொன்ருதா யோங்கும் பரமுளத்தி
னன்ருகச் சொக்கே நடு. (௪௰)

காரியத்தைக் காண்பரதின் காரணத்தைக் கண்டறியா
ராரியக்கூத் தாடினுமஃ தாய்வுறுமோ—வீரியத்தா
லெட்டியெட்டிப் பார்த்தாலு மெட்டுமோ வேகவெளி
சுட்டினகப் பட்டிடுமோ சொல். (௪௧)

சுத்த மசுத்தஞ் சுகமசுகந் தோன்ருதார்
வித்தகரா யென்னெஞ்சே மேவுவார்—மத்த
முறுவாரே மெஞ்ஞான வாழ்விழந்து மோக்க
மறுவாரே யென்று மறி. (௪௨)

அந்தரத்தின் ருமரையா ரம்மலரை வந்திமகன்
கந்தர்ப்ப வூரெய்திக் காசடைந்தா—னிந்த
வுரைதனைமெய் யாக்கொள்ளு மோர்வினரே யுண்மையிலாத்
தரையனைத்துங் கொள்ளுவார் தான். (௪௩)

மூவவத்தைக் குள்ளே முயங்கிப் பலகாலு
மேவத்தை யொன்றே விளம்புதற்கே—சாவவத்தை
வந்தெய்தி னென்செய்வேன் மாதேவா வென்னுளத்து
வந்தெய்தி னெல்லா மறும். (௪௪)

எல்லாஞ் சிவன்செயலே யென்றுணரிற் சீவர்க்கே
யில்லாகு மோர்செயலு மென்றுமே—மெல்லவே
யிவ்வண்ணஞ் செய்கை யிறினியற்று கத்தாவு
மவ்வண்ண மற்றொழியு மாய். (௪௫)

பிரஞான மேபிரம மென்ற வுரைபேணித்
திரஞான மாநிற்பார் தேர்ந்தார்—தரைஞான
முள்ளளவுந் தன்னைத்தா னோரா ருயர்செல்வ
மெள்ளவு மில்லாரென் றெண். (௪௬)

உற்பவம தில்லையெனி னேய்வு மிலையாகுஞ்
செப்பும் வினையிலையேற் சேர்பிறப்பு—மப்படியே
மைப்படுமோர் வம்மிலையேன் மாயும் வினைமுற்றுஞ்
செப்பினர வாவித்தென் றே. (௪௭)

ஆங்கார முங்கெடுத்தே யைம்புலனின் வீறறுத்து
நீங்காத நின்மலனை நித்தியமும்—பாங்கா
ரவனேதா னாக வநுபவிக்கிற் பாராள்
புவனேசர் போற்றுவார் போய். (௪௮)

குணங்குறிகாட் டாதொளிருங் கோவை மிகவருந்தி
யெணமிறந் தெட்டுவா யென்னெஞ்சே—கணமு
நிலையில்லாக் காயத்தி லென்னதியா னென்னு
மலைவறுத்தா லஃதடையு மால். (௪௯)

அறிவா னறிவு மறிபொருளுந் தானாய்ப்
பிறிதின்றி யேவிளங்கப் பேணு—நெறியே
தருவான் றளர்வெய்தேல் சற்றேனு மஞ்சேல்
குருவாகி யாள்சொக்கன் கூர். (ருய)

பூதமுதற் றத்துவங்க ளத்தனையும் பொய்யென்றே
வேதம் வெளியாக விண்டிருந்துங்—காதலான்
மெய்யாகக் கண்டனையே வீணாக வாணாள்க
ளய்யோ வகலு மறி. (ருக)

சங்கற்ப மேசகமாய்த் தான்றோன்று மஃதழிவுஞ்
சங்கற்ப நாசமெனச் சாற்றுவா—ரிங்கற்ப
சொப்பனங்க டோன்றுதலுந் துண்ணென் றழிதலுமே
யொப்பாகுஞ் சான்றா யுணர். (ருஉ)

அகம்பிரம வஸ்மியென வோதுமறை யத்தத்தின்
சுகமடையின் முன்சகங்க டோன்றா—வகங்கெடினே
தானான தற்பரமாய்ச் சந்ததமுஞ் சிந்தையற்று
நானீ யெனவுணரார் நாடு. (ருந)

யாதொன் றிலையோ வதுமாயை யாமெனவே
யோதும்வே தாந்த முணர்கில்லாய்—பேதா
யிருப்பதுமுக் காலத் திறவாம லேயிருக்கும்
விருப்ப முடனதனை மேவு. (ருச)

ஏதமினின் னன்ப ரிதயத்து மென்னுளத்தும்
போதம் படரப் புரிந்தாயே—நாதனே
யிப்பிறப்பி னின்பாத மெய்தாது வீண்போமே
லெப்பிறப்பி னெய்து மினி. (ருரு)

தத்வமசி வாக்கியத்தின் சாரருத்த மாய்ந்தறியில்
வத்துவதா யேவிளங்க வைக்குமே—நித்தநித்தங்
காண்பொருள்கண் முற்றுங் கனவொக்கு மாதலினான்
மாண்புளமே பற்றாமல் வாழ். (ருசா)

# அநுபவநிலையம்.

உற்றுற்றுப் பார்த்தாலு மோங்கும் பரவுருவம்
சற்று முணர்வுறுமோ சாற்றக்கேள்—பற்றறுத்து
மேல்வீ டடைந்தாரை மேவினர்கட் கல்லாமன்
மாலறுமோ மற்றையர்க்கென் றெண். (௫௭)

அயமான்மா வாம்பிரமத் தத்த முணர்ந்தார்
சுயஞ்சோதி தானுய்த் துலங்கிப்—பயமறுவார்
பந்தப் படுகுழியி லாழ்ந்து பரமிழந்தா
ரெந்தவித மீடேறு வார். (௫௮)

அத்துவித மான வநுபவமே யாரமுதாய
மெய்த்தபர மானந்தம் வீழ்தேனுய்—சித்தஞ்சித்த
முண்டுண் டிருப்பாரே யொண்ணிதியர் மற்றையார்
பெண்டீரிற் பேதை யவர். (௫௯)

ஈந்துவக்கு மின்பமிலா யேற்றுவக்கு மின்பமுளா
யாய்ந்துவக்கும் ஞான மடைந்தில்லாய்—வாய்ந்தபுன்
முக்கரணம் புக்குநெறி முட்களுள வொக்கவடைத்
திக்கெனுளிர் சொக்கனடி சேர். (௬0)

சுத்த மறையமறையுஞ் சோதிச் சொருபத்தை
நித்த மகத்தமைக்கி னின்மலமாஞ்—சித்தந்
துறவாதார் மூவா தனைசூழத் தோகையரை
மறவாதா ராகுவார் மாண்பு. (௬௧)

சித்தாகுந் தேன்கடலிற் றினமு மயின்றிருந்தார்
சத்தாகச் சேடித்துத் தானிற்பா—ரெத்தாலு
மந்நிலையே மேலாகு மல்லாத வெல்லாமும்
மைந்நிலைய தாகு மதி. (௬௨)

காதும் வினைபலவுங் கன்மமும் வீரியமுந்
தீது முயர்சித்திற் சேர்க்குமோ—வேது
மறையா தகமடங்கி ஞன்ம வடிவா
யிறையே வசிதாளு மெண். (௬௩)

தெள்ளு முளத்தார் தெளிவாரே சித்துருவ
மெள்ளு முளத்தாரோ வெட்டுவார்—தள்ளுங்
குணமுடைய வென்னெஞ்சே கோதற்ற மெய்யைக்
கணமேனுங் கைவிடா தாள். (௬௪)

மறந்து நினையா மனம்வாய்க்கி லன்னா
ரிறந்து பிறவார்க ளென்றுங்—துறந்து
வனமடையி னென்னே வரைகாவி தோய்த்தென்
றணமடைய விட்டென்னே தான். (௬௫)

செத்துஞ் செனித்துந் திருக்கறியா யிவ்வுலகி
லெத்துக் குதவுவா யென்னெஞ்சே—மெத்தப்
படித்தாலு மென்னே பணமிருந் தாலென்
னடித்தாலு மென்னே நகை. (௬௬)

கத்தாவாய்ப் போக்தாவாய்க் கண்டான் மடநெஞ்சே
சத்தாதி தானறுமோ சாற்றக்கேள்—பித்தாகு
மஞ்ஞான நீக்கி யகம்பிரம மாயினு
லெஞ்ஞான்று மில்லை யிடர். (௬௭)

ஊத்தை யொழுகுடலை யோம்பற்க வென்னெஞ்சே
மாத்திரையு நில்லாமன் மாயுமே—ஆத்தன்
மொழியும் வழிசென்றுன் மோகமறுத் தின்பம்
பொழியும் பிறப்பிறப்பும் போம். (௬௮)

பொய்யைப்பொய் யாயறியிற் பூதலத்தி லென்றுமொளிர்
மெய்யைமெய் யாயறிய மேவுமே—மய்யலாற்
பொய்யைமெய் யாயறியிற் போதம் வருமளவு
மெய்யைப்பொய் யாயறியு மே. (௬௯)

வாக்கு மனமணுகா வான்பொருளைச் சொக்கேசா
நீக்கமற வென்று நிகழ்த்தவே—தீக்கின்ற
கள்ளமனக் கட்டறுத்துக் காசமனைத் தூர்துடைத்தே
தெள்ளித் தெளித்து விடு. (௭௰)

நிருவிகற்ப நிட்டையிலே நின்றவரே முத்தர்
-ருவியற்ப மேனுங் கதுவிற்—றருவிகற்ப
மாய்ப்புருடன் றோற்றல்போல் வையம் பலதோற்றி
யேய்ப்பவதற் குள்ளாவா ரெண். (எக)

சித்துஞ் சடமுந் தெரிந்தவர்க ளேசிவன்
முத்த ரெனநூல் மொழியும்மே—யித்தரையிற்
காண்பவையெல் லாஞ்சடமாங் காணுமறி வேசித்தா
மாண்பறிவா னன்கு மதி. (எஉ)

ஞான நெறிகாறு நான்கு நெறியுளதா
லானநெறி யொன்றடையி னுவனுடன்—மோனநெறி
சகவருமென் னெஞ்சே கரைந்து சிவனடியின்
மெய்வருந்தக் கூவி மிகும். (எங)

அறிவே சிவமாக வாரு மறியா
ரறிவே சிவமா யறியின்—னறிவேபின்
சித்தாய் விளங்கினுமென் சிற்சடமாய்த் தோன்றினுமென்
னெத்தாய் விளங்கினுமென் னே. (எச)

அத்துவித போதகமே யான்ம தரிசனமாம்
பெத்தந்தைத் தீர்க்கும் பெருமருந்தா—மித்தரையிற்
றேடக் கிடைக்குமோ செம்பொன் விலையுறுமோ
வீடகற் கென்னுள்ள வெண். (எ௫)

குணமூன் றுடையையாய் கூறிலது மில்லாய்
கணம்பிரியா தேயிருந்து காப்பாய்—எணமிறந்த
போதனே கோதில் புனிதனே யெங்குமுறை
நாதனே யென்றுளமே நாடு. (எசு)

சாதி குணங்குறிக ளொன்றில்லாத் தத்துவனே
சோதியுரு வாயொளிருந் தூயவனே—நீதியிலாப்
புன்மையே னுள்ளம் புதுக்குவையோ வன்றியினுஞ்
சென்மத் தழுத்துவையோ செப்பு. (எஎ)

எப்படியோ தோற்றங்க ளெப்படியே யீறில்லா
மெய்ப்பிரம மேயொளிர்தன் மேயினுன்—மைப்படியு
மஞ்ஞானத் தாலே யடர்நாம ரூபங்க
ளெஞ்ஞான்றுந் தோன்று திறும். (௭௮)

நிறைவகலா நித்தியமே நீடாழி சூழ்பார்க்
கிறையா யிலங்க லுணரிற்—கறையாகு
மோக மடர்வுறுமோ மொய்குழலார் மெய்புல்லச்
சோகந் தொடர்வுறுமோ சொல். (௭௯)

அடங்குஞ் சுழுத்திதனி லான்மா விருந்தும்
மடங்கலந்த தாலறிய மாட்டாத்—திடங்கலந்த
சொக்கனுரை கைக்கொளினே துக்கமொழிந் தக்கணமே
செக்கரொளி சிக்குமதைச் சேர். (௮௰)

புகலிடமில் லாவுளமே பொன்மண்பெண் ணாடி
யகலிடமெல் லாஞ்சென்று லாமோ—வுகந்தோறுந்
தேடி யடைந்ததென்னே செப்பா யெனதுரைகேட்
டோடிப் பரத்தே யொடுங்கு. (௮௧)

வாசாம கோசரமாய் மன்னி யொளிர்பரந்தி
னேசாநு சாரியாய் நின்றக்கா—லாசா
பிசாசங்க ளற்றொழிபு மஃதறிற்று னீயென்
சுசாதிய பேதம்போந் துன். (௮௨)

உன்பெருமை கண்டறியா வுன்மத்த னுயுழல்வேற்
கென்பெருமை யெய்துவே னீசனே—மின்பொருவு
மாக்கை யுளபொழுதே யையபந் திரிபறுத்துச்
சாக்கி நிலைதந் தருள். (௮௩)

பெத்தர்நன் முத்தரெனப் பேசு மிருவகைதான்
சித்த மடங்கிற் றெரியாதே—சித்தம்
விரியிற் பலவாக மேதினிக டோன்றித்
தெரிபொருள்கண் முற்றுமாந் தேர். (௮௪)

மறைமுழக்கும் வத்துவையே மாநிலத்துக் கேதாய்
முறைமுறையே யான்றோர் மொழிந்தார்—கறையகல
வென்னோர முஞ்சகச நிட்டை யினிலிருந்தே
யின்னே சுகவேலை யேகு. (அடு)

உத்தி யநுபவமோ டோதுஞ் சுருதிக்கு
மொத்திருத்தன் மேலா முயர்நடையே—இத்தரையி
லிம்மூன்று மொவ்வா தியங்க னடையலவா
யெம்மா தவருமிசைப் பார். (அசு)

மண்ணடுக்கும் வேதா மறுத்துமறுத் துப்படைத்து
முண்ணடுக்க மாற்றிலனே யோபரமா—நண்ணரிய
நீணாட் சிவனேச நீத்தொழிந்தேன் கண்டிலையோ
வாணாளி லேனும் வழங்கு. (அ௭)

ஆதரவொன் றின்றி யலைந்துழலு நாயேனைப்
போத மளித்துப் புரவாயோ—நீதில்
குருபன் னியையழித்த சந்திரனைக் கூர்ந்தே
யொருசிரசில் வைத்தவொளி யோய். (அஅ)

நாயி னடியுமு றுறுஞ் செருப்படியுஞ்
சியுகுமே னத்தசையுந் தித்தித்தார்—தீயேன்
படைக்கு மறுசுவையைக் கொள்வரோ பாங்காய்க்
கடைக்கண்ணா னோக்குவரோ காண். (அகூ)

அப்புறமு மிப்புறமு மத்துவித வத்திலங்கி
லெப்புறத்தில் யானின் றிலங்குவேன்—சொற்பெரியாய்
போதியா வென்றனக்கும் போத மளித்தாண்ட
வாதியாஞ் சொக்கே யறை. (கூ0)

தந்தைதா ளிற்றவருந் தன்மகவைக் கொன்றவருஞ்
சந்ததங்கல் வீசினருந் தன்றலையில்—விந்தையுடன்
வில்லா லடித்தவருந் மேற்பிரம்பா லோச்சினரு
நல்லாரென் றேகொண்டார் நாடு. (கூக)

வேதப் பொருளினனே வேண்டுவனீ தொன்றுகேள்
சாதல் பிறத்த றவிர்விடத்தை—யோதிற்
றடுப்பா ருளர்கொல்லோ சார்பாச முற்றுங்
கெடுப்பா ருளர்கொல்லேற் கே. (கூஉ)

என்னதியா னென்றவெலா மேற்பித்தேன் றற்பரமே
நின்னதரு ளென்னி னிலேநிறுத்தி—யன்னதாற்
கங்குலறுத் துங்கமில்போக் கங்கழிய வெங்கணுமே
செங்கதிர்போற் றங்கொளியாய்ச் செய். (கூங)

காலம் பெறற்கரிதே கன்னெஞ் சிளகரிதே
ஞாலந் துறக்கரிதே நாயேற்குச்—சீலமாய்
நிற்ற லதற்கரிதா நெஞ்சத்திற் பிஞ்சகனைப்
பற்றலின்மே லின்றரிது பார். (கூச)

இம்பரிருந் தம்பரினே யெட்டுங் கழைநிறுவிப்
பம்பரம்போ லாடினும் பாழுறுத்—தம்பம்போ
னிட்டையிலே தீவிரமாய் நின்று பரந்தானுக்
கட்டையுள மட்டுமே காண். (கூரு)

சடவண்ட மாதரமாய்ச் சத்தான குஞ்சி
யடைவினு தேயமுமே யாம்போற்—சடவசட
வாதார வாதேய மத்தனையுஞ் சித்தொன்றே
பூதார ணுய்ப்பொலியு மே. (கூசா)

பாழ்போகா நாளெல்லாம் பற்றிப் பரநிலையில்
வாழ்வாக வாழ்பவரே மாதவத்தோர்—தாழ்வாகும்
பொன்மண்பெண் பற்றிப் பொழுதவமே போக்குவா
ரேன்னுவா ரென்னெஞ்சே யெண். (கூஎ)

வாக்குமனங் காய மணுகாத வத்துவினே
நோக்குவார் தம்பணியை நோற்கினேற்—றுக்கற்ற
சிற்போத மாகத் திருத்துவா ராதலினு
லெப்போது மன்ன தியற்று. (கூஅ)

சொரூபானு போகா னரிசற்ற வத்தா
நிருபா திகமா நிமலா—கருமாற
வந்தாண்ட வள்ளலே வாசாம கோசரத்தைத்
தந்தாண்ட சொக்கவெனத் தாழ். (கூகூ)

மாண்டு பிறவாய் மறுமையினிற் றுன்பமுறு
யாண்டவனுஞ் சொக்க னடியிணையை—வேண்டியவா
பூசிக்கிற் பற்றறுத்துப் போதமுறு நெஞ்சத்தா
னேசிக்கி னின்மலமு மாம். (ா)

இவை ஒருவிகற்பத்தான்வந்தஇன்னிசைவெண்பா.

ஆயுணா ளுண்டதனி லத்தம்போ நற்றுயிலா
னோயின்ப மாசைபசி யுண்ணிளமை சோம்புகிழ
மாயவைக ணீக்கி யரனடிக்கா ளாகுதலென்
றுய்வாயென் னெஞ்சே யளந்து. (ாக)

செய்யனே நின்னையலாற் றேயத்தொன் றின்மையாற்
றுய்யரார் பொய்யரார் தூசே தெளிவேதே
யய்யந் திரிபே தடியவனே தாண்டானே
தய்ய விதனை யறை. (ாஉ)

இவை இருவிகற்பத்தான்வந்தஇன்னிசைவெண்பா.

பாதிப் பிறைமுடித்த பார்வதிபா காவெனவே
யோதித் தினமுள் ளுருகினு னெஞ்சமே
மாயப் பிறவியறு மாதுயர நீங்குநற்
றாயவரு மேமதிப்பார் சூழ்ந்து. (ாஙு)

பய்யத் தெளிந்தாலும் பாழ்வினைக டேய்ந்துயர்ந்த
செய்ய சிவஞானந் தேறுமே யாதலினுன்
மாதவர்பா லெய்தியவர் வண்பணியை யெந்நாளுந்
தீதகல வாற்றுசென் றே. (ாச)

இவையொருவிகற்பமாய்மூன்றாமடியிற்றனிச்சொற்
பெற்றுவந்தவின்னிசைவெண்பா.

ஆங்கார மொன்றடையி னஞ்ஞானம் வந்தடைந்தே
பாங்கா யிரண்டு பகுப்பாக்கி மாலருத்துந்
தீங்கா மதுவெய்திற் றீக்குணங்க—ளோங்கிமெய்
சாங்காறு மின்ன றரும். (௱௫)

மாலரு நெஞ்ச முளவரையும் வத்துவதின்
சீலந் தெரிதருமோ செப்புவீ ரிப்புவியில்
வாலிளமை யெவ்வளமு மாறியபின்—காலுழலக்
கோலார் முதியவரே கூடி. (௱௬)

இது மூன்றாமடியிற் றனிச்சொற்பெற்று இருவிகற்பத்தான்
வந்த வின்னிசை வெண்பா.

சற்குணமார் பொன்னவருஞ் சாற்றுஞ்சொன் மாறாத
நற்குணமெய் சத்தியரும் ஞானியரு நானிலமேற்
காண்பரிய ராயினவர் காருணிய—மாண்பினிய
சேண்புகுந்து சென்றுலவு மே. (௱௭)

இது அடிதோறுந் தனிச் சொற்பெற்று ஒருவிகற்பத்தான்
வந்தவின்னிசைவெண்பா.

பெருந்தன்மை வேண்டிற் பிரஞ்ஞை—பொருந்தா
யருந்தனம் வேண்டி னறிவாய்த்—திருந்தாய்
விருந்துண்ண வேண்டின் விமல—மருந்தாய்
வருந்தா திருக்கினென் வாழ்வு. (௱௮)

இதுவும் அவ்வாறேஇருவிகற்பத்தான் வந்தவின்னிசை வெண்பா.

வல்லாண்மை வேண்டின் மனமொழிக்கப்—பல்லாற்றிற்
புல்லாண்மை வேண்டிற் பொறியழிக்க—நல்லா
ரெழுகுதல் வேண்டி னுயர்ந்தோர்க்—கழுங்க
கழுவுவர் மாசனைத்துங் காண். (௱௯)

இதுவும் அவ்வாறே பலவிகற் பத்தான்வந்த வின்னிசை வெண்பா.

இன்றமை வேண்டி னியல்படைக—விந்நிலத்தின்
மன்றமை வேண்டின் மருள்விடுக—தன்னோடு
செல்வது வேண்டிற் றவஞ்செய்க—வெல்வது
வேண்டி னகந்தை விடல். (௱ய)

இது ஒருவிகற்பமாய் வந்த ஐந்தடிப் பஃறொடைவெண்பா.

சத்தெனவுஞ் சித்தெனவுஞ் சாருஞ் சுகமெனவு
மித்தரையின் மூன்று யிலங்கும் விருத்திகளை
வத்துவினுக் கொப்பி வளருலகத் துக்கசித்த
சுத்தசட துக்கமெனச் சொல்விருத்தி மூன்றினையு
நித்த ரமைத்தார் நினைந்து. (௱கக)

இது பலவிகற்பமாய்வந்த ஐந்தடிப் பஃறொடை வெண்பா.

செங்கதிர வன்றொளியுஞ் சேயரிக்கண் ணுஞ்சேர்ந்தே
யஞ்சா லுலகத்தின் வண்பொருளைக் காண்பிக்கு
மெண்டருமைந் திந்தியமு மீரிரண்டா முட்கரணந்
தொந்தித்தைந் தின்விடயந் தோற்றுவிக்கு மாபோல
வம்பரத்தை யொன்றுணர்த்து மா. (௱கஉ)

இது ஒருவிகற்பமாய்வந்த ஆறடிப் பஃறொடை வெண்பா.

அயங்கொல்லுங் கொல்ல ரமையா விலங்கின்
வயமாய்ப் பொறிகரண வன்சிறையை நீக்க
நயமார் கருணை யொருநாரணுய் வந்தென்
றுயர்தீர்த் தகங்கசியச் சொல்லொண்ணு வெல்லை
மயலறக் காட்டியெனை வாழ்வித்த வள்ளல்
செயலினை யென்செப்பு வேன். (௱கங)

இது பலவிகற்பமாய் வந்த ஆறடிப் பஃறொடை வெண்பா.

கங்கையினு மிக்க நதியில்லைக் கார்நிறமா
மஞ்சினினு மிக்க கொடையில்லை மால்செய்யும்
பந்த விருட்டினும் பாரிலில்லை யாரிருள்க
ளும்பர் கதிரொளியி னூங்கில்லை யோரொளிபோற்

குன்று தொளிர்கிற் குணவத்துக் கொப்பாயொன்
றென்று முலகத்தின் றே. (௱௬௪)

இது ஒருவிகற்பமாய்வந்த ஏழடிப் பஃறொடை வெண்பா.

அந்தமு மாதி நடுவு மிலதாகிச்
சிந்தையி னுட்புகுந்த சித்தே தமியனைச்சேர்
பந்த மறுக்கும் பழம்பொருளே தேனுகுஞ்
சிந்துவே மாலு மயலாகுந் தெய்வமே
சுந்தரமாய் நின்றொளிருஞ் சூக்கமே தாக்கற்றுச்
சந்ததமுந் தன்னிற் றரித்தாளுந் தற்பரமே
வந்தாளிவ் வேளை மதித்து. (௱௬௫)

இது இருவிகற்பமாய் வந்த ஏழடிப் பஃறொடை வெண்பா.

கண்டன வெல்லா மசித்த மெனக்கழற்றி
யண்டர்க்கு வேத னறைந்த மறையருத்தம்
பண்டைப் பழம்பொருளென் றுன்னிப் பலகாலுங்
கொண்டு கருத்திற் குவலைய முற்றிலுஞ்
சென்று பரவித் திகழிற் றுவிதம்போ
யென்றா ளிருள விலங்கும் பரத்தோடு
மொன்றிவாழ்ந் துய்யலா மோர். (௱௬௬)

இது பலவிகற்பமாய் அடிதோறுந் தனிச்சொற்பெற்று வந்த
ஏழடிப் பஃறொடை வெண்பா.

வய்யக மெல்லாங் கனவொக்கும் வய்யகத்தி
னெய்ய பொருள்கனவி னூங்கொக்கும்—பொய்யாங்
கனவை யறிந்தான்போற் கைப்பாய்த்—தினமு
நனவி லறிபவனே நன்காம்—புனைசாக்கி
யெவ்வெவ ருள்ளத் திலங்கதனைச்—செவ்விதிற்
கவ்வ லகண்ட கரியதனி—லெவ்விதமும்
பற்றப் பரந்தெளியும் பார். (௱௬௭)

இது ஒருவிகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா.

பார்வின் னறியாப் பரந்தொளிர்ப ராபரனின்

சீரறிவா ரார்கொல்லோ செப்புவாய்—தேர்தலிலா
வீரியனே விள்ளேன் விளக்கி. (௱௧௮)

இது இருவிகற்பத்தான் வந்த நேரிசைச் சிந்தியல் வெண்பா.

வேதம் பகர்வழியே மேயினோர் காண்பரிய
நாதமே நின்னலத்தை நானோதப்—போத
மளிக்கி னரியதன் றூல். (௱௧௯)

இது ஒருவிகற்பத்தால் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

வேதன் சலியானோ வேமன் சலியானோ
தீதாகு மென்னுள்ளஞ் சேறல் சலியாதோ
வாதனே னுய்வனோ வாங்கு. (௱௨௰)

இது இருவிகற்பத்தான் வந்த இன்னிசைச் சிந்தியல் வெண்பா.

சத்துவமே ராசதமே தாமதமே முக்குணத்தான்
முத்தொழிலின் மூவரையு மூட்டிவித்தா ளித்தரையுண்
மெச்சும் பகுதியா மே. (௱௨௧)

இது பலவிகற்பத்தாற் றனிச்சொற்பெற்று வந்த இன்னிசைச்
சிந்தியல்வெண்பா.

சரமு மசரமுமாய்ச் சாதி பலவாய்
வியனுலக முற்றும் விரித்து—மயலாற்
றனைமறைத்தன் மாயையே தான். (௱௨௨)

இது ஒருவிகற்பத் தோராசிடை வெண்பா.

மறையின் கருத்து மனையறத்தை விட்டுத்
துறவே யடையச் சொலினுன்—முறையே
பிறவா நெறியளிக்கும் பேசருமெய்ப் போத
மறவாம லென்றும் வதி. (௱௨௩)

இது இருவிகற்பத்தான்வந்த வோராசிடை நேரிசை வெண்பா.

சிரத்திற் சிவமாலை தேக முழுநீ
றுரத்தி னவமாலை யூன்றீஇப்—புரத்தை

மயக்குவார் போல மனமே யுழலாய்
தியக்கறுத்து மெய்ப்பிரமஞ் சேர். (ரு௨௪)

இது இருவிகற்பத்தான்வந்த ஈராசிடை நேரிசை வெண்பா.

வேளின் வலிமை யளித்த விறையவனே
யாளி னகலு மவநெறிகள்—ஞாளிபோற்
பின்பற்றி நிற்கிற் பெருமா னருள்பெருகு
மின்பற்றி னென்னுகும் விள். (ரு௨௫)

இது இருவிகற்பத்தான் வந்த ஈராசிடை நேரிசை வெண்பா.

ஈறில் பலவா யெடுத்துழலுஞ் சென்மத்தைத்
தேறி லிதுவே சிறப்பாமா—லூறுசெய்
சேரும் பவபந்தந் தீர்தொழிய வித்தையினாற்
பீறும் வழிபேண லால். (ரு௨௬)

இது ஒருவிகற்பத்தான் வந்த குறள் வெண்பா.

வாழி பரமுணர்ந்தோர் வார்கழல்க ளெந்நாளுந்
தாழுவார் தம்மடியே தான். ரு௨எ

முற்றிற்று. ஆ திருவிருத்தம். அகூ௰.

## கலுழ்தற்காரணம்.

கலிப்பா.

அறைமனமெய் யறிவறிதா யடர்பிரம நிலைதெரிய
முறைமையினி லுணர்த்தியமா முதுகுரவ னெனைப்பிரிந்தே
மறைந்தனனா லதுமுதலாய் மனங்குழைய யுயர்தவத்தீர்
கறையடைய விருகண்ணுங் கலுழ்தல்கா ரணமாமே. (க)

ஒருவருட னுரையாடா தொருபொருளின் மருவலிலான்
றிருகுமன முடையேனை வலிதேவந் தினிதாண்டு
பொருவிறனை யளித்தெனுடன் புகலாமன் மறைவுற்றான்
கருதரிய தவத்தீர்கா ளவனையுனிக் கலுழ்ந்தேனே. (௨)

விடவரவம் புரையகந்தை விறலடக்கி யலைமருவுங்
கடல்கடுகி னடைப்பதுபோற் கனவுடலிற் சுகமளித்தா
னுடனகன்று னுரையாம லவனையுனி யுயர்தவத்தீர்
கடவம்பு கவிழ்ந்ததுபோற் கலுழ்தல்கா ரணமாமே. (௩)

வருந்தியுமே திருத்தியவென் வளருடலோ டுயிர்பொருளை
யருந்தனஞ்சற் றிலவறிஞ னடைந்தவற்றைப் பறிகொண்டு
திருந்தெனையுங் கெடுத்துன்வாய் திறவாயென் றவனகன்றான்
கருந்தனமேய் மனங்கரையக் கலுழ்தல்கா ரணமாமே. (௪)

அடுத்தவரி னுயிர்செருக்கு மரவமுளா னொருவனெளி
தடுத்தெனையு முகையாக்கித் தநுகரண புவனமெலாங்
கெடுத்தகன்று னதுமுதலாக் கெடுதலடைந் துணர்விழந்தேன்
கடுத்தகரு ளகன்றீர்கண் கலுழ்தல்கா ரணமாமே. (௫)

வெறுமையனைப் பகுத்தறிவு மிலனாகி யொருவீரன்
சிறுமையினை யுணராதே செவிக்கினிய சிலச்சொல்லி
மறுமையெல்லாந் துடைத்தகன்றான் மனமருகி யுயர்தவத்தீர்
நறுமலர்தேன் சொரிவதென நயனமல்கிற் றவனினைந்தே. (௬)

சுருதிசொலும் பொருளேசொக்க லிங்கமெனத் தோன்றிவந்தே
குருதியென்பு நரம்புமுடை கொளுமுடலை யெனதியானென்
பெரிதுமலை வுறுவேனின் பிரிவறுத்தே யவனகன்றான்
றெரிதருமெய் யறிஞர்காள் தெரிவீரே கலுழ்தலையே. (௭)

இவை வெண்சீர்வெண்டளை விரவிவந்த கலிப்பா.

ஆத்தனை யிலங்குறுமோ ரறிவுறுமாண் மகன்வலிதே
தூர்த்தனைத் திரிவேனைச் சொலினாலே யருளாலே
பார்த்தாண்டா னகன்றனனே பகலிரவு மகலாதே
காத்தாளு முயர்தவத்தீ ரவனையுனிக் கலுழ்தலே. (௮)

ஆனந்த மதுவருந்தி யகமுடல மறந்தொருவன்
மானந்தத் தவமியற்றாத் தமியேனை வலிதடக்கி
யீனந்தன் மனமுற்றுந் தனதுவய மியைத்தகன்றான்
கானந்தத் தவம்புரிவீர் கலுழ்தல்கா ரணமாமே. (௯)

பாசமெனும் பருவிலங்கிற் பதிந்துழலுந் தமியேனைத்
தேசமுதற் பிரிபரிச்சே தமுமகன்றே திரியொருவன்
மாசகற்றி யறிவளித்தான் மறைந்தனன்மா தவத்திரே
காசடைய வவனையுனி யிருகண்ணுங் கனுழ்தலே. (ம)

இது சீர்முற்றுங் கருவிளங்கா யாகவேவந்த கலிப்பா.

சதுர்விதசா தனமடைந்தார் சருவமுமே பிரமமதாய்க்
கதிர்விடுவார் மயலறுவார் கருள்கெடுவார் துயர்விடுவார்
விதிபடையா னெம்னனுகான் வினைகளும்போய் நினைவறுவார்
முதிருணர்வோர் புகழுறவே முழுகுவர்சோ தியினிடையே.(கக).

முற்றிற்று ஆ திருவிருத்தம் கூாக.



## மனவலியுறுத்தல்.

கலித்துறை.

காரா ருலகினி லெல்லாம் படைத்த கடிமலர்மே
லேரா ரயனு மெழின்மா லுந்தேடி யினுமறியாச்
சீரார் சிவவென துள்ளந் திருத்திச் சிதேகரசம்
பேரா றெனப்பொழிந் திடேற்ற நின்னருள் பெய்வதென்றோ.

தாயாருந் தந்தையுஞ் சுற்றமு மாம்புறச் சார்புபற்றித்
தீயவனுகித் தெளிஞான மின்றிச் செறிமயலால்
வாய்மையு மற்று வனிதயர் போக மழறுழன்றே
தூய்மை யிறந்தவ னுனேன் கருணையிற் றாக்குவையே. (உ)

தனமிருந் தாலுஞ் சதுரிருந் தாலுந்தற் சூழுறவா
மினமிருந் தாலு மிடமிருந் தாலுமிப் பூதலத்திற்
கனமிருந் தாலு முயர்கங்கை சூடி கருணையெனு
மனமிருந் தாலல வோவிந்த வாழ்வுகண் மன்னுவதே. (ங)

தாயாருந் தந்தையுந் தேடிலே யேற்றனந் தன்மகவை
யீயாரு நாறு ரெனவுரைப் பாரந் நிலேதெரிந்தும்
வாயாத பேரரு டேடிலே யன்பர்க்கு வாய்ந்தவொரு
சேயாய்த் திரிந்திலே யென்றுய்வை யோவென்றன் றீநெஞ்சமே

மஞ்சட் குளித்து மலர்சூடிக் கண்ணுக்கு மையெழுதிச்
செஞ்சாந் தணிந்துயர்சீரை யுடுத்திச் செகமருள
விஞ்சுங் கனதனங் கச்சா னிறுக்கி விழைபவரைக்
கொஞ்சி மயக்குவர்க் கேமன மாய்ந்து குறுகியதே. (ரு)

ஈச னடியிணை யேற்றும லென்றுமெண் சாணுடம்பை
நேச முடனனங் காய்கனி யீந்து நினைவெழுந்தால்
வாச மலரணி மங்கையைப் புல்லியிம் மானிலத்தோர்
பேசப் பிரிய முடன்வளர்த் தேனென்ன பேறெனக்கே. (சா)

கல்லாமை தீமை களவாசை யின்சொற் கனவினுமெய்
சொல்லாமை காமந் துயில்சோம்பு லோபநற் றூயநெறி
நில்லாமை மூட நிலேயாமை கோபநிட் ரேமதோ
டெல்லா மடைத்த பெருஞ்சம் புடமிதி லென்பயனே. (எ)

தோலு மெலும்பு மிரைச்சியு மச்சை சொரியுதிரத்
தாலு மமைத்துண் மலமடைத் தன்னது தான்கசிய
மேலு நவத்துளை செய்து திரித்தவிம் மெய்யினையெக்
காலு மியானென தென்போலு நிந்தையென் காசினிக்கே. (அ)

அகழ்கிடங் கல்ல வொருச்சாண் வயிறு மதில்வரும்பல்
லிகழ்வுசற் றேதவிர்ந் தானிரும் பொன்விழைந் தின்னிலத்தே
நிகழ்வுசற் றேவொழிந் தாலிழையார் கண்மெய்யின் பிற்புல்லித்
திகழ்வுசற் றேவிவை நீக்கிச் சிவனடி சேர்வதென்றே. (கூ)

தந்தையுந் தாயுந் தனித்தின்பிற் கூடித் தருமிருநுண்
விந்து திரண்டுரு வாயுத ரத்தின் மிகவருந்தி
யைந்து பெருந்துன் படைந்து பிறந்தவ னிக்கண்ணதே
வந்த சிசுவென் சுகமுறு மென்று மதித்தறியே. (௰)

குழவிப் பருவத் தழுதலி னாலுங் கொழுமுடலம்
வழுவலி னாலு மதியின்மை யாற்புன் மலசலங்க
ளொழுகுத லாலு மஃதுண்பதி னாலு மூறுமிழல்கண்
டெழுபயத் தாலும் வருந்துன்ப மெண்ணி யிசைப்புரிதே.(௰௧)

அதுவொழிந் தானுயர்ந் தோர்க்கு மதிர்குரன் மின்னிடிக்குங்
கதுவு மிருள்பற வைக்குமைக் கண்ணுக்குங் காறளர்ந்து
நொதுமென வீழ்தலுக் கும்பய மெய்தியுண் ணோந்துயரா
மிதுவென வெண்ணி யிசைப்பரி தாமிதி லின்பமென்னே. (௰௨

வாலப் பருவத் தறியாமை நீக்க வருங்கல்வியைச்
சாலப் பயிறலி னாலு முபாத்திமை தன்னுறவோர்
சீலப் பிதாவவ னேயன் முதலியர் சீர்செய்வதி
னாலமென் றேகனன் றங்குதண் டித்த லருந்துன்பமே. (௰௩)

காளை வயதினிற் கண்டவர் காம னிவனெனவாழ்
வேளையில் வேள்கணை பட்டிழி சூளை யிடைவிழுந்து
தாளை வருடி யவள்சொற் றடாதுசெய் தாம்பணிகள்
வாளை புலால்கண்மிக் கீவதி னல்வருந் துன்பமொன்றோ. (௰௪)

கூர்விழிப் பீழை குமிழ்மூக்கு நீர்செவிக் கும்பியொடு
வேர்நீ ரழுக்குமெய் நாற்றமு மூத்தையும் வெங்கொடும்புண்
ணீர்பாயு நாற்றமு மெல்லா நன்னீர்கொடு நிக்கலேயே
லாரு மறுவறுப் பார்பா வையிலென் னடைசுகமே. (௰௫)

தேறுமை யானுந் தெரிவைய ராசையுட் சிக்கியன்னோர்
பேறும் வகையுட் டனல்வேலை யேற்றும் பெரும்பொருளை
வேறு ரகத்திற் களவேற்று மன்னர் வெளிவெளவியு
மாறுச் செயலின் வருந்துன்ப மன்றிமற் றென்னுளவே. M (௧௬)

தாயுத ரத்தி லிருக்கையிற் புன்மலஞ் சார்கிறுமி
பாய தற்சூழக் குடர்மாலை சூடி யழுந்தினைதத்
தூய விரையணிந் தாடியிற் றன்னிழ றோன்றும்பொழு
தாயி னகமகிழ் மோவிதி லின்பு மனுவிலேயே. (௧௭)

மெலியரை மிக்க வலியவ ராக்கு மவரைமெல்ல
நலிய நழுவும் புன்மக்களை நற்குல மாக்கியச்சம்
பொலிய வழுத்து மனைமகள் புத்திரர் தந்தைபெற்றாள்
மலிய வழவருந் தூர்தனத் தென்னுள மாண்சுகமே. (௧௮)

மேனி திரைந்து சரைநரை யெய்தி விழிகுறுகிக்
கூனிக் குரங்கெனக் கோலூன்றிக் கோழை மலசலங்க
டானெயி லோடத் தலைநடுக் குற்று மனைசுதர்க
ளானவ ரும்மிகழ் வார்த்திகத் தென்னை யடைசுகமே. (௧௯)

பட்ட மரத்திற் பறவைகள் கூடும் பரிசதென
மட்டில் பலபிணி வந்திட வுற்றார் மருத்துவரும்
கொட்டு மருந்து கடைவா யொழுகக் குறுகியெமன்
கட்டிக் கொடுபோ மிதிலென்னை யின்பங் கழறுவையே. (௨௰)

நன்னிலம் வித்திய வித்து நயம்பெற வேவிளைந்து
பின்னல மீயு மதுபோல வீகையும் பேறுதரும்
புன்னிலத் திட்ட விதைபோற் புன்மக்களுக் கீபொருள்கள்
மின்னெனத் தோன்றி யழியும் பயனற்ப மீயினுமே. (௨௧)

உள்ள பொருளிது வென்றே யுணர்த லுயரறிவாந்
தெள்ளிதி னப்பொரு டன்னைத் தெளிதனற் காட்சியதாம்
விள்வற் றிரண்டும் விளங்கத் தனதகத் தேவிரும்பி
யொள்ளிதிற் கொள்ள லொழுக்கமென் பாருய ருத்தமரே. (௨௨)

ஒழுக்கம தன்றி யுயிருணா ருள்ளள வாம்வரையு
மிழுக்கம தெய்திட வுன்று யெனைப்பிரி யாநெஞ்சமே
புழுக்குரம் பையிது சத்திய மோசொற் புலமுணர்வோர்
பழிக்கினென் னுருவை நீயே மதித்திதைப் பற்றுவையே. (௨௩)

நாகம் விழுங்கு முழுமதி போலவின் ஞனிலத்திற்
போகம் விழுங்கிய புல்லறி வாளர்தம் புத்தியதா
மாக மதியில் வரும்பூ ரணமதி யைப்பொருவுந்
தேக மகமெனல் சற்றுமிலாத் தெளி வோரறிவே. (௨௪)

காதன் மிகுந்திடிற் கற்றவுங் கேட்டவுங் கைவிடுமே
யோதன் மிகுந்திடி னூண்டுயி லிற்று முணர்வுறுமே
யீதன் மிகுந்திடிற் புண்ணிய மோங்கி யிடாகன்மே
போத மிகுந்திடின் ஞானமு மெய்தியின் பம்புகுமே. (௨௫)

நுண்மதி போலு மறிதற் கரிய நுசுப்புடையார்
கண்வலைப் பட்ட பொழுதே யுயர்வுணர் கற்றகல்வி
திண்வலி செல்வ மொடுசீர் மனைமுதற் செல்லவிட்டுப்
பெண்மதி யாகித் திரியவும் வைக்குமென் பேய்மனமே. (௨௬)

பிறந்து திருந்திப் பெறுமாயு ளித்துணை யென்பதொன்று
மறிந்திலம் வாழ்குது மென்னும வாவினி லாழுகின்றோங்
கறந்தெம னண்ணும் பொழுதுகண் ணீர்விட் டிரங்கினென்னு
மிறந்த தினங்களை மீட்டுளர் யாவரின் னீணிலத்தே. (௨௭)

முருந்தினை யொத்த முறுவலின் முற்றிழை யார்முயக்கி
லிருந்திள மைப்பரு வம்போத லோர்தி யின்றமட்டுங்
கருந்தலை வெண்டலை யாய்க் கழியாமுனங் காசினியி
லருந்தவஞ் செய்தறி வேபர மாகி யமர்மனமே. (௨௮)

மைதிரள் குஞ்சியின் மல்லிகை மாலை வரிப்புனைந்து
கைதிரள் காம னெனக்கா ரிகைகா முறத்திரிந்தா
ரைதிரள் கண்டங் குரைப்பத் தண்டூன்றி யறிவழிந்து
செய்திரண் டாற்போ லுமிழ்கிழங் காணி னிளமையென்னே.

வால வயதி லிளையார் மயக்கு மடவரலுங்
கால மகன்றபின் கன்னங் கனதனம் வற்றிமஞ்சி
னீலக் குழனரைத் தாகந் திரைந்து நிணங்குலுங்கி
கோலூன் றிநீள்கிழ வானரம் போலுங் குறுகுவரே. (௩௰)

அம்பொற் கலத்து ளடுபா லொடுமென முண்டவரும்
வெம்பும் பசிகலி வாற்றாது வேறோரக லெடுத்துப்
பம்பி யயலவ ரில்லங்க டோறும் பலிக்குழன்று
னம்பலி னென்னுள விச்செல்வ நட்பினை நன்மனமே. (௩௧)

கைப்பொரு ளீந்து படித்தநற் கல்விகள் கண்களுமா
மெய்ப்பொரு ளீயு மனத்துயர் போக்குமிம் மேதினியிற்
பொய்ப்பொரு ளத்தமு மல்லப் புகழ்துணை யாயுநிக
ழிப்பொரு ளெய்தி னிரங்குவ தென்னுள வென்னெஞ்சமே.௩௨

கற்புறு மாதர் பரத்தையைத் தோய்ந்த கணவனையும்
பொற்புறு நீரின் முழுகுதல் காறும் பொருந்தலர்போல்
விற்பன ராசையின் வீழ்ந்தவர் சற்குண மெய்தும்வரை
யற்பமுந் தீண்டில ராதலி னுவலகற் றென்னெஞ்சே. (௩௩)

மெலியவர் பெற்றிடுங் கைப்பொருண் முற்று மிளப்பவெளவி
வலியவர் கொள்வ ரதுபோ லுணர்வலி வண்டிலரேற்
பொலிதன மங்கையர் மைந்தர் மனைவியர் புல்லியவர்
சலிமனந் தன்வய மாக்குவர் தானறி யென்மனமே. (௩௪)

கள்ளினை யுண்டார் வெறிதீர் வரையவர் காயத்தினுற்
கொள்ளுஞ் செயலுக்கு வாய்மொழி பேதுறுங் கூம்புமன
மெள்ளள வேனுந் திருந்தா ததுவா மெனதுளமே
நள்ளிருள் பற்றி னதற்கிது நான்மடங் காமறியே. (௩௫)

குன்றேறி யானைக் கொடும்போரைக் காண்பவர் போலவருட்
சென்றேறி னுருயர் சிந்தையுந் தேகமுஞ் செய்தொழிலும்
பின்று தொருவருத் தம்பீதி யெய்திப் பிறழ்தலுறார்
நன்று யிதையுணர் வாயுன் னெறியி னடப்பதற்கே. (௩௬)

கடிக்மழ சாந்தினுங் கார்நிறை மாமதி தன்னினுமே
படுதழ லும்முயிர் நீக்கும் விடம்வரப் பார்க்கினுமே
மடியிழி காம மமதை கனதுயின் மற்றுமுள
கொடிய குணங்கண் மெஞ்ஞானிதன் பாற்கண்டு கொள்வரிதே.

விண்ணில் விளங்கிய பற்பல வானவெண் டாரகையைத்
தண்மதி யுண்ணு மதனைக் கதிரவன் றுன்மழுக்குங்
கண்ணுங் கதிரவன் மின்னலை யுண்ணுங் கருத்ததனை
யுண்ணு முணரனைத் துண்டலி னுலதற் கொப்புளதோ. (௩௮)

மலர்வாவி மாதவர் போன்றன நெஞ்சம் புலைமலரா
மலர்சத்வ வாசனை போன்ற ததன்மண மாங்குறையு
நிலவணி முன்னவன் போன்ற ததனுழை நிற்குமனங்
கலர்க ளிதற்கொவ்வு வாரோ கருதிக் கரைமனமே. (௬௧)

ஊன்சே ருடம்பென் னுயர்வா னினைத்தொடு மொண்பொழிலிற்
றூன்சேர் பிணியெனுஞ் செந்தீக் கொழுந்ததிற் றங்கியதாற்
கான்சேர் கவினெனுங் கந்தங் குறையா மலர்வெதும்பக்
கோன்சேரு மென்னுள மேகொடுங் கூற்றிற் குறைந்திடுமே. ௬௰

விரும்பிய வந்தனை யாமையிற் றுன்பம் விழைநர்தமின்
வரும்பிரி வாற்றுன்ப மெய்து மிளமை யகறலினு
மரும்பெருந் துன்ப மூப்பெய்தலிற் றுன்ப மறிவிலியாய்ப்
பெருமடத் திற்றுன் பறிவின ரெள்ளலிற் பின்றுன்பமே. (௬௧)

பொய்யுரைப் போர்பா லணுகும் பொருளிலின் பென்னையுள
மெய்யுரைப் போர்களி னீங்கு மதிற்றுய ரென்னையுள
வய்யப் பொருளை யுயர்வோ ரொன்றாக மதித்திலராற்
கய்யினின் மெய்ப்பொருள் காட்டுங் கருத்தொப்ப தென்னுளவே

ஆயிரங் கூடினீ ரையா யிரம்பொன் னடைவலென்றுஞ்
சேயிழை யொன்றெய்தி லக்கந் தெரிவையைச் சேர்வலென்றுந்
தேயமொன் றெய்திற் றிசைமுற்றும் மாள்குவ மென்றுமுயிர்
மாயும் வரைவருந் தாசையி லென்னுள வாழ்மனமே. (௬௫)

கைவந் ததனி லவாவொழித் துக்கை வராததனை
மெய்வருத் தங்கொண் டெளியன வேனு முயல்வித்தின்ன
செய்யு மவாவினைப் போலொரு தீக்குண முமுளவோ
மைய றருமிதை நீக்கிப் பரம்பொருண் மன்னுவையே. (௬௬)

அறமுஞ் சிற்றின்பமு மாம்பொரு ளானெய்து மறமதுபோற்
றிறமான ஞானமும் வீடுஞ் சிவத்தரு ளாலெய்துமான்
மறமடை யாவகை வேதம் விதித்த வழியினின்றே
துறவாகி முற்று நியதி தனையி னருளென்னுமே. (௬௭)

குழவிப் பருவத்தை யெவ்வனங் கொள்ளுங் குணமடைந்த
வழகுறு மெவ்வனத் தைக்கிழ மூன்னு மதனோமன்
பழமெனத் தின்னு மனமே யதைமிகப் பார்த்திருந்துஞ்
சுழறல் விடுத்திலை யெவ்வனை மூய்குவை சொல்லுவையே. ௬௬

பாலிற் பழகினுஞ் சின்னுளி லேபுளிப் பாகிவிடு
நூலிற் பழகினு மூற்று முணர்ந்தா மெனகொடியு
மாலிக்கு மங்கைய ரத்தமண் ணுதி யடங்கலினுங்
கோலின் வெறுக்கை யரிதே யிவற்றினைக் கூடனெஞ்சே. (௬௭

தனது மனேலயத் துண்டாஞ் சுகத்தினைத் தானறியா
ரினது சுகத்தினை யீந்தது வென்றித யத்துணர்வா
ரனதை யுணர்ந்திடின் வானு ளகறன் மறந்துதனின்
னினவய தேகி வளர்ந்தன மென்று தெளிதலொப்பே. (௬௮)

கய்யினிற் சுட்டு விரலாற் கரிகொடு நாகமதிற்
செய்யாற் சித்திரந் தீற்று வித்தாலுந் தெரிதருமோ
துய்யமெஞ் ஞானியைப் பற்பல வாயவ தூறுரைத்தா
லய்ய வதுதனை நீங்குறு மோவீ தறைநெஞ்சமே. (௬௯)

குருடற்குக் கண்ணிலி கைகொடுத் தேநெறி கூட்டுவபோற்
புருடத்த மோரா தவர்க்கு மறைப்புறம் போய்த்திரிவார்
பொருடரு வாமென வேதோ சிலசில போதித்தவர்
மருளுறத் தானு மயங்குதல் போலு மதிமனமே. (௭௰)

அந்த நெறிசொலக் காதினி கேட்ப வருமுடவன்
சிந்தையிற் றேர்ந்து செலுமாறு போலத் தெளிமறையி
னந்த முணரா னறையக் கருமி யதைவினவப்
பந்த முடையா னடப்பது மாகும் பதிமனமே. (௭௧)

உலையிற் படுமீ னுயிர்விவ தோரா துளமகிழ்ந்தே
யலைவுற் றுடனு டியபோலு மேயிவ் வுகிலத்தினிற்
றலையிட்ட வேர்சின் னுளினிற் சாத நனையுணரா
திலையுற்று வாழ்வு மெனவே யுவத்த னினைநெஞ்சமே. (௭௨)

வேசிக்கு நித்த மிகுபூ ணணிதலும் வீடில்பர
தேசிக்கு நீறுட னக்க மணிதின மேபுனைதல்
யோசிக்கி னேயழ காமது போல வுயிருணர்வை
மாசிற வெய்த லழகே யெனமதி வாழ்மனமே. (௫௩)

ஞானமென் கின்றநற் சேயினை யீனினிஞ் ஞாலத்திலே
யானதுன் பங்கள் பலவந் தடையினு மாற்றுவிப்பான்
தேனந்த வுஞ்சுகஞ் செய்குவ னிம்பர்விட் டேகுழியுந்
தானங்கு மேவரு வானவ னைப்பெறத் தான்முயலே. (௫௪)

உடலிற் படுமுது புண்ணினைத் தீர்ப்பா னுறுஞ்செயல்போ
லடல்காம நோயை யகற்றலு மஃதடை காரணமா
விடலு மறுசுவை யோடுண் டுடுத்தல்வெம் பாவமதைத்
தொடனீக் குதலும் பிறப்பறுஞ் செய்கைசொன் னேன்மதியே.

நோயும் பிரிதலு மூப்பு மிறத்தலு நூக்கியன்பிற்
றுயுங் குறுகமிக் கார்வமு மாகிச் சருவியின்ப
மீயிற் கெடாவகை தான்றரு மில்லினை யெய்தியென்றுந்
தோயு முணர்வினர்க் கென்குறை சொல்வை யென்றூய்மனமே.

மனமொன்றை யுன்ன மதியொன்று பற்ற மருவுசித்தந்
தினமொன்ற தாக்க கரமொன்று செய்யச் சிவந்தகண்பா
ரினையெங்கு நாடச் செவியொன்று கேட்க யிவ்வாறுழலி
னினனென வேயிலங் கம்பர மெவ்வா றுறுமெனக்கே. (௫எ)

வேசையர்க் கீபொருள் வீணாகி நோயை மிகவிளைக்குந்
தாசை யறுத்தவர்க் கீயிற் சொலுமுயர் வீடுதரும்
யாசகர்க் கீயி னரனுல கத்தி லினிதமர்த்து
மாசையி னீதலின் றிப்புதைத் தாலடை வார்பிறரே. (௫அ)

மான மிருக்கி னுயர்ந்தோர்க ணிந்திக்கு மாறுசெல்லாய்
தான மிருக்கிற் சகல வுயிர்க்குந் தயையுறுவாய்
மோன மிருக்கின் முனிவர்சொல் ஞானமுற் றும்பெறுவாய்
ஈன மிருக்கினென் றீடேறி யுய்குவை யென்னுளமே. (௫௯)

பரத்தையர் நட்பினும் பாம்பினட் பேயினி தாங்கிரிந்தே
கரத்தலிற் பற்பல வில்லிற்கை யேற்றுணல் காணின்பமே
வருத்தலிற் கோற வினிதா முயிரையிம் மானிலத்தின்
மரித்தலி னற்றுற வாதலின் பென்று மதிநெஞ்சமே. (௬௰)

மரமாய்ப் பிறக்கினும் வல்வினை யாற்று திருநிலத்தி
னரனாய்ப் பிறந்துயர் வென்னடைந் தாய்நல் லவரையண்டி
யுரமா ரஞ்ஞான மொழித்துணர் வெய்தி யுதித்தொடுங்க
நிர்மா யழித்தனை யோவென்ற னுள்ளமே செப்புவையே. (௬௧)

ஆடியிற் றோன்றுறுந் தன்னிழல் போல வணார்விருத்தி
யூடு புலப்படுஞ் சைதன்யச் சாயை யுயருயிரா
நாடி னதற்குத் தொழிலுண் மையினொப்பி னால்வலிரு
வீடில் வினைவந் தணுகிப் பிறப்பிறப் பெய்துவையே. (௬௨)

அறுசுவை யோடன மூண்டு களித்தன மாயிழைபாற்
பெறுமின் பமுமயின் றோம்பினர் பஞ்சணை மேற்றுயின்றோ
முறுதொழின் மூன்றினுக் கப்பா லொருசெய வின்மையினான்
மறுவிரு வாதனை நீக்கிச் சும்மாவிரு மானிலத்தே. (௬௩)

கல்லார்க் கொருசொன் னவிலி னதன்வழி யோடப்பார்
பொல்லாருக் கெத்தனை சொல்லினும் புந்திகொள் ளாரதுபோல்
வல்லா னென்வரு நிற்கிது போது மயக்கொழித்தே
யெல்லாஞ் சிவன்செய லென்றுகண் டின்ப மினிதடையே. *

மெலியவர் தன்னின் வலியரைக் கூடி மிடிதுயர
மலிய வடையினு மாற்றுதல் செய்யும் வகையதுபோ
லலைமன் மேநின் றளர்வினை நீக்க வரும்பிரம
நிலையினை யெய்தி னினக்குறு மெத்துயர் நீங்கிடுமே. (௬௫)

கல்லுரு காவிடி னும்மதன் றச்சர் கருத்தின்வண
நல்லுரு வாக வமையு மதுநிகர் நன்னெஞ்சமே
வில்லேர் நுதலுமை பங்கனை முன்னி மிகவுருக
வல்லா யெனினு மமலம தாக வமருவையே. (௬௬)

எளியவன் செல்வனை யெய்தி யவனிடு மேவல்புரிந்
தொளிதரு பொன்னுற் றுறுசுக மெய்து மொழுங்கதுபோற்
களிதரு சிந்தைய னாயினும் ஞானி கழலடையிற்
றெளிதரு மெய்யுணர் வெய்திச் சிதானந்தஞ் சேருவையே. ()

தண்டுல மூப்பு பிறகு முதலிய சட்வருக்க
மண்டலத் தெய்தினும் வன்னி யிலாமையின் வாய்ப்பரிதா
மெண்டரு தான தரும முதலா வெவைசெயினு
மண்ட ரடைவரு ஞான மலால்வீ டடைவரிதே. (௬௮)

ஒருநா ளுணவை யொழிக்கி னுடம்பி னிடைதுயரம்
வருமாறு போற்பல வாமுக மாக மதிதரித்தோ
னிருநாண் மறக்கி னிதனால் வருந்துய ரெண்ணிலவா
யுருமா றினுந்தொடர்ந் தேபற்று முய்த்துனை ரென்னுளமே. ()

ஞாளியைத் தேய்த்துநன் னீராற் கழுவி நறைபுனைந்து
பாளித மூட்டித் தன்பக்கத் தமர்த்தினும் பற்றியெழுந்
தூளிற் புரண்டுடன் றுன்மலந் துய்ப்பன போன்மனமே
கூளி யெனத்திரிந் தாயென்ன புத்திகள் கூறினுமே. (௭௰)

மஞ்சளைப் பூசி மலர்சூடிப் பொன்பணி மார்பிலணிந்
தெஞ்சிய தாலியில் லென்னி னமங்கல மெய்துவபோ
லஞ்சி யடங்கன் முதலெக் குணங்க ளடையினுமே
மிஞ்சிய ஞான மில்லென்னி னமங்கல மெய்துவையே. (௭௧)

வீட்டிற் புறம்பே விளக்கிவெண் சுண்ணமென் மேலுமுற
வூட்டியுட் புன் மலமாக்கி யுறுபவர்நோ யெய்தல்போற்
கூட்டிற் புறந்துடைத் துள்ளே கொடுங்குண மாய்வதிலோர்
காட்டிற் பவப்பிணி யெய்திக் கொடிய காருறுமே. (௭௨)

வேடிக்கை பார்ப்பதும் வீணைகள் கேட்பது மெய்மினுக்கும்
வாடிக்கை யாக வழங்குவை யேனமன் கட்டிவனைத்
தோடிக்கை காலற வாங்கி யுடறுள்ளு நாடகமுங்
கூடிச் சருண்டழு மோதையுங் கேட்டுக் குளிருவனே. (௭௩).

எடுத்த சென்மத்தொ டொழிந்துன் படைத்து மேற்சேரிற்
படுத்தது நீபற்றி யாதன்ன் டோபின் பலமயக்க
மடுத்து மறந்தனி யாயினு மெய்ம்மை யறிவடைந்தாற்
றடுத்தருள் வந்து புகுநீயுந் தற்பத மெய்துவையே. (எ௪)

கழியாற் கரிசெய் ததனுட் புகுந்துகை காலசைக்கின்
விழியாற் றெரிபவர் வேறுசெய் தேயுணர் வாரதுபோ
லழியா தெவற்றினு முன்னே யிலங்கு மறிவைமறை
வழியே பிரிந்துத் தெரியிற் சடமெவண் மன்னுவதே. (எ௫)

கோடான கோடிக ளியினு மிந்தக் குவலயத்திற்
பீடாருஞ் சென்றதன் னாயுளை மீட்டும் பெறுவதுண்டோ
வோடாது நின்றுணர் வேயக மென்னு மியோகமுறிற்
கேடாம் வினைகளு மோக்கமு மேவந்து கிட்டுநெஞ்சே. (எ௬)

யோனியின் மீதுழ லாசையி னாலொரு கோடிசென்மம்
யோனியி லேபிறந் தும்மிறந் துன்னரா குற்றுமந்த
யோனியி லேகவ லாகி நின்றுயஃ தொழுக்கினெந்த
யோனியி னும்புகு தாயரன் றாளுறு முண்மைநெஞ்சே. (எஎ)

போனாற் கழுத வழுகையை யந்தப் பொழுதின்வரு
வானாற் குமாக்கு மகளிரின் வஞ்ச மறிந்தவரை
யூனுக்கு மென்றுள் ளறுவறுத் தேயுய ரின்பமதைத்
தானுக் கொடுக்குஞ் சிவசங் கரனடி தாழுவையே. (எ௮)

மன்னன் வெறிகொள்ளிற் செய்யுப சாரங்கண் மற்றுமுள
கன்னல மாற்றி யனுதினர் வஞ்சிலை நாட்டுவபோற்
கன்னெஞ் சமேமயக் கெய்திடி னன்ன கழலும்வரை
பின்ன லருத்தி மரண் செனனத் திடைவைப்பனே. (எ௯)

அன்னத் துவேட மெனுநோ யடையி னறுசுவையுட்
டென்று மகர்க்கெடு மாறது போற்சிவத் வேடமெய்தி
னன்னெறி யாளர் மனைபுயா கமமொடு ஞானமிட்டை
பன்னரும் யோக முதல்யா வினுமுள பற்றறுமே. (௮௰)

கற்சிலை தன்னையும் பெண்ணாகக் கண்டு கருத்தழிந்து
பெட்புறுங் காமி யதுபோல ஞானம் பிறங்கினானு
மித்தரை மீதுபல் லெண்ணில் வடிவ மிலங்கினுமே
யச்செனை நின்றொளி ராதியைத் தேர்ந்தங் கமருவனே. (௮௧)

பீதிய தெய்திற் றடிமா லையுமர வாய்ப்பிறங்குங்
காதல் வந்தெய்திடி லிப்பியும் வெள்ளியென் கண்டுவிடும்
வேதை மிகுந்திடி லின்சொலும் புல்லிய வாய்விளங்கும்
போத மிகுந்திடி லன்னியம் வந்து புலப்படுமோ. (௮௨)

கைப்பான நிம்பத் தளையினை யொட்டை கண்டுண்மகிழ்ந்தே
மெய்ப்பா மதிரச மென்றயி லும்மது வேய்ப்பவெறும்
பொய்ப்பா வையரது மெய்ப்பரி சஞ்சுக மென்றுபுந்தி
வைப்பா ரைரீங்கிப் பரவெளி கண்டு மருவுவையே. (௮௩)

காமாலை யென்னு மொருபிணி யெய்தினிக் காசினியைத்
தாமா யரிசன் மாய்க்கண் டிருக்குந் தகையதுபோற்
பூமாலை தோய்குழ லார்முத லாமிப் புவனமுற்றுஞ்
சீமா னெனவொளிர் சித்தெனக் காண்பர் தெளிஞர்களே. (௮௪)

ஐவண்ண மானகண் ணாடியி னூற்றுமை வாந்தரினே
செய்கொளிர் தீப மவிகாரி யாயினு நேருறுவோர்
பொய்வண்ண மோரா தியல்பென வேபுகல் வாரதுபோற்
செய்ய சிவத்தையும் பற்பல வாமுணர் வாச்செப்புமே. (௮௫)

சிற்றின்பம் வேண்டினு மேகாந்த மெய்திடிற் சேருவபோற்
பற்றறுத் தேதனி மேவிடிற் பேரின்பம் பற்றுவதே
யுற்ற களப மதற்குறு சாதன மோங்குவபோ
னற்றவ வாசனை யாமிதற் காமிதை நன்கறியே. (௮௬)

பிளவை யுடையனை யோர்மருந் தாலுணர் பின்மயக்கிக்
கிளறலின் பெய்துவித் தற்கான வன்பாய்க் கிளத்துவர்போ
லளவறு சென்மங் களினு மழனர கங்களினுந்
தளர்வித்தல் பேரின்ப மீவதற் காமென்று சொல்லுவரே. (௮௭)

வேசை யைச்சற்று விழைந்தான் மனையவள் வேறுறுவா
ளாசைப் பிதாவனை யண்டினர் முற்று மறுவறுப்பார்
பேசருஞ் சூலை கிரந்தி யரையாப் பிவையடையுங்
காசை யளித்தின்ன தேட லென்றுளுங் கடுந்துயரே. (அஅ)

கற்பின ரோர்துணை பற்றியு மன்ன கடந்தவர்கள்
பற்பல பற்றியு மின்புறுங் கைப்பெண் ணுயிர்பருகும்
விற்பனர் மற்றைய வொன்றும் பலவாற் சுகமெய்துமா
லற்ப ரவையிழந் தாந்துய ரென்று மடைகுவரே. (அகூ)

அழகில் பொருளுக் கெழில்செயல் போல வரிவையர்கள்
குழலுக் கிசைய மலர்களும் பொற்பணி குங்குமந்
தழையும்பட் டாடையுஞ் சாத்தினல் லாற்றம தாக்கையினிற்
குழக மியல்பினி லுண்டோ விதனைக் குறிகொள்வையே. (கூ௰)

சீவனை நோக்கிற் றெரிவை புருட னெனத்திகழ்மோ
மேவு முரியினை நீக்கியங் காயின்வெள் ளென்புகுடர்
தூவு முதிர மலநீர் நரம்புதுன் மாமிசமு
கோவு முரோமமு மன்றி நுதல்விழி யாருளவோ. (கூக)

மனம்விருப் புற்றிடி னேயெவை யும்மழ காகமன்னுந்
தினமுவர்ப் புற்றிடி னல்லவுந் தீதெனச் சேருவபோற்
கனதனத் தாரின்ப மென்னக் கருதிடிற் காணுமதா
யனன் மலிதுன் பென வாயினதுவா யமருமரோ. (கூஉ)

கள்ளையகடு நிறைய வுண்டால் வெறி கைவருமே
யள்ளியும் வந்து பிடிக்கி னுணர்வை யழிவுசெயும்
வெள்ளை நஞ்சுமயில் வோருயிர் போக்கிடு மெல்லியரை
யுள்ள முற்கூறின வெல்லா மடையு மொருங்குறவே. (கூ௩)

தறியி னிலாவுரிஞ் சிச்சுக முற்றுத் தளருவபோற்
குறியி னிற்கூடி யின்பெய்திய பின்னர் கொடுந்துயரஞ்
செறிவ தறிந்து மதனை யுவாவுறுந் தீநெஞ்சமே
யுறிவ தறிந்தினி யண்ணல் கழலிணை யன்புசெய்யே. (கூ௪)

வருத்தமொன் றின்றி மதிரு டிலறவன் மலர்ப்பதத்திற்
கருத்தை யிருத்தி யிருவினை போகுமுட் கண்ணுங்கனி
திருத்தம தெய்திச் சிவஞான முற்றுசிற் றம்பலத்தி
லிருத்தி நடனமுங் காட்டிடுங் கைக்கனி யென்னவுமே. (௯௫)

சூழ்வுற மக்களும் பொன்பணி காணி சுரிகுழலார்
காழ்மணி மாடநற் கட்டின்மென் பஞ்சணை காமுறுமிவ்
வாழ்வு கடாழ்வுற மாட்டா வெனமதி மன்னினையா
லேழ்நர கத்துக் கெமன்கொடு போயினி தென்செய்வையே. ௯௬

புகலிட மின்றி யிருக்கிற்பொய் சொல்லவும் புல்லருட
னிகல்செயுஞ் சூதினை யாடவு மேதுயி லெய்திடவும்
பகலிற் பரத்தையைப் புல்லவு மின்னும் பலபலவாந்
துகழுறு செய்கையிற் றுன்னுவை யேயிது தோன்றிலையே.(௯௭

ஒருவனைப் பஞ்சணை தன்னில் வைத்தும்வே றொருவனையே
தெருவீ திகளிற் றிரியவிட் டுஞ்சிரிப் பாற்சிலரை
யுருகவைத் தும்பின் னொருவற் கடைக்கா யுதவியுந்தன்
னுருவை விலைப்படுத் தும்பரத் தைக்கே னுழன்றனையே. (௯௮)

மைத்துன ரென்று வருவா ரெவர்க்கு முறைவழங்கிக்
கைத்திலள் போலக் கணம்பிரி யேனெனுங் கட்டுரையா
னைத்தவ ருள்ள பொருளளி யாவிடி னுஞ்சையின்றிப்
பொய்த்தொழு கும்விலை மாதரி னுவல் பொருந்தல்விடே. ௯௯

இளையவ ரேனு மிழிஞர் களேனு மிருந்விலை
யளைபவ ரேனு மருங்கிழ மேனு மடைந்தவரை [ரொருவர்
யுழையிற் கொடுசென்று மொண்பொருள் கைக்கொண்டு மோ
வீழ்யும் வல்கபல் வாற்றி விடுப்பரை மேவனெஞ்சே. (௱)

செல்வம் பெருத்திடிற் றேர்ந்தவர் தம்மின ரென்சிறிது
மில்லவ ராயி னிறும்பப் பண்டைந்து மிதமகிதம்
புல்வ தகல்வ தியர்தொன் றும்பின்றிப் புலால்கள்சிது
மெய்யியர் குதக் கிரைந்த வீணுருவர் மேவுனெஞ்சே. (௱௧)

இழமையிற் செல்வம தெய்திடிற் கல்வி யினிதடைந்தே
யுளகன் னெறியிற் செலுத்தி யுணர்ந்தவர் பாலடைந்து
வளர்மதி சூடி கழலன்பு மீகையும் வாய்மைமுத
லளவறு சற்குண முள்ள வணுகி யுமருவையே. (௱௨)

பொற்குடந் தன்னின் மலமடைப் பார்புரை யப்புவியி
லெற்புடம் புள்ளு மரிதா யிம்மானிட யாக்கையுள்ளே
துற்குண மாதி பொருந்த விதைப்புரை தீர்ந்தவர்க
ளற்பமுங் கொள்ளா தறுவறுப் பாரிதை யாய்வைநெஞ்சே. ௱௩

உடலிற் சிவநிறைந் துள்ளளவு முபசா ரஞ்செய்வார்
விடலிற் சவமெனத் தூடணங் கூறுவர் மேல்விழுந்தே
சுடைவோ ரழுபவர் போற்குரல் செய்வர் தலைகவிழ்ப்பர்
சுடலை வரைவரு வாருற வாகவுஞ் சூழ்ந்தவரே. (௱௪)

மணமெனக் கூடுவர் மங்கையர் வாழ்த்துவர் மைந்தர்களோ
டுணவினை யுண்பர்க ளொண்பூ முடிப்ப ருயிர்பிரியிற்
பிணமெனத் தூறி யழுபவர் போற்பின் குழல்விரிப்பார்
துணைவ னெடுந்துயர் தீர்வரை துய்த்தங் ககலுவரே. (௱௫)

கருங்குழல் வெம்முலைக் கோட்டாற் றுணித்துவெங் காமவுணன்
யருங்குலர் வித்திரு கண்வலை யாற்கட்டி வைத்திருக்கு
நெருங்கு மனித விறகினைக் கூற்ற னிவிதெடுத்தே
யொருங்கு நரக வெரியினுக் கூட்டி யுளமகிழ்மே. (௱௬)

நெஞ்சே யுனக்கொன்று செப்புவன் கேணித நின்மலமாம்
பஞ்சாக் கரமெனும் பாரிய வாளைப் பரிந்தெடுத்துப்
புஞ்சா ருடம்பி லெழுதலை முற்றும் புகுந்தரியிற்
றஞ்சார் மதிதரித் தான்வந் தருடருஞ் சத்தியமே. (௱௭)

கண்ணினுக் கேயிருள் காணுவ போலக் கதித்தெழுந்த
மின்னவஞ் ஞானமு ஞானத் தினுலன்றித் தேர்தலுறு
கண்ணுங் கதிருஞ் செறியிற் றமங்கழி வாமதுபோ
லண்ணும் பசுவு முணர்வுமொன் றில்லதூர் ஞானமுமே. (௱௮)

மனைவியை யாவ னுடையவ னன்னவன் மன்னிடுவான்
கனவனை போக மஃதற்றவ னன்னதிற் காதலுறுன்
றினையள வேனுந் தளையினை யுற்றவன் சென்றடையு
நினைவரும் வீடறு வான்பிற னன்னதி நேர்ந்திலனே. (௱௯)

காளியைப் பூசிப் பவனைநம் புங்கருங் கார்மறிபோற்
கோளுறு மென்னக மேயுனை நம்பிக் குவலயத்தி
னீள்பிறப் போடிறப் பெய்தின னீதை யகற்றுமரன்
றாளிணை நம்பிடின் மேல்வீடு மின்பமுந் தான்றருமே. (௱௰)

மேலவ ராயினும் வெண்மதி சூடியின் மெய்க்கழற்காஞ்
சீலநற் பத்தி யிலரே லவரிடை சேர்ந்திடினும்
பாலன முண்ணினும் பாவையைக் கொள்ளினும் பரனன்பர்கள்
சாலவுங் கீழின ராத்தள்ளு வாரிது தானறியே. (௱௧௧)

எத்தனை புத்திகள் போதிக் கினுமிறை வன்கழலைப்
பத்தி செய்தாயிலை நால்வர்கள் பாடலைப் பாடிலைபா
ரத்தனை யுந்திரிந் தல்லலுக் கெய்த்திலை யென்னுளமே
செத்திடி னுனெளி தின்பெய்து வேனிது தீர்ந்தசொல்லே. ௱௧௨

மெய்யிற் புரைபுண் ணுதிர மொழுகில் வெறுப்பதுபோற்
றய்ய விடையினி னுறுசென் னீர்சலக் தான்வடியும்
வெய்ய வகலல்குல் கைத்திடு மாயின்மிக் காவலும்போஞ்
செய்ய சிவபெரு மானருள் வந்தவண் சிக்குமரோ. (௱௧௩)

ஊன்றின் பவன்றகர்க் காமுண வீந்தது வுண்கையிலே
பூன்ற கறிகணன் காயின வென்றுளம் பொங்குவபோற்
றோன்ற நற்காலமு மாக்கும் பொழுதுணர் வங்கிழந்தா
லான்ற சமய மெதுவென நோக்கி யலைகுவனே (௱௧௪)

முள்மர மாயினுங் கோட்டங் திருத்திதன் மொய்யடிக்கா
மெள்ளளவில் பாதுகை யாக்கி யணிவ ரியல்பதுபோ
லுள்ளமுங் கள்ள முறினு மொழுங்குசெய் துன்கழற்காம்
வள்ளன் மென்பா துகை யாக்கிவழங்க லென்றேவன்றே.

## ஸ்ரீ வைக்கம்.

ஊத்தை கழுவி யுவரடைக் காய்மென் றுறவுசெய்து
சீத்தையைக் கூடித் தினம்பசி போக்குந் தெரிவையரைப்
பார்த்து மயல்கொள னீக்கிவைக் கத்திற் பரமனடி
காத்திருந் தாற்கதி கைவரு மேயென் கறைநெஞ்சமே. (௩௧௬)

அன்னை யிறந்தன ளப்ப னிறந்தன ணண்டினரும்
பின்னை யிறந்தனர் யாமிறப் போமிப் பெரும்புவியி
லென்னை யிருப்பென வைக்கத் திறைவ னிணையடியை
முன்னின் மெஞ்ஞானமு மோக்கமு மேவந்து முன்னிற்குமே.

வேதிய ருண்ண வறுசுவை யோடன்னம் வேண்டுவன
வாதர வோடு மளிப்பவர்க் கன்றே யருளளிப்பான்
காதன் மிகுத்துவைக் கத்தி லுறைவான் கழலொலிக்கும்
பாத மிரண்டும் பரவுவர் தன்னடி பற்றுவையே (௩௧௮)

செங்கையிற் பாம்பு சிரமிசை பாம்பு செறிந்திலங்கு
மங்கத்திற் பாம்பிங் கரையினும் பாம்போ டரும்பணிகள்
பொங்கும் விடந்தரும் பாம்புக ளாகப் பொலியின்வைக்கத்
தெங்கள் பெருமா னவற்றினைக் காட்டுதே றேர்வியப்போ.(௩௧௯)

எவணிருந் தாலு முனைகினைந் தந்தணர்க் கீயினன்ன
மவண்வந் துவந்தனை யாயி னயன்சிரங் கொய்தவினை
சிவனுமென் றேயொரு தக்கனைச் செற்றவெந் தீவினைக
ளிவணுறு மென்றே வதற்கெதி ரெண்ணினை போலுமரோ.

## திருவிஞ்சைக்களம்.

அஞ்சலை நீக்குவ னைம்பொறி தன்வய மாகவுயர்
விஞ்சை யருளுவன் மெய்பொய் விளக்குவன் வீணுழலு
நெஞ்சை யடக்குவன் நீடொளி காட்டுவ னித்தந்திரு
விஞ்சைக் களமமர் விண்ணவன் றன்னடி மேவிடினே. (௩௨௧)

சேர்மானு மாரூ ரனுந்தொழு தேத்துந் திருவிஞ்சையி
லேர்கொள வீற்றிருந் தின்பமெல் லோர்க்கு மெளிதளிக்குங்

கூர்வேல் விழியுமை பங்கவென் னுள்ளங் குழைந்துபுன்க
ணீர்வார வன்பழித் தாண்டுகொள் வாயிந்த நீணிலத்தே. (௱உஉ

## ஸ்ரீ கன்னிமாகுமரி.

அஞ்சிநின் றேதொழு தேத்தின னுன்ற னடியிணையைத்
துஞ்சல் கனவு நனவிவை நீக்கித் துரியமெனும்
பஞ்சணை யிற்றுயின் றானந்த வாரி படிவதற்கே
கொஞ்சுங் கிளிமொழி யீவாய் குமரிப் பகவதியே. (௱உ௩)

காரு முறங்குங் கனியுகும் பூம்பொழில் கண்ணுறங்கு
மூரு முறங்கு முயிர்க ளுறங்கு மொளிர்கதிரு
நீரு நிலவு முறங்கு மெனதுகண் ணின்மலர்த்தா
ளாருஞ் சிலம்பொலி கேட்கி னுறங்கில வம்பிகையே. (௱உ௪)

அயனொடு மாலர னாதிய தேவ ரமரர்தமை
வியனரர் மாக்கண் முதலிய மேதினி விண்ணுலகை
நயமுட னீன்றுந் தளராத கொங்கையு நாண்மலர்தோய்
புயலனை கூந்தற் குமரிய தான பொலம்வியப்பே. (௱உ௫)

## ஸ்ரீ சுசீந்திரம்.

மானார் கலவி மயக்கத்தி லேபட்டு வாழுமெனைத்
தேனார் பொழில்சூழ் சுசீந்திரஞ் சீர்பெறச் செல்வமிக
நானா ரெனுமுணர் நல்கும் மூர்த்தி நயந்துறைந்தான்
மோனா கரனென வாக்க லரிதல முன்னுவையே. (௱உ௬)

உண்டன வுண்டு வுடுத்த துடுத்தி யொருதினம்போற்
பெண்டநு வித்துந் துயின்றெழுந்து மென்ன பேறுபெற்றாய்
வண்டலர் சோலைகண் மன்னு சுசீந்திர வள்ளறனைக்
கண்டனை யேல்வினை யெல்லாந் தொலையுங் கதிதருமே. (௱உ௭)

## திரு ஆச்சிரமம்.

அத்திரி யென்னு முனிவ னடிப்பணி யன்பினினை
பத்தினி யாமன சூயையின் கற்பினைப் பாருணரப்

புத்திர ராகி விளையாடல் செய்தநற் புண்ணியனே
நித்திய னேயென் னிடர்தீர்த் தருளுவை னீணிலத்தே.(௩௨௮)

எண்சா ணுடம்பி லொருச்சாண் டூருதுய ரிவ்வகையாற்
புண்சா ருடம்புமுற் றும்வயி றுயிற் புகன்முடிமோ
பண்சார் மொழியுமை யன்றன சூயையின் பாலிறந்து
வண்சார் புவிபுக ழுத்துணே யாகிய வள்ளல்சொலே. (௩௨௯)

## ஸ்ரீ வடிவீசுரம்.

கடியார் மலரலர் கற்பகச் சோலை கனியுகுக்கும்
வடிவீ சுரத்தி லமரு மிறையவன் வார்கழலை
முடிமீ தணிந்து தொழுதேத்தி மோனத் திருக்கினெஞ்சே
படிமீ துனக்கு நிகருள வோவிது பற்றுவையே. (௩௩௦)

இருளஞ்சு கூந்த லிமையவ ளோடு மினிதமர்ந்து
மருளஞ்ச நல்லுண ரீயும் வடிவீ சுரத்தெம்மணல்
வெருளஞ்ச ஞானமுங் கல்வியுஞ் செல்வமு மேவளரும்
பொருளஞ்சு நன்களிப் பான்மலர்ப் பொன்னடி போற்றுவையே.)

## திரு அநந்தசயனம்.

கனந்தரு வானிரு கைதொழப் பண்ணிக் கசிந்துநகு
மனந்தரு வானிங் கெமன்பயந் தீர்த்து மதிதருவா
னினந்தரு வான்பெரு மின்பந் தருகுவ னெப்பொழுது
மனந்த சயனத் திருக்குமெம் மண்ணலை யன்புறினே. (௩௩௨)

இலங்கையை வென்ற விளைப்பு மிரணிய னீளுடலை
மலங்கத் தளியவ னானுண் மயக்கமும் வல்லிசையற்
கலங்கு மிரத நடத்திய வெய்ப்பு மகற்றுதற்கோ
கலங்கலி னித்திரை கொண்டனை பத்மநா பாகலிக்கே. (௩௩௩)

செந்தமிழ் மாமுனி தங்கும் பொதியையிற் றேன்பொழியுஞ்
சந்தனச் சோலையி னின்றெழு தென்றி தண்டாமரைமி
குந்த தடம்படிந் தேவீசுங் கொள்கை யுணர்ந்ததனு
லெந்த விதமெழு வார்பத்ம நாபரின் னீணிலத்தே. (௩௩௪)

## திரு ஆல்வாய்.

படிமீதி னேயொரு பாண னடிமையென் றேவிறகை
முடிமீது கொண்டுவிற் றுண்டதி னுனுமோர் மொய்குழல்பா
லடியாற் றாதேகின தாலால வாயுறை வ்ாரையய்ய
வடியார்க் கெளியரென் றேயுணர்ந் தண்டின னுள்வதற்கே.௱௩ரு

## மேலைச்சிதம்பரம்.

பாம்பும் புலியும் பணிமொழி மங்கையும் பார்த்திருக்கத்
தேம்ப முனிவரர் வானவ ரன்பிற் றிளைத்துருகிக்
கூம்பக் கரஞ்சிர மேற்கொடு நான்முகன்று ளங்கொட்ட
ஓம்பு மரிமத் தளந்தட் டவாடின னுத்தமனே. (௱௩௬)

பிறப்பது மீட்டிறப் பாவதற் கென்றுணர் பேரறிவைத்
துறப்பதி னலடை துன்பங் களெண்ணில தொன்றுதொட்டுச்
சிறப்புறு பேரையென் மேலைச் சிதம்பரத் தின்னடனம்
பெறத்தமி யேற்கரு ளின்னவை நீங்கியின் பெய்துவனே.(௱௩௭

## திருக்கோகன்னம்.

புசபல லங்கையர் கோனொரு காற்கொண்டு போதல்கண்ட
கசமுக னேருற நீர்கழித் திங்ஙன் கடிதடைவேன்
சுசிதர னேற்கென வேற்றுமுக் காலமைத் தங்கமர்த்த [வனே
விசைகொண் டெடுத்திடக் கோகன்னம் போன்றொளிர் விண்ண

## ஸ்ரீ கோட்டாறு.

போதலுங் தங்கலும் பொன்னுக் கியல்பெனப் புந்திசெய்தோர்
வீதலஃ தெய்தினுந் துன்பில ராய்ப்புரி மென்னகைபோற்
காத மயின்றிசை பாடு ஞிமிறு களிப்பமரைப்
போதலர் கோட்டா றமரொரு கோட்டனைப் போற்றுவையே.*

ஆதித்தன் வெப்ப மழன்றெழல் கண்டருங் காருடன்றி
வீதிக்குட் பந்த ரெனநிற்பத் தேங்கதை மேற்பொழுக்கப்

பேதித்த சோலையிற் போது நகைக்கப் பெருவளங்கண்
டாதிக் கணபதி பூரிப் படைந்தங் கமர்ந்தனரே. (௱௬௰)

## திரு வேள்விமலை.

வேய்முக டொல்லென வீழுமரு விமென் றோடனனின்
றேய்பால தாயு மிருஞ்சுனை கொப்பு ளெனவிலங்குந்
தூய்வேள் விக்குன்ற மெனுமங் கையுள்ளஞ் சுகமடையச்
சேய்கந்த னுற்றிருக் கும்மெழில் கண்டு தெரிசிப்பையே. (௱௬௧

## திருவட்டாறு.

அட்டாக் கரநடு வேபூ மகளோ டமருமரி
வட்டா றதனில் வதிந்தன ரான்மன மேனிதமுங்
கிட்டாது கிட்டிக் கிளர்மணித் தாளிற் கிடப்பையெனி
னெட்டா தனவும் வந்தெட்டு மிகத்திற் குறையில்லையே. (௱௬௨

## ஸ்ரீ அகஸ்தியர்கூடம்.

சந்தனஞ் செண்பகங் கோங்க மிவைதரு தண்மலர்வா
சந்தனஞ் செண்டகங் கைசரித் தாடுணை தந்தருளுஞ்
சந்தனஞ் சென்ன மெனக்கொள் ளகத்தியன் றண்மலருஞ்
சந்தனஞ் சென்றுல வும்பொரு னைதனைத் தான்வணங்கே. *

## திருப் பறக்கை.

பிறத்தலு மிப்பெரும் பூமியி லேவினை பின்றொடா
விறத்தலு மேழ்நர கெய்தலு மீளலு மோர்கொடனை
மறத்தலு மாற்றி யுபர்ஞான மோங்க வளம்பெருகும்
பறக்கை யமர்ந்தருள் பண்ணவன் பாதம் பணிகுவையே. ௱௬௪

## திருப் பூதப்பாண்டி.

வேண்டிய வெல்லா மொருங்குட னெய்த வினைவளனுஞ்
சேண்டொடு பூம்பொழில் சென்னெற் கழனி திசைக்கரியின்
மாண்டகு வாலனை கன்னல் செழிக்கவு மாதில்புதப்
பாண்டியி லென்றும் வதிபர மன்கழல் பூற்றுவையே. (௱௬௫)

## திரு நாகர்கோவில்.

சோக மொழியும் வன்றுன்ப மொழிந்திடுந் தொல்லைவினைப்
போக மழிந்துநற் புண்ணிய மெய்திப் புதல்வர்மனை
யாகம் பெருகவு மாதமும் மாரி யடையுமுயர்
நாகர்கள் பூசைசெய் கோயி லமரரன் றுணணுகே. (௱௪௬)

## திரு வற்கலை.

ஒக்கலைப் பிள்ளை யுடன்மாதர் புல்க வுயரெழிலி
வக்கலை யும்மதன் பக்கமும் பெய்யநெல் வானளவ
விக்கன் முதலிய நோய்கெட வேதியர் வாழ்வுமிகக்
கைக்கனி யென்ன விளங்கு மிறைவன் கழல்பணியே. (௱௪௭)

## ஸ்ரீ பற்பநாபபுரம்.

தாபங்க ளென்னு மொன்னார் வலிகுன்ற வொண்சக்கரமுஞ்
சாபமுந் தாங்கிப் பெரும்போர் விளைத்துச் சயமடைந்து
தாபதர் போற்றவும வெற்றியின் சங்க முளக்கிபற்ப
நாப புரத்தமர் கண்ணனை நாளு நவிற்றுவையே. (௱௪௮)

## திருத் தாழைக்குடி.

ஊழியின் வெப்ப மெனவரு மொண்கதிர்க் காற்றிலனுய்
வாழையின் வெண்குருத் தேகுடைக் கோலும் வளர்கலைமண்
மாழை மதியது வாகவும் பற்றி மகிழென்னிறை
தாழைக் குடியில் வதிய வதியரன் றுள்பணியே. (௱௪௯)

## திருப்பதிசாரம்.

விருப்புறு வோர்கள் விரும்பிய தெய்தவும் விண்ணளவும்
பொருப்பின் வளனும் பொழில்சூழ் மருதம் பொலிவளனுங்
கருப்புறு கன்னி பலவின் வளனொடு கையுதவுங்
திருப்பதி சாரத் திருக்கு மிறைசே வடிபணியே. (௱௫௰)

## திருத் தேரூர்.

நீரூரும் வீதி நிலவூரு மாட நெடுந்திரைசேர்
காரூரும் பூம்பொழில் கற்பின ரூருங் கடிமனைக
ளேருரு மாந்த ரிடையூறற வின்ப மூறும்வணக்
தேரூரில் வாழ்சிவன் சேவடி யேத்தித் தெரிசிப்பையே.(௩௫௧)

## திருத் தாமரைக்குளம்.

காமரு செந்நெற் கழனிக டோறுங் கடைசியர்கள்
வாமநற் காலை வராலென வுன்னிவெண் ணுரைவெளவ
தூமக் குழலினர் வாலன மென்றுளஞ் சோருமொரு
தாமரை வாவி படிவோ ரரனடி சாருவரே. (௩௫௨)

## ஸ்ரீ சிவாம்பிகை.

சிவாததல விளக் கென்ன நிகழ நிருமலமா
பவாவின் வருபிறப் போடிறப் பியாவு மகற்றியொரு
திவாவவ மேகழி யாவகை யின்பத் திடைபுகுத்துஞ்
சிவாம்பிகை வாழரன் றுண்மலர் நெஞ்சத் திருத்திடினே.

## ஸ்ரீ மருத்துமாமலை.

மதியொடு கங்கையை வைத்த களிரு மமரருக்கா
யுதிர்கட னின்றெழும் வல்விட முண்ட வதனலிவுங்
கதிர்விடு வன்னியைக் கையி லமைத்த கனலெரிவும்
விதிசெய வோமருத் தாமலை யுற்றனை விண்ணவனே. (௩௫௪)

## திரு மருங்கூர்.

கருங்குன்ற மேய்க்குந் தனத்தார் மென்கா னடையைப்பயில
மருங்கனஞ் செல்வ மயில்வா னைக்கண்டு நடம்புரிய
விருங்கமு கென்ன செஞ்சாலி வளர விலக்குமிவாழ்
மருங்கூ ரமரரன் மென்று ளிரண்டும் வணங்குவையே. (௩௫௫

## திருச் சக்கரைக்குளம்.

நெற்கதி ரெங்கும் பொலிதர நீர்களில் வாளைதுள்ள
வொற்க மிருப்பிட மின்றி யகலவொன் றுருறவாய்ச்
சொற்கொளப் பல்பொருள் சாலவுந் தோன்றத் துலங்குமொரு
நற்கதி யீயுஞ் சருக்கரை வாவியென் றுண்முழுகே. (௱ருசூ)

## ஸ்ரீ கிருட்டிணன்கோவில்.

வெண்ணை யொடுதயிர் பாலெடுத் துண்டும் விலையுயர்ந்த
வண்ணத் துகில்கொடு போந்து மலைக்குடை யாய்பிடித்து
மெண்ணின் மடவரற் புல்லியும் பற்று திருந்திலங்கும்
கண்ணன் வளருங் கிருட்டினன் கோவிற் கருதுவையே. (௱ருஎ

## திருக் குற்றாலம்.

தேனார் கமழ் செண்பகச் சோலையின் றெழுதென்றலொடு
கூனார் மதிநதி சேர்ந்து குற்றாலர்க் கொருத்தலைநோய்,
நீனா னூறக்குடி நீருண்டு சற்றுநி லாமையினாற்
பானார் குழல்மொழி யாண்மலை வெய்திப் பசந்தனளே. (௱ருஅ)

## திருநெல்வேலி.

அங்கந் தனிலணங் குந்திரு நெல்லை யரன்சிரசிற்
கங்கையும் வைத்ததை யாயின் முனங்கா னகமடைந்து
தங்குஞ் சனகியை ராவணன் கொண்டவத் தன்மைகண்டே
பொங்கும் பயமடைந் தொன்றினர் போலும் புலப்படுமே.

தாய்பெற் றெடுக்கிற் றலைக்கெண்ணை பூமலர் தானணிந்து
தூய்கரத் தேந்தி முகமோந் தரிய சுகமளிப்பாள்
வேய்பெற் றெடுத்ததி னுலல வோவில் லுணர்விளந்த
வாயன்கோ டாரியின் வெட்டின னெல்லை யென்னப்பனையே.

தொல்லுல கத்துயர் வேதியன் பூசையின் றுண்டியற்றப்
பல்லகத் தேற்ற நற்சாலி யுலரப் பரத்தியவன்
செல்லுழி மஞ்சி பொழியச்செந் நெல்லுக்கு வேலிசெய்தோய்
வல்வினை யென்னையழியா வகையொரு வேலிவையே. (௱சுக)

## ஸ்ரீ சிவசைலம்.

மன்னற் கரனணி மல்லிகைத் தாமம் வழங்கொருகா
லன்னதில் ரோம மிருத்தல் கண்டென் னென்றவன்வினவப்
பன்னவன் றேவன் சடையின தென்றொரு பொய்பகர
வன்னவன் காண்ப லெனவது காட்டரன் றுள்பரவே. (௱௬௨)

## ஸ்ரீ பாவவிநாசம்.

ஆவலி னுற்கள வாடல் கள்ளுண்ணா லயன்மனையை
வாவித் தழுவ லுயிர்க்கொலை யாற்றல் மதமிகுத்தே
தேவென் றிலங்குங் குருவுக் கடாதன செய்தன்முற்றும்
பாவ விநாசந் தெரிசிக்கி னோடிப் பறந்திடுமே. (௱௬௩)

## திருப்புடைமருதூர்.

இந்திரன் றனைவனைச் செற்ற பாவ மிறுப்பவவண்
வந்து புடைமரு தாய்கோன் பியற்ற மதிதரித்தோன்
சிந்தை யுவந்துநற் காட்சியும் வேண்டிய திந்துபினர்
சந்தத மங்குறை நாரம்பு நாதன் சரண்பணியே. (௱௬௪)

## திருச்செந்தூர்.

அந்தியு நண்பக லுந்தொண்டர் போற்றி யடிபணியக்
கந்த மலர்க்குழல் வள்ளிதெய் வானையுங் கண்களிப்பச்
சிந்துவும் பன்மலர் சாத்துவ போற்பல முத்திறைப்பச்
செந்திற் பதியமர் கந்த னிணையடி சேர்வைநெஞ்சே. (௱௬௫)

வேட்கையென் னுவைக் கொடுகாமத் தேறன் மிகவருந்தி
மாட்சியொன் றின்றி மயங்கி யுறங்கெனின் வல்லிருளை
காட்சியி னல்வென் றறிவெனுங் கைவிளக் கீந்தருளி
னாட்சி புரிந்தசொக் கேசனை யன்பிற் பணியகமே. (௱௬௬)

ஆ திருவிருத்தம்—௩௬௭.

முற்றிற்று.

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

## அநுபவமுரைத்தல்.

சிவமென்னு மொருசோதி திகழு மென்னுட்
டினகரனுஞ் சோமனொடு தேய்வுஞ் சோரப்
பவமகலக் கரையேறும் பரம போதர்
பார்த்தறிவார் சாக்கியதின் றிக்கைக் கண்டு
நவவுலகு நான்மறையு நத்த வென்று
நம்முயிராய் நாதமுமாய் நயந்து நிற்குந்
தவவுலகர் சம்புவினைச் சார நிற்பார்
தத்தம்வினை தாழ்வுறச்சந் ததமு யன்றே. (௧)

என்றுமொரு படியாக விலங்குஞ் சோதி
யீரேழு பதினாலு லோக மாயும்
பொன்றுமுடல் கரணமிந் தியங்க ளாயும்
புகலுமவற் றவற்றிற்கு விடய மாயு
மொன்றுடனுந் தாக்கற்று நிற்ப தாயு
மொளிரிலத னுண்மைதனை யுரைக்கப் போமோ
வன்றாயு மனவாயு மடரி லத்துக்
கதுவொப்ப தன்றியொன்று மாகா வன்றே. (௨)

என்னையுமோர் பொருளாக வாண்டு கொண்ட
வெல்லையிலாப் பேரொளியே என்று முள்ள
முன்னவனே முதனடுவீ றென்று மில்லா
முழுமுதலே முப்புடியுங் கடந்து நின்ற
மன்னவனே தமியனுறும் வருத்த நீங்க
வளரவித்தை வேரினையு மகற்றி மேலா
நன்னிலையாம் ஞானக்கண் ணளிக்கி லன்றே
ஞாலமெலா நினதுருவாய் நாடு வேனே. (௩)

ஆறுதலா யெனக்கொருவ னறைந்த நுட்ப
மாரணத்தின் கருத்தென்றே யறிந்து கொண்டு

மாறுபடு சிந்தைமுதற் பொறிகண் முற்று
மாதேவ சொருபமென மதித்து நின்றேன்
றேறும்வெளி யேவிழுங்கிற் றொன்றில் லாமற்
சிவோகமதா யானபின்பு செகமுங் காணேன்
கூறுதற்கு நாவுமுண்டோ பாவு முண்டோ
குணங்குறிக ளேதேனுங் குறித்தற் குண்டோ (௪)

மாறுத பத்தியினுக் கெளிய னாகும்
வளர்ஞான முடையார்க்கவ் வணமே யாகும்
வேறேது மில்லாமல் விளங்கி நிற்கும்
மேதினியி லுள்ளளவு மதுவே யாகு
மாறுத களிப்போடு கவலை யாவு
மவனன்றி பிறிதில்லை யாய்ந்து பார்க்கிற்
றேறுதார் பலவிதமாய்க் கண்டு சித்தந்
தியங்குவா ரவருரையிற் றெளிய லாமோ. (௫)

வானவரு மண்ணவரு மறிய மாட்டார்
மறைநான்கோ டாகமமு வகுக்க மாட்டா
வானவிதி காசமுடன் பதினெண் புராண
மதனுண்மை யுள்ளவா றறைய மாட்டா
தானவரு மீராறு சயமத் தாருஞ்
சாற்றிடார் பின்னெவர்தான் சாற்ற வல்லார்
நானவனுய்ப் போனதினு லெனக்கு மெட்டா
ஞானிகளோ மௌனத்தா னவிலார் காணே. (௬)

நில்லாத செல்வத்தை நிலையென் றெண்ண
நித்தநித்த மாவல்மிக நெஞ்சிற் சேர்ந்து
பொல்லாத விடயத்தி லீர்த்துப் போகிப்
புன்றலைகீ ழுறத்தள்ளத் துயில்வேன் றன்னை
வல்லாளன் வந்தெழுப்பி யதனை மாற்றி
மன்னுபெருஞ் செல்வத்தின் மாயச் செய்தான்
பொல்லான்கை மயக்கதினுற் புந்தி கெட்டுப்
பொறிபுலனற் றிரும்பிரமை பொருந்தி னேனே. (௭)

நானேமுன் முழுமுதலாம் பிரம மான
நற்சிவமாத் திரமாக நயந்து நின்றே
னேனேகற் பிதமாயை யிழுத்து வேறா
யிந்தியவந் தக்கரண விடயத் திட்டு
மேனேவ வாசைவலை கொண்டு பின்னி
வெய்யவிரு ளிற்புதைத்தாண் மெலிவு மில்லேன்
கானேவ மிதித்தொருவன வற்றை நீக்கிக்
கண்கலுழக் கரையவைத்தான் கரைகின் றேனே. (அ)

முன்னது மாத்திரமாக விலங்குங் காலை
மோகத்தா லதைப்பிரிந்து முளைத்தே னாய்
மின்னனைய பலவுடலந் தொறும் புகுந்து
விளையாடி மெல்லிய ரின்பந் துளைந்தேன்
பின்னதுவு நானாக வேடங் கொண்டு
பின்றொடர்ந்தென் றனைவலிதிற் பிடித்து நோக்கித்
தன்னிருதாள் கொடுசிரசின் மிதித்த தந்தோ
சகலமுமே யெனையகலத் தனிற்றனித் தேன். (கூ)

மனைவியுடன் பஞ்சணையிற் றுயின்றுஞ் சின்னாண்
மக்களுடன் விளையாடி புக்கி ருந்துந்
தினையளவு மீயாமற் செல்வஞ் சேர்த்துஞ்
சிறப்பாக வாழ்நாளி லொருவ னோர்ந்தே
யினையதனைக் கண்டுள்ளம் பொறாதா னாகி
யிவைமாறக் கண்திட்டி செய்தா னேகிற்
றெனையுமினு மதையடரா வண்ண மாக
விருத்தியவ னகன்றனனே யென்சொல் வேனே. (ய)

ஆறாத காதலினா லொருவன் வந்தென்
னருஞ்சிரசின் மிதிக்கவவற் கென்செய் தேனோ
மாறாத பெருஞ்செல்வத் திருந்தேன் றன்னை
மாற்றிவெறு மையனாக்க வென்செய் தேனோ
கூறாத வார்த்தை யொன்றைக் கூறிநெஞ்சைக்
குழைத்திடவு மியானவற்கு செய்த தென்னோ

வேறாக வெனைத்தனிக்க விட்டு மற்றை
மெய்காணங் கெடுக்கவவற் கென்செய் தேனே. (௰க)

பாற்கடலி லெறும்பூசி முனையின் பாலைப்
பல்லிசில துளிநாளி படிகால் மாந்த
ரேற்கு மொருசே ரெறுது மிருமரக்கா
லியானையொரு கோட்டையெழி லியுமோ வென்றாற்
றாக்கும்வட வாவனலு முற்று முண்ணுஞ்
சால்புபோற் பலபேத சமயத் தோருந்
தேக்குவார் சுகானந்த முற்று முண்டு
சிதாகாச மாத்திரமாய்த் தெளிநர் நிற்பார். (௰உ)

உளமிறக்கக் கல்லாத மாந்தர் பல்கா
லூர்வலையஞ் செய்ததிறற் பயனென் றுண்டோ
அளவிறந்த நூன்முற்று மாய்ந்தாய்ந் தாலு
மகமடங்கக் கற்றிலரே லாவ துண்டோ
இளமையிலே யறிந்தடங்க வில்லா ராயி
னெத்தனைநாட் சென்றாலு மடங்கு வாரோ
புளகமுறு மன்புகொண் டானைப் போற்றிற்
போதமுறு மானந்தம் பொங்குந் தானே. (௰௩)

தானான தன்மயத்தைத் தரிசித் தோர்கள்
சதாநிட்ட ராயொன்றைச் சார்ந்தி டார்கள்
போனாலுங் கற்பூர தீபம் போலே
புகுவதல்லாற் மற்றொன்றாய்ப் போக மாட்டார்
ஞானாகா யமதன்றி யொன்றில் லாத
ஞாயத்தா லதுவாக நயந்து நிற்பார்
கோனான வதன்மகிமை சிவனே யன்றிக்
கூறவெவ ராலுங் குணியாய் நெஞ்சே. (௰௪)

பிறவிகளி லியானடையாப் பிறப்போ வில்லை
பெத்தமதி லியானடையாப் பெத்த மில்லை
யுறவுகளி லியானடையா வுறவோ வில்லை

யுறுநரகு மியானடையா தொன்று மில்லை
மறவிகளி லியானடையா மறப்பு மில்லை
மதிதரித்தோய் செய்ததையே செய்தாய் நீயு
மிறவுதித்த லில்லாத நிலையைச் சற்றே
யினியேனு மெளியனேற் கருள்செய் வாயே. (ருரு)

ஊனுகி யுயிராகி யுணர்வு மாகி
யுட்கரண மாகியிந் திரியமோ ரைந்தாய்
வானுகி மண்ணுகி யப்பு வாகி
வாயுவா யனலெல்லாய் மதியு மாகிக்
கோனுகிக் குறிகுணமொன் றில்லா தாகிக்
குன்றமுமா யணுவாகிக் குலவி நின்ற
யானுகி யெங்குமாம் பொருளாய் நிற்கும்
ஞானமொளிர் தீபத்தை நணுகாய் நெஞ்சே. (ருசு)

உள்ளவனே யுலகத்தி லன்ப ரல்லா
வுயிர்தோறு முற்றிருந்து மொன்றுங் காட்டாக்
கள்ளவனே கதிர்மதிதீ யெனுமிம் மூன்றைக்
கண்ணுக வுடையவனே கருணை வேலை
தெள்ளுசிறு துளிதெறிக் கிற்சிறுகு மோதான்
றீவினையே னுய்யும்வகை யொன்று செப்பாய்
வள்ளலென் னொளிர்பரமே மங்கை பாகா
மறைநான்கு மோலமிடு மௌன வாழ்வே. (ருஎ)

மெய்ப்பொருளே மெய்யடியார் முகந்தே யுண்ணும்
விரிந்தசுக சாகரமே விமல மான
கைப்பொருளே ஞானியர்க ளுளத்துள் வைத்துக்
களங்கமுறு வோர்க்கென்றுங் காண்பி யாம
லெப்பொழுதுங் காப்பாற்றும் பரம விண்ணே
யெளியனேற் கெளிவந்த விறைவா வீண்டு
பொய்ப்பொருளை யுண்மையெனப் புகுதா வண்ணம்
புந்தியளித் துன்பதத்திற் புகுத்தி டாயே. (ருஅ)

அஞ்ஞானத் தியல்பதுதான் ஞானத் தின்மை
யாகுமது மூடியபின் னகல்வ தாகு
மெஞ்ஞானத் தியல்பதுதான் முற்று மந்த
விமலபர வத்துவதாய் விளக்க லாகுஞ்
செஞ்ஞாயி றதுபோல ஞான யாகுஞ்
செறிமேகம் போல வதற்கெதிர தாகுஞ்
சுஞ்ஞான மடைந்தவர்கட் கிந்த வுண்மை
தோன்றுவதல் லாலெவர்க்குந் தோன்று வாமே. (௰௯)

அஞ்ஞான மான்மாவை மறைத்த தென்றல்
அனலியெழி லியையடைய விளக்கி னாலுஞ்
செஞ்ஞாயி றதனைக்கார் மறைத்த தென்று
செகமுரைக்கும் விவகாரம் போல்வ தாகு
மெஞ்ஞான வத்துவஞர் விளக்கி னாலு
மேதினியஞ் ஞானமதை மறைத்த தென்பா
ரெஞ்ஞான்று மிவ்விவகா ரஙக டப்பா
மெழில்சித்தான் முற்றும்விளங் குதன்மெய் யாமே. (௨௰)

கற்பனையா னவைமுற்றும் பொய்ய தாகுங்
கற்பித்தன் மனதினது தொழிலே யாகும்
விற்பனர்க ளத்தொழிலின் மேவ மாட்டார்
மேதினியு மவர்க்குமெய்ப் பிரம மாகும்
பற்பலவாத் தோன்றுமுல கங்கண் முற்றும்
பரப்பிரம மெனமறைக ளறையக் கேட்டு
மற்பமறி கிற்றிலையா லென்ன சொல்வே
னன்புள்ள வென்னகமே யறிவாய் நில்லே. (௨௧)

விரதங்க டவங்கண்முதன் முடிந்த தாகும்
விண்ணவற்கட் கிறைவனருள் விளக்கு மாயி
னிரதங்கண் மிகத்தெவிட்ட வுண்ட தாகு
மின்பவாரிதி துளைந்தென் றிருக்கு மாயின்
கரதலா மலகம்போற் கண்ட தாகுங்
கழல்சாத்திக் குரவன்கடைக் கணிக்கு மாயி

னரதனங்கண் முற்றுமிவ ணடைந்த தாகு
    மமலபரந் தானாக வமரிற் றானே. (உஉ)

பொய்மலத்தாற் றோன்றுநாற் கரண மோடு
    பூதமைந் திந்தியமைந் தவத்தை யைந்தாய்
வைசித்ய வத்துவே வயங்கி யாவும்
    வடிவில்லா வடிவதுவா யொளிருங் காணே
துய்யபரத்தின் சொருபந் தானாய்த் துன்னிற்
    சோகமுதற் றுற்குணங்கள் சுருங்கிப் போகு
மையமிலே ககனவெளி யகன்று தோன்று
    மவனிதனின் முத்தியும்வந் தடையு நெஞ்சே. (உ௩)

செய்மனனத் தாலறிவைத் தெளியும் போதர்
    சித்தமல மாசறுத்துத் தெய்வ மாவார்
நைபவரே ஞானவொளி நயந்து காண்பார்
    நன்றுரைத்தா னுத்தமூம்பி னலனங் குண்டா
மைமலமாங் கோத்தனன் மயக்கங் கூடு
    மாறாத கவலைமுற்று மருவும் பாரு
வெய்பிறவி நணுகினர்க்குச் சொருபத் துண்மை
    வெளியாகா வென்மனமே விச்சை மேவே. (உ௪)

அன்னையெனக் குள்ளறிவா யணைக்கும் போதே
    யற்றேனு னங்குள்ள மயக்க முற்றும்
பின்னையொன்றும் பிரித்துணர்த்திப் பேசக் காணேன்
    பேரருளாற் பிரமமதாய்ப் பின்முன் னற்ற
தன்னையே தானளித்தா ளதுசம்பத் தாய்ச்
    சமமதுவாய்ச் சமாதிக ளு மதுவே யாகி
மின்னொளியு மேருமுத லணுவு மாகி
    மேதையி ரீறிலதாய் விளங்குந் தானே. (உ௫)

அறியுகில்லா யறிவதுவா யணையுஞ் சீவன்
    ஆதியந்த மில்லாத சாக்கி யாகும்
பிறிவுணரும் பேதையர்போற் பிதற்ற வேண்டாம்

பிரித்தறியாக் கூடத்த னெனவும் பேராந்
தறிநிலையாய்ச் சந்ததமுஞ் சமனாய்க் கண்டு
தற்பதநு பூதியதைத் தானாய்ப் பூண்டு
குறிகுணமொன் றில்லாத கோமான் றன்னைக்
கொற்றவரோ டோடிக் கொண்டு நோக்கே. (உசு)

பலவறிவாய் நின்றதுவும் பிரமந் தானே
பரதுரியம் பரமேசன் றானு மாகுங்
கலைசுழலக் காரணகா ரியமு மாகுங்
கண்ணகன்ஞா லங்காணுக் கண்ணுங் காணு
வலைநிலைய ருமறையோ டமரர் காணார்
வலாரியயன் மான்முதலோ ரறிய மாட்டார்
நிலைகுலையா நிட்டையினுற் றானுஞ் சாக்கி
நித்தசுக போதமதாய் நிகழும் பாரே. (உஎ)

எவனொருவ னுநீயென் றெண்ணங் கொள்வா
னேகமாம் பரவெளியை யறியா மூர்க்க
னெவனொருவ னவனேதா னாக நிற்பா
னேழுலகுந் தானாகு ஞானி யாவா
னவநவமாந் தோற்றத்தி னடுவே சித்தாய்
நன்கமர்வோ னமனுலக நாடா னுடான்
சிவனவனே யெனவெண்ணித் தேவ ரோடு
சித்தர்முத லோர்தினமும் போற்று வாரே. (உஅ)

திரைசெய்யு மாயைமுதற் பிரம மல்லாற்
றேயத்தி லொன்றில்லை சிந்தித் தேபார்
மரைமகனு மாலவனு மதையே சொன்னார்
மதியணிந்த சம்புமதை வழங்கி னாரே
தரையிலுள மாதவரு மதைத்தா பித்தார்
சதுர்வேத மவ்வாறே சாற்றிற் றம்ம
புரையிலா கமங்கள்புரா ணமுமீ ரொன்பான்
புகன்றதுவு மவ்வணமே புந்தி செய்யே. (உசு)

என்னகத்தி லிலங்குவதை யின்னங் காணே
னேதோவொன் றிருந்ததென வெண்வே னுள்ளே
முன்னறிவும் பின்னறிவும் பேதங் காணேன்
முத்தர்களி னநுபவமா முடிவுந் தேறேன்
மன்னறிவே மாதேவன் வடிவ மாகு
மாயைமுதற் றோற்றமதற் கனிய மாகாப்
பன்னறியேன் பரமார்த்த நிலையைச் சற்றே
பரிசுடையோர் படிந்தறிவார் பற்று நெஞ்சே. (௩௰)

நீங்காத காதலெனும் விரை வெடித்து
நெஞ்சுள்ளே குறுமுளையாய் நீண்டு நாளுந்
தாங்காத மோகமெனும் விருக்க மாகித்
தருகனியே சகமாகத் தயங்கும் பாரு
பாங்கான பரமபதம் பருகி நின்றூற்
பார்காணுப் பரமாயே யொளிரு மித்திற்
றாங்காமற் றாங்குபவர் கோடா கோடி
சுதநவெளி யுள்ளொழித்துச் சுகிப்பாய் நீயே. (௩௧)

சங்கரனு ரட்டகமா மெட்டுந் தந்தார்
தத்வமசி வாக்யார்த்தந் தானே தானும்
புங்கவரும் விண்ணவரும் புனித மான
போதக்கண் ணுனோக்கிப் புரண மானு
ரெங்குநிறைந் தீறில்லா தேக மாகு
மெந்தையே யென்னுள்ள மினிதா மாறு
மங்குலழித் தத்துவிதா னந்த மீவாய்
மாதேவா வடியிணையும் வழங்கு வாயே. (௩௨)

பலநூல்க ளுரைத்தபடி நடப்பா யாகிற்
பராபரத்தி னருளென்று பதியும் பாரிற்
சிலநூலுந் தேர்ந்தறியார் தெளிந்தார் போலச்
செப்புவதிற் றிரிபையந் தீரு மோதா
னலமறிய வவனோநா னெனு மருத்த

நாதனலான் மற்றொருவர் நவில மாட்டார்
கலகலக்கும் பாஷண்டக் கலரைக் கூடிற்
காரணகா ரியமினதென் றறியாய் காணே. (௩௩)

துவம்பததற் பதவருத்தந் துலக்கா விரர்
தூய்மறையின் சூக்கத்தைச் சொல்லு வாரோ
விவன்பதமு மின்னதென வறியி னன்றோ
வெம்மானி னியல்பதனை யிசைக்க லாகு
மவம்பலசெய் தவர்க்கெதனை யறிவித் தாலு
மவருள்ளஞ் சாக்கியினி லழுந்த மாட்டாச்
சிவனடியை யடைந்தவரைச் சேர்ந்து நாளுஞ்
செல்வனு யினிதிருந்து சீவிப் பாயே. (௩௪)

அநுநீயா ளுயென்னும் பொருளைக் கூறு
மரியமா வாக்கியத்தை யறிந்தா யானுற்
றதுவென்னும் பொருளதுவுந் தானே யாகுஞ்
சாற்றுதுவ மெனும்பொருளுந் தானே யாகும்
புதுமையுள விரண்டுமொன்ருய்ப் போத லேதான்
புகலசியின் பதமாகும் புந்தி செய்யின்
முதுவிபுவாய்ப் பின்னமிலா திலங்கி மேலா
மூத்தனுமாய் மூவுலகை யாள்வாய் நீயே. (௩௫)

பிரமமதே தன்னறிவாங் கோசு நீக்கிற்
பேரின்ப முத்தியுடன் பெறுவாய் சொன்னேன்
நிரந்தரமாய்ச் சொல்வதெலா மிதையே யாகுந்
தற்பததொம் பதப்பொருளு மிதுவே யாகும்
பரமசிவ னருளெய்திற் பதங்கை கூடும்
பத்தியுறி லவனுமுவந் தருள்பா லிப்பான்
கரமணிபோ லெல்லாமாய்க் காணும் போதங்
காணுமற் கண்டவர்க்கே கருத்துஞ் சீராம். (௩௬)

ஆனுயென் னும்பதத்தி னருத்தங் கேளா
யகண்டபர சொருபத்தை யதுதா னென்று

ஞானகா ரத்துணர்வை நீதா னென்று
நன்றாக வுரைத்தபடி நாடிப் பார்க்கில்
வானமொன் றேகடவின் மகத்வின் னென்றும்
வழங்குதலின் பேதம்போற் பேத மாகுங்
கோணை பரவெளியி னருளால் ரெண்டுங்
கூர்ந்தோரி லொன்றென்றே கொள்ள லாமே. (௩௭

துரியமதை யறியாதார் சுழுத்தி சேர்ந்துஞ்
சுகசொருபச் சோதியினைத் துறந்து நிற்பார்
திரியுமன முடையவரு மதனைத் தேறார்
செகமெய்யாய்க் கொள்பவருந் தெரிய மாட்டா
ரரியதவஞ் செய்தவரே யதனை யோர்வா
ரகம்விருத்தி யற்றவரு மதனைச் சேர்வார்
விரியுமகண் டாகார விருத்தி தன்னை
மேவினரு மதையடைவா ரின்னுங் கேளே. (௩௮)

திறல்வீரந் தெளிவுகனஞ் சிறப்பி யாவுந்
திடஞான முறுவதனுற் சேர வெய்து
முறவுணர்வா யுபரதிவை ராக்ய முற்று
லொன்றுரா மோகமுத லோடிப் போவார்
புறமகமு மலகரணம் விரைவி னென்றிற்
போதவொளி யாயத்து விதமாய்ப் போகுஞ்
சிறையகங்கா ரமதுற்ற சீவன் றானுஞ்
சித்தாகித் தேசொளியாய்த் திகழு வானே. (௩௯)

அருவமே யுருவமதா யவனி மீதே
யடைந்தறிவா வேசத்தா லனுரை யோட்டும்
பருவமுதற் பாராம லருளை யீயும்
பகராம லேபகரும் பரமாந் தன்னைக்
கருவமுத லகன்றோடக் கடைக்க ணிக்குங்
கருணையினை மழைபாகப் பொழிந்து நிற்குஞ்
சருவமுமே பிரமமதாய் விளக்கி வித்துச்
சகந்தோன்று வணுஞ்செய்யுஞ் சாற்ற வொன்றே. (௪0)

ஓர்ந்துணரா வூமையவ னென்றற் கொன்றை
யுற்றவிரு கையாலு முணர்த்தி னானே
சாய்ந்துதருந் துக்கமெலா மொன்று சேர்ந்து
தானிருந்த விடந்தோன்று தகன்று போன
கூர்ந்தவறி வினரிதனை யோர்வார் மற்றைக்
கொள்கையரோ சற்றேனுங் குறித்துப் பாரார்
வாய்ந்ததபோ பலமிருக்கி னவையுங் கிட்டி
மகத்தான பரநிலையும் வாய்க்கு நெஞ்சே. (சக)

பேசுவதில் வல்லான்போற் சபைக்கு வந்தாற்
பிலக்கவொரு நூலுத்தி பிரஞ்ஞை வேண்டுங்
கூசுவதின் மிக்கானு யிருக்கிற் பல்லோர்
கூடுமிடஞ் செல்லாமன் மௌன மாவாய்
தாசிகள்போல் வெளிமயக்கஞ் செய்ய வேண்டாந்
தன்னையே பார்த்திருக்கி னெல்லாந் தோன்று
மாசகற்று முயற்சியைக்கைக் கொள்வா யாகின்
மாயைமுத லெம்மயக்கு வாரா நெஞ்சே. (சஉ)

துரியமெனின் மூன்றுடலுந் தொழில்செய் போதுந்
துயில்போது மவற்றவற்றிற் றோய்ந்தி டாமற்
பிரிதாக நின்றுமத னிவிர்த்தி யோடு
பிரவிருத்தி முழுவதையு மறிவ தாகுந்
தெரிவதனு லெவற்றையுமே சாக்கி யென்றுஞ்
சேராமை யாற்பிரத்தே கான்மா வென்றும்
விரிபிரம மாய்விளங்கு மேலோர் சொன்னார்
வேதமுமே யவ்வண்ணம் விளம்பிற் றன்றே. (சங)

இரப்பதற்கு விழைபவரே யிரையைக் கொள்வா
ரிளைத்தலிலாத் திறத்தவரே தன்னை யெட்டுங்
கரப்பதிலாப் பசுக்களுக்கோ கன்றி லாசை
கனங்குழையார் தங்களுக்கோ பூணி லாசை
வரப்புடைய மன்னவர்க்கோ யாற்றுன் றேய

மாசறுத்தார்க் காசையிலை யுத்தி வந்தாற்
பரப்புடைய சிரவணத்தைச் செய்யின் மேலாம்
பரந்தானாய் விளங்கியின்பம் பருக லாமே. (௪௪)

ஆசையிலா வறிவினரே யடைவார் முத்தி
யகண்டசிவ வநுபவமே யகமாய் நிற்குந்
தேசதிலாச் சீவருக்குச் சிறப்ப தென்னை
சிற்றறிவைப் பூண்பவரைச் சேரும் போகம்
பேசறியாப் பித்தருக்கோ பிரம போதம்
பின்றிவிடு மவருணர்வும் பிறழ்ந்து போகுங்
காசமிலா நிபுணர்க்கோ கருதும் போதங்
கரமணிபோ லெளிதெய்துங் கருத்தி னானே. (௪௫)

வார்சடையான் கழலென்று மனனஞ் செய்யில்
வளர்பிறைபோ லுண்மையறி வோங்கு மிக்க
தேசுடைய னாகியொளிர் தன்னைத் தேறிற்
செகமெல்லாந் தன்மயமாய்த் திகழும் பாரு
தூசடையாச் சுத்தமதா மாயை தோன்றச்
சுகமான மௌனவநு பவமே துன்னு
நீசடையாய் நின்மலமா மறிவ தாக
நித்தமுமே வத்துவினி னிலைத்துப் பாரே. (௪௬)

கோபமுதற் றுற்குணங்க ளறவே விட்டுக்
கொற்றவரோ டோடிக் குணத்தை யெய்தித்
தாபமது மூன்றினையுந் தடிந்து நின்று
சத்வவாசனை பொருந்திற் சாக்கி தோன்றுந்
தீபமது போலொளிரு மதனி னிற்கச்
சேர்சத்வ வாசனையுந் தீர்ந்து போகுந்
தாபதர்கள் கொண்டாடு நிலையி தாகுந்
தற்பதவாழ் வன்றியொன்றுந் தனிற்றோன் றாவே. (௪௭)

கூடத்த னானபின்பு குணமூ முண்டாங்
கொடுமயக்க முதலெவையுங் குன்றிப் போகுந்

தேடத்தான் கிடையாமற் றிகைத்தார் பல்லோர்
 தினதிதியாங் கணிதமிதிற் றீர்ந்து போகும்
வாடத்தா னின்றயர்வார் வழியுங் காணார்
 வார்த்தைசொல வெட்டுவதோ வழங்கும் வத்து
நாடத்தான் முன்னிலையா யிருக்கு மோதா
 னண்ணிரு விரண்டாகா தகண்ட யாமே. (௪௮)

நித்திரையிற் றினமொளிரு மறிய மாட்டார்
 நின்றிலங்குஞ் சாக்கிரத்தி லறிய மாட்டார்
மித்தையாஞ் சொப்பனத்து மறிய மாட்டார்
 மேதினியெங் குந்தேடி யறிய மாட்டார்
சுத்தர்தமை யண்டினர்க்குத் தோன்று மேலாஞ்
 சுருதிமுடி வுணர்ந்தவர்க்குந் தோன்றும் பொன்னூ
மத்தமல ரணிந்தவன்றன் னருள்பெற் றோர்க்கும்
 வந்துதிக்கு மவரவரி னுளத்துண் மன்னே. (௪௯)

விடயமதாம் படுகுழியில் வீழ்ந்தோர்க் கென்று
 மேவொண்ணா ததுவாக விளங்கி நிற்கு
மடையவுமே பிரவஞ்ச வாழ்க்கை நீத்தோர்க்
 கண்மைதா யவரறிவுக் கெட்டி நிற்குங்
கடையவரா யினுமேலோ ராயி னாலுங்
 கருளகன்ற கருத்தினராய் நின்று பார்க்கிற்
றடையின்றி முப்பாழுங் கடந்த போதந்
 தன்னுள்ளே விளங்கிமுற்றுந் தானுச் செய்மே. (௫0)

தேவேசன் செப்புமறை யந்தத் துள்ளுஞ்
 சிவேச சகமெல்லாம் பரமாய்க் காணு
மூவேசர் மொழிகீதை யுள்ளு மோரின்
 மொழிவற்ற ஞானமதே முடிவாய்க் காணும்
வீவேது மில்லாத பரமான் மாவே
 விளங்குலக காரணமா மதனை யென்று
மேவாமன் மேவுவா யெனது நெஞ்சே
 வீடடைந்தா ரறைந்ததுவு மிதுதான் பாரே. (௫௧)

எந்நாளு நன்னுளே யிறையாஞ் சோதி
யிசைப்பரிய வத்துவித மாயி லங்கி
யிந்நாளிற் றற்பரமா மறிவே நாமென்
றிருக்கில்கொடும் பிறப்பிறப்பு மினிவா ராவே
பன்னாளு மிகமுயன்று பாசம் போக்கிற்
பராபரமாம் பொருடானே பற்றுங் கண்டாய்
சின்னாளுஞ் செல்லாமற் றிடாநு பத்தாற்
செகசீவ பரமறந்து சித்தாய்த் தேறே. (ருஉ

சுத்தறிவாய்ச் சாதனங்க ளடையி னன்றாய்ச்
சொச்சொருபச் சோதியது துன்னும் பிராந்தப்
பித்தறிவாம் பேய்மனமே பிரித்து நோக்கிற்
பெரும்புவன மன்றியொன்றுந் தோன்ற மாட்டா
முத்தரிவர் பெத்தரிவ ரென்று முன்னு
மூடவறி வும்பாழா யோக மூழாச்
சித்தறிவாய்த் தெள்ளியனாய் நிற்கி னீயே
சிவோகமென வேயிலங்கிச் சென்னந் தீர்வாய். (ருங)

அசிபதத்தா லறிவனவே யகண்ட மாகு
மானந்த மென்றதுவு மதுவே யாகும்
நிசிபகலற் றொளிர்வது லக்ஷியமே யாகு
நின்றவுயிர் பதியதுவாச் சியம தாகுஞ்
சுசிபதமாங் கூடத்தன் பிரம மென்ற
தோற்றங்கள் கற்பிதமாஞ் சொன்னேன் கேளு
வசியதனின் மேலோர்கண் மதிப்பார் பாரு
மாயையெனும் விவகார மாறிப் போமே. (ருச)

பல்லோரி னநுபவமு நூலுந் தேர்ந்தாற்
பஞ்சவத்தை பகுத்தறியு மறிவே தானு
மெல்லோரி னநுபவமு மிதுவே யென்று
மென்னுளத்தி லுள்ளதுவு மிதுவே சொன்னே
னல்லாமன் வேறொன்றை யறிந்தா யாகி
லாயுமறை யந்தத்துக் கதுவி ரோதஞ்

சொல்லாலே சொலப்புகினு மெட்டா வெட்டாத்
தொன்மையவர் சொன்னாரே யுள்ள வாறே. (௫௫)

செவ்விதா யிம்மறையி னத்தந் தோன்றத்
தெளிஞரடி பேணியவர் பணிசெய் வாயே
லெவ்வுலகு நின்னுள்ளே யிலங்கும் பாரு
வெண்ணரிய சராசரமு மிலங்கு மப்பாற்
றிவ்வியமாம் பரஞ்சோதி திகழ்வுந் தோன்றுந்
தெளிவடையி லஞ்ஞானஞ் செறிவ தெங்கே
யிவ்வுலகி லகண்டபரத் தழுந்து வாயே
லெய்துவதென் னுளவியம்பா யெனது நெஞ்சே. (௫௬)

பொன்றலிலாப் பூரணமே யகத்து நிற்கும்
புறத்தினிலு மதுதானே புணர்ந்து நிற்கு
மென்றுமிது விப்படியே யிருப்ப தாகு
மெள்ளளவு மிதிலைய மில்லை யில்லை
நன்றறிவா ரிதனுண்மை தெரிவார் மற்றை
நானிலத்தோ ரறியார்கள் ஞான காய
மின்றுளதே யன்றுளதா மேக மாறு
லெப்போது மொருநிலையா யிலங்கு மன்றே. (௫௭)

கண்டமெனத் தோற்றுகின்ற வுலக மியாவுங்
கருத்தினு லூகிக்க வகண்ட மாகு
மண்டர்நரர் முதலான பேத மெல்லா
மப்படியே யகண்டபர சிவமே யாகு
மெண்டருமைம் பூதங்க ளதுவே யாகு
மிரவிமதி தாரகையு மதுவே யாகுந்
தெண்டிரையா ரெழுகடலு மதுவே யாகுஞ்
சேதனு சேதனமு மதுவாம் பாரே. (௫௮)

அய்யுளத்தா ரறியவொண்ணு தகண்ட போத
மாசைவலை யமிழ்ந்தினரு மறிய வொண்ணுப்
பொய்யுளத்தார் புகுதவொண்ணுப் புரண போதம்

போகமதி லழுந்தினரும் பொருந்த வொண்ணு
நய்யுளத்தா ரெப்போது நண்ணும் போத
நானெனதை யறுத்தவர்க ளுடும் போத
மெய்யுளத்தார் தாமாக விளங்கும் போதம்
வேதன்முத லெல்லோரும் மேவும் போதம். (ருக)

பிரஞானம் பிரமமென விலங்கும் போதம்
பேச்சற்ற மௌனியர்கள் பேணும் போதந்
திரஞான முள்ளவர்கள் சேரும் போதந்
தெளிமறையும் ரகசியமாய்ச் செப்பும் போதம்
வரைஞான்று வசித்தாலு மறிய வொண்ணு
மாவாக்கிய முணர்ந் தோரா லறிய லாகுந்
தரைஞான்று பலதவங்க ளாற்றி னோர்க்கே
சார்வுறுமென் றென்குரவன் சாற்றி னனே. (சுய)

வாக்கியங்கள் புகன்றதெல்லாம் வழக்கா நியாயம்
வல்லுணர்ந்தோர் தெரிவரதின் மகிமை யெல்லாம்
போக்கியங்க ளுணர்வார்க்குப் புரண மாகாப்
போதநெறி யுணர்ந்தவர்க்கே புரிக்குங் கண்டாய்
தாக்கற்ற பக்குவர்க்குந் தன்னுட் டோன்றுந்
தன்னறிவே யதுவாகச் சமாதி கூடித்
தேக்கிநிற்போர்க் குந்தெளியுஞ் சித்வி லாசந்
தேகமே தானென்போர் தெளியார் காணே. (சுக)

துரியவதீ தநுபவமே விதேக முத்தி
தோய்வதனுற் சுகமேவுஞ் சீவன் முத்தி
யரியவகண் டாகார நிலையே யாகு
மடைகுவார் நிட்காம தவத்த ரென்று
நிரியாண நிட்டையதே யறிவா தீத
நிருவிகர்ப்ப நேயர்களே யதினி லைப்பார்
கரியான வறிவதனை வருந்திக் கண்டு
காண்பரிய காக்ஷிதனிற் களிப்பாய் நீயே. (சுஉ)

பொன்பணிபோற் பிரமத்திற் புவிகண் முற்றும்
 புரித்ததற்கு வேற்றவே பொலியும் வெள்ளை
யென்பணிந்த விறையவனு ரருளி னாலே
 யிவ்வுண்மை வெளியாகு மெளிதிற் காண்பா
யன்பறிவு சத்யமுத லடைந்து நின்று
 லரனுரு மருளீவ ரன்னை யொத்தே
மின்பொருவும் பிரவஞ்ச வாசை நீத்து
 வெள்விடையோன் கழலடியை மேவு மேவே. (௬௩)

அறிந்தோமென் பாரறிவுக் கெட்டா தாகு
 மறிந்தவரோ பேச்சற்று மூகை யாவார்
செறிந்தடங்கி யிரண்டாகத் தெரியு மாகிற்
 செப்புதற்குஞ் சிந்தைக்கு மொரு காலெட்டும்
பிறிந்தறிவா ரைக்கீழே தள்ளி நிற்கும்
 பின்னமுறி னப்படியே பிரம மெட்டா
பெறுந்தகையர் துவிதமிறந் ததுவொன் றேயாய்ப்
 பிறங்கிநிற்பார் பிசகார்கள் பேணிப் பாரே. (௬௪)

சும்மாதா னிருப்பதற்கு துரியத் துற்றுற்
 றுவிதம்போ மதனுன்முன் னிலையுந் தோன்று
வெம்மாயை யகலுமிந் திரியங்கள் பற்று
 மேதினியுந் தோன்றாது வீண்போ காது
தம்மாலே யியன்றளவு சமத மாதி
 சற்குணமுற் றேகாந்தத் தினி திருக்கிற்
கைமான்சேர் சிவனருளா லெளிதின் மேவுங்
 கருத்துவந்து தினமுமிதைக் கைக்கொள் வாயே. (௬௫)

குணமான ஞானத்திற் கூடி நின்றுற்
 குவலயத்திற் பலதீர்த்தந் துளைந்த தாகுங்
கணமான பலவினையு மற்றுப் போகுங்
 கருத்தினிலே வாசனு கூயமுண் டாகும்
பிணமான வுடன்மூன்றுங் கழன்று காணும்

பேசரிய பரவொளியும் பெலமாய்த் தோன்று
மெணமான நாற்கரண மிறந்து போகு
மிறைவனரு ளொளிதின்வந் தெய்தும் பாரே. (௬௬)

பரமாக விளங்குதலே பத்தி யோடு
பன்மலராற் செயும்பூசை யாகும் பாரு
கரஙியாச மதுவாகு மங்க நியாசங்
காயசுத்தி பூதசுத்தி யதுவு மாகு
மூரமான வான்மசுத்தி யந்த ரியாக
முற்றபூ சையுமாகு முன்னி னேரே
திரமான மானதமாம் பூசை யெல்லாந்
தீர்ந்தவனு மென்னெஞ்சே சித்தாய் நில்லே. (௬௭)

மறைமுடிவாம் வத்துத்தா னாகி நின்றான்
மாவேழு கடறுளைந்த பலமு மாகுங்
கறையிருள்போங் கண்டமறு மகண்ட மாகுங்
காயசித்தி யட்டசித்தி காத்து நிற்குங்
குறைவொன்றும் வாராது கொடுங்கூற் றெய்தாக்
கொள்ளுதறள் ளுதலெல்லா மற்றுப் போகு
நிறைவாகி நிற்கிறனை யன்றி யொன்று
நேருறு வென்னெஞ்சே நிலைத்துப் பாரே. (௬௮)

பாரிரவி மதிசலந்தீ கால்விண் ணாவி
பன்னுமட்ட மூர்த்தமுமாய் நின்ற வீசன்
சீர்பெறவே யன்றறைந்த மறையிற் சொல்லுந்
திடாநுபவ மிது வாகுந் தெளிந்து பாரு
கூறறிவி னரிதனை யுணர்வார் மற்றைக்
கொள்ளுகையரோ பற்பலவாய்க் கண்டு புந்தி
திரமிலா தையுற்று மயக்க மெய்திச்
சித்சடமுந் தெரியாமற் றிகைப்பார் பாரே. (௬௯)

வாகாகப் பரமேதா னென்று மன்னில்
வாணுளு நன்னுளாய் மருவி நிற்பா

ஞகாமியஞ் சஞ்சிதமி ராரத் தங்க
ளணுகாதே யவன்காய முள்ள போதே
மீகாம ஞஞ்சன்னக் கடலை நீந்த
மேல்வீட்டிற் கதிகாரி யிவனே யாகுஞ்
சோகாதி துன்பமெலாந் தொலைந்து போனாற்
சுகமன்றி யென்னுளது சுகிக்க நெஞ்சே. (எ0)

வீட்டிலிருந் தொருவன்வெளிச் செல்வ போல
மெய்விட்டுச் சீவன்வெளிச் செல்லு வானே
கூட்டிலுயி ருளபோதே குருவைக் கிட்டிக்
கோதில்லா மெய்ஞ்ஞானம் பெறுவாய் சொன்னேன்
காட்டிலே திருடர்களாற் கண்ணைக் கட்டி
கடத்திவிடு மவனையவன் றேயஞ் செல்லக்
காட்டும்வழி யதுபோலக் கேள்வி தான்சிற்
சுகனமதைக் கையினலகுங் கருதிப் பாரே. (எக)

நன்றாக வாழவென்னின் ஞானம் வேண்டு
நானென்னு மகந்தைதனை நீக்க வேண்டு
மன்றாடு மலர்ப்பாதங் காண வேண்டு
மாதவர்க டம்மிடையே சேர வேண்டுஞ்
சென்றாலு நன்மார்க்கஞ் செல்ல வேண்டுந்
தினந்தோறுஞ் சிரவணமே செய்ய வேண்டு
மொன்றாத பரநிலையி னிற்க வேண்டு
முற்றசுக மேமருவ நிலைத்துப் பாரே. (எ௨)

நாலாறு தத்துவங்க ளொழிக்க வேண்டு
நால்வேதப் பொருளினையே நாட வேண்டு
மாலாறித் தனதுண்மை மருவ வேண்டு
மாதேவர்க் கன்பனாய் வாழ வேண்டுந்
தோலாருங் காயத்தை வேறாய்க் கண்டு
சொச் சொருப நிலையதனைத் துன்ன வேண்டுங்
காலாற வெனிற்சும்மா விருக்க வேண்டுங்

கசடற்று லடையாத தென்னை நெஞ்சே. (எ௩)

நானீயென் றிருதன்மை நாடா மற்று
னடுவாக வேசும்மா விருக்க வேண்டுந்
தானவனு நின்றிலங்கும் யோகம் வேண்டுந்
தற்பரா னந்தமுற் றிருக்க வேண்டுந்
தேனுக நின்றொளிருந் தேசுக் குள்ளே
சீவபோ தங்கெடுத் தொளிக்க வேண்டு
மானுலு மிதன்மகிமை யாரே சொல்வா
ரறிஞரறை யாரென்னி லரிய நெஞ்சே. (எ௪)

கானலிநீர் பிரவாகம் போற்கண் டாலுங்
கடுகளவா வதுதண்மை யிருக்கு மோதா
ஞனபிர வஞ்சங்க ளண்ட முட்டி
யளவிறந்து தோன்றுகினு மசத்த தாமே
கானல்கதி ரவன்கிரண மாகு மாபோற்
காசினிசிற் பிரகாச மாகி நிற்கு
மோனரித னுண்மைதெரிந் தடங்கு வார்கண்
மூர்க்கர்மெய்யாய் விழித்ததனின் மூழ்கு வாரே. (எ௫)

போரதிரு மனம்புலன்கள் வழிப்பு குந்து
பொய்யுலகம் பன்னும ரூபங் காட்டுந்
தீரரெவ ரவரதனைச் சிதைப்பார் கண்டாய்த்
திடாநுபவ மில்லாதார் மயங்கு வார்க
ளோரிலுரு வஞ்சகத்தோ பேர்ச கத்தோ
வுருவென்னிற் பேர்காணு தொழிதல் வேண்டும்
பேரெனிலன் னதுவுமப் படியே யாகும்
பிசகாகு மிரண்டையுமே பேச றுனே. (எ௬)

துரியபத மடைந்ததனைச் சோதித் தக்காற்
சுகவறிவே யன்றியொன்றுந் தோன்ற மாட்டாத்
திரிபுடியுண் டாயினெலாம் விரிவாய்த் தோன்றுஞ்
சித்தறிந்தா ரதனிடையே சேரு வாரோ

திரிமனமே யலைதல்விடுத் திலங்கு மந்தச்
செம்பொருளி னிலைத்தின்பந் துய்க்கி னின்போ
லுரியவரு மெனக்குளவோ வாய்ந்து பாரா
யுற்றசொன்னேன் பற்றிநிற்பா யுறுதி யோடே. (௭௭)

உள்ளமதி லுற்றவரா ருறுதா ரியாவர்
ஓரணுவு மிடையில்லா நிறைந்தி லங்குந்
தெள்ளறிவே நின்றிலங்கு மாய்ந்து நோக்கிற்
றியக்கமுறி லிதுவென்றுந் தோன்று தாகும்
கள்ளமன முடையாரும் அறிய மாட்டார்
கருத்தொருமிப் பில்லாருங் காண மாட்டார்
வெள்ளவெளி யாகினுமென் னந்த கற்கு
வீணலையா துயர்சித்தை மேவு மேலே. (௭௮)

ஏகமதா யழிவில்லா திலங்குஞ் சோதி
யிடத்திற்சத் துவகுணமா மாயை தோன்றி
மோகமா ராவரண விக்ஷே பங்கண்
முளைத்ததனின் முக்குணமுங் காணு மத்திற்
பாகமாய் மும்மூர்த்தி தோன்றிப் பாரைப்
படைத்துக்காத் தழித்துமத னடைவிற் றானே
வேகமா யொடுக்கியுந்தா முதித்த வாறே
வெளியாகச் சேடித்து விளங்கு வாரே. (௭௯)

அதுவென்னுந் தற்பதமா மவிழ்தங் கொண்டா
லத்துவித மாயிலங்குஞ் சுகமு முண்டாங்
கதுமெனப்பற் றுந்துவித விருத்தி மாண்டு
கறையிருள்சூ னியஞ்சுழுத்தி கனவு மற்றை
யிதுவெனமுன் னிகழ்நனவு விடைய மொன்றி
யீந்திடுந்துன் பெனுநோய்க ளிற்றுப் போகு
முதுவுணர்வெய் தினருமுனை மெச்சு வார்கண்
மோக்கவீ டெழிதின்வந்து முன்னிற் கும்மே. (௮௰)

தானான சன்மயத்தை யல்லா லொன்றைத்

தானெனவுங் கொளவொட்டாத் தத்வந் தாண்டிப்
போனாலுஞ் சித்போத வெளியாய்த் தானே
போவதலாற் பிறிதாக விடமோ வில்லை
ஞானாகா யம்மதுவே யான பின்னர்
நானெனலெங் குதிக்குமதை நயந்து பாரு
கோனான வென்குரவன் சொற்ற தீதே
குணமான வெனதுளமே குறித்து நில்லே (அ

அரியமறை யாகமங்கள் பலவா றாக
வறைந்தாலும் பரம்பொருளை யறிய வொண்ணா
வரியமறை யாகமங்க ளறைந்து மென்னே
யாம்பரானா ரியனாவந் தருளிற் றானே
யரியமறை யாகமங்க ளறிந்தா லுந்தா
னநுபவமா யமபரத்தை யறிய லாமோ
வரியமறை யாகமங்க ளெல்லா மெய்து
மறிவுருவ னருளீயின் அமல நெஞ்சே. (அஉ)

சொல்லரிய ஞானிக்கு வருசென் மங்க
டொடராத வகையதுதான் றேன்றக் கேளாய்
நென்முதலாம் பற்பலவாம் விதையை நன்றாய்
நெருப்பில்வறுத் தான்முளைக்க நேரு மோதா
னலகலிலாப் பவந்தோறு மாற்றி யுள்ள
வரியவினை விதைகளையு மனலா ஞானம்
புல்லிவறுத் திடுதலாற் புனர்சென் மங்கள்
போருந்தாவா மந்நெறியைப் பொருந்து வாயே. (அங)

மெஞ்ஞானி தானிருக்கும் விரதஞ் சொல்வேன்
மேதினியை வெவ்வேறாய் விளக்கு கின்ற
வஞ்ஞான மாயைபொறி கரணந் தேக
மத்தனையும் பாழாக்கி யறிவே தானா
யஞ்ஞாலத் துறும்போகங் கனவிற் கூட
விச்சித்து நுகராம லுபவா சித்துச்
செஞ்ஞாயி றேய்ப்பனிறைந் தொளிர்வ தாகுஞ்

செப்புமிதற் கீடாமோ மற்ற நோன்பே. (அச)

ஈரேழா முலகனைத்தும் விழுங்கி நிற்கு
மிறையன்றி யெங்ஙனமோர் பொருள் விளங்கும்
பாராரும் பலபொருள்கள் விளங்கி னாலும்
பராபரமே யதுவதுவாய்ச் சமைந்த தாகு
நேராகும் போதமதாய் நின்று பார்க்கி
னிசரூப மேயன்றி யொன்று மில்லாப்
போராடும் பொய்ப்பொருளை யுணரி னுண்மைப்
பொருளறிய வரிதாகும் புந்தி வைய்யே. (அரு)

பாராதி பூதங்க ளெவற்றை யுஞ்சிற்
பரமாகப் பார்க்கும்வித்தை படித்தா யாகிற்
பூராய மாய்நிறைந்து புவன முற்றும்
போதவொளி மாத்திரமாய்ப் போகு மென்றுந்
தீராமல் வளையமிடு சுகதுக் கங்கள்
செனனமர ணம்மென்னு முச லாடல்
வாராம லடியோடு மாய்ந்து போகு
மறந்துநினை யாநிலையை மருவு வாயே. (அசு)

பொன்னதி லேபிறந்தமணி பொன்னே யாம்போற்
பூரணமாம் பிரமத்திற் றோன்று கின்ற
பன்னுசட மாயையதின் முக்கு ணங்கள்
பரவுறுமா வரணமுடன் விக்ஷே பங்க
ளுன்னுமிதற் காதியாம் பகுதி மற்றை
யுழலுமனம் புத்தியகங் காரஞ் சித்த
மன்னுமைம் பொறிவிடய மெல்லா மந்த
மாபோதப் பிரமமதாய் வயங்கும் பாரே. (அஎ)

மயக்கமுறு மாயையினால் விழி மறைந்தான்
மாபோத மறியவொண்ணு மனது வீணே
துயக்கமுறு மதனாலே கல்வி கேள்வி
தூறோடு மழுக்கடைந்து துன்பே யுண்ணும்

வியக்கமுறு மறிவாக விளங்கி னூற்றான்
மேதினிக டனக்கனிய மேவ மாட்டாத்
தியக்கமறும் பத்திமுத்தி சித்தி சேருஞ்
செனனமர ணமுமற்றுத் திகழ்வாய் பாரே. (அஅ)

கணத்தினிலே மனமுதிக்கிற் பலவாந் தேயங்
கடல்போல விரிவாகக் காணும் பின்னிற்க்
குணத்தினிலே யதுவொடுங்கி னெல்லா முன்போற்
குன்றியது மாத்திரமாய்க் குலவி நிற்கு
மணத்தினுற் சகந்தோன்றி யொடுங்க லானு
மனத்தினுதிப் பொடுக்கமன்றி மற்றென் றில்லை
நினைத்தமனந் தனையாயிற் கானலைப் போ
னிலையாத வெறும்பொய்யாய் நிலவுங் காணே. (அகூ)

பிறப்பென்னு மாகடலிற் றலைவா யாகிற்
பிரியமுடன் சுற்றமெனு மீன்க டின்னு
மிறப்பென்னும் வேலையிடை யிருப்பா யாகி
லெழுநரகு மாவலோ டெடுத்தே யுண்ணு
மறப்பென்னுஞ் சூனியத்தில் வாழ்வா யாகின்
மதிமங்கி வெறும்பாழே மன்னு மன்னுஞ்
சிறப்பென்னும் வெறுஞ்சித்தாய்த் திகழி னியாவுந்
தீண்டாது சுகமேவுந் தெளிவாய் நெஞ்சே. (கூ0)

நீசெய்த வினையதனு னெடுநா ளெல்லா
நிலையாத வுடலெடுத்து நிவிர்த்தி யில்லைக்
காசமனு வளவேனுங் கடந்தா யில்லை
கவலைகளைச் சற்றேனு மொழித்தா யில்லை
கோசமைந்தும் பாழ்படவே துடைத்தா யில்லை
கூர்ந்தவறி வினர்கூட்டஞ் சேர்ந்தா யில்லை
மோசம்வரு மென்பதனை யோர்ந்தா யில்லை
மூடமன மேபரத்தை முன்னு வாயே. (கூக)

அன்னமய கோசந்தா னன்மா வென்னி

லவயவா வவயவியாய் விளங்குந் தேக
மன்றதி போசனத்தா லாதல் வீத
லாதியகாண் பதனாலுந் தனக்கு வேறு
யென்னுடலென் றநுபவிப்ப தாலும் வெவ்வே
றெய்துமவ யவங்கடனித் தனிநா மங்கண்
மன்னுதலா லவையான்மா வாக மாட்டா
வளருமித னதிட்டான மான்மா வாமே. (௬௨)

அலேகின்ற பிராணமய மான்மா வென்னி
லப்பிரா ணன்வாய்வைப் போற்ச டத்து
ணிலையான யோகத்தான் விடல டக்க
னெறியானு மெனதெனவே நீக்க லானுந்
தலையான வறிவுமதற் கின்மை யானுஞ்
சார்மூர்ச்சை முதலியதி லடங்க லானு
மெலேயில்லா தொளிரான்மா வாக மாட்டா
விதற்குமதிட் டானமா யிலங்கும் பாரே. (௬௩)

மனமயகோ சம்மான்மா வாகு மென்னின்
மாயோகஞ் சுழுத்திதனி லடங்க லானுங்
கனமான சந்தேக முடைய தாலுங்
கருளில்புத்தி யடக்கியா ளுவதி னாலு
மெனதுமன மெனவேறு யநுப விப்ப
திதனாலு மூர்ச்சையி லாத தாலுந்
தனமான வான்மாவாய்ச் சாற்றல் கூடாச்
சாருமிதற் கதிட்டான மான்மா வாமே. (௬௪)

விஞ்ஞான மயமான்மா வாகு மென்னின்
விளங்கறிவின் சாயையாய் மேவ லாலும்
பைஞ்ஞாக மாலேபோற் றோன்றல் வீதல்
பற்றியுமென் புத்தியெனப் பகுத்து வேறு
யிஞ்ஞாலத் தநுபவிப்ப தாலுந் துஞ்ச
லியோகந்தூ ஷணிம்பூதா வத்தை மூர்ச்சைக்
கெஞ்ஞான்று மிலத்தனு லான்மா வாகா

விதற்கதிட்டா னம்மான்மா வென்ன லாமே. (௬ரு)

ஆனந்த மயமான்மா வாகு மென்னி
ஸ்ரியபிர மானந்தத் தனுவாய் விஞ்ச
முனுமதற் கிதுபேத மெய்த லானுஞ்
சந்ததமு மிலாதுதுக்கஞ் சார்த லானு
மீனந்த ருந்துயிலா லெய்த லானு
மௌனதுசுக மௌனவிரண்டா யியம்ப லானு
மொனந்த ரும்மறிவ தாக மாட்டா
முன்னினிதற் கதிட்டான மொழிய லாமே. (௬௬)

முன்சொன்ன கோசமைந்தின் முழுகி நின்றோர்
முறையாக வுயர்வடைந்து முடிவாய் நின்ற
மன்பிரம நிலையடைவா ரிவையைந் துக்கு
மருவுமுட லன்னமயந் தூல தேகம்
பின்பிரா ணன்மனோ விஞ்ஞா னந்தான்
பிறங்குசூக் குமவுடலம் பேரா னந்தத்
தின்மயங்கா ரணதநுவை யடைந்து நிற்குஞ்
செப்பரிய பரமொன்றைச் சேரா தாமே. (௬எ)

அறையுமதிட் டானமதா யமரும்
னளவில்லா மகிமைதனை யறைய லாகா
நிறையுமகா காயம்போ லெங்குந் தானய்
நின்றிலங்கி யெவற்றினுமே வாமன் மேவிக்
குறைவறவவ் வற்றினையும் விளக்கித் தன்னைக்
கோனுக்கி மற்றதனை யடிமை யாக்கி
யிறையகலா திருந்துசட சித்த னைத்து
மியக்கிவிளை யாடல்செயு மியல்பினாலே. (௬அ)

தூலவுடல் சாக்கிரத்தை மருவி நிற்குஞ்
சொப்பனமோ சூக்குமத்தைச் சேரு மேயப்
பாவிலகுஞ் சுழுத்திகா ரணத்தை மன்னும்
பகர்துரிய மூன்றிற்கப் பால தாகு

மாலகை யாந் துரியாதீ தம்மெ வற்று
மருவாமன் மருவியெலாந் தானே தானய்ச்
சீலமுடன் விளங்குமதைச் செகக்கண் ணற்றோர்
சேவிப்பா ரவர்திறத்தைச் செப்ப லாமோ. (கூகூ)

உகப்புடைய பரமனையா யணைப்ப தென்று
ளூற்றவரா யதையுணர்ந்தே யொளிர்வ தென்றுண்
மிகப்புலம்பிப் பரிதபித்தல் வீவ தென்றுண்
மெய்க்குர வனடியிணையை மேவ லென்று
டிகைப்பறுத்துத் திருக்காகத் திகழ்வ தென்றுள்
செகசீவ பரபேதந் தீர்வ தென்றுள்
சுகப்பெளவஞ் சகசமாய்த் துளைவ தென்று
டுவிதமிறந் திலங்குவதென் றுரைப்பாய் நெஞ்சே. (ள)

திருவருளாற பாத்திரங்குந் தெய்வ மேயென்
சிந்தைகெட வொன்றுளதோ வின்றே செப்பாய்
கருமருளாங் கலக்கறுத்துக் கடையேன் றன்னைக்
கடைக்கண்ணான் ஞானமுறக் கருணை கூர்வாய்
திருமலங்க ளொருமூன்று மழிக்க நிற்கும்
வழியோநா னுனில்வேறே வத்தா மோனக்
குருவுருவே யின்பவா ரிதியே கோதில்
குணக்குன்றே யென்னுளத்திற் குடிகொள் வாயே. (ளக)

வேரில்லா மாயையது வித்து மாகி
விட்சேப மாவரண சத்தி யாகிச்
சீருளபஞ் சீகிருத பூத மாகித்
தீவளிவிண் மண்ணீரைம் பிராண னாகி
நேரின்மனம் புத்தியகங் காரஞ் சித்த
நெறியிற்போய் மீளவைந்திந் திரிய மாகி
யேராள மானகொப்பு விடய மாகி
யிலங்குமனந் தரித்தினிதி னருள்வாய் சொக்கே. (ளஉ)

பேராத வுறக்கத்திற் பெண்டு பிள்ளை

# வேதாந்தப் பாவினம்.

பெருஞ்சுற்றம் பின்னவரோ டப்ப ஞயி
யூரார்க ளனைவருமங் குண்டோ சொல்வா
யுற்றமர ணத்தினுமூர்ச் சையினு முண்டோ
சீரான தன்னுடலை யறிவ துண்டோ
செத்தபின்னர் தன்னோடே சேர்வ துண்டோ
பேராவல் வைத்ததனாற் பயனென் கொல்லோ
பிரமமதா யானுக்காற் பேறென் வேறே. (௯௩)

நீசெய்த வினையாலே பலவா ருக
நெடுநாளாய்ப் பிறந்திறந்தாய் நிலையொன் றின்றிக்
காசேனு மகன்றதுண்டோ கருதிப் பாராய்
காலடங்கி யொருநிலையி னின்ரு யாகிற்
றூசேனும் வந்தடையாச் சொருப மெய்தித்
துன்பங்க ளிறையளவு மணுகா தான
தேசொளிருஞ் சுகவாரி துளைந்து மேலோர்
சேர்பதத்தை யெய்தியென்றுஞ் சீவிப் பாயே. (௯௪)

ஆருமறி யாவறிவே நானென் றிட்டா
னனந்த மானதுவு மதுதா னென்றான்
றாரமுமன் றண்மையுமன் றென்று சொன்னான்
சொல்லரிய மறைமுடிவு மிதுவே யென்றான்
பேரறிவும் பெருவாழ்வு மிதுதா னென்றான்
பேசாம லூமையனா யிருப்பா யென்றான்
கூர்ந்தறியிற் கோசரமாய் நிற்கு மென்றான்
குருசொக்கன் போலெவர்தான் கூறு வாரே. (௯௫)

நித்திரையிற் றினமொளிரு மறிய மாட்டார்
நின்றிலங்குஞ் சாக்கிரத்தி லறிய மாட்டார்
நித்தையாஞ் சொப்பனத்து மறிய மாட்டார்
மேதினியெங் குந்தேடி யறிய மாட்டார்
·த்தர்தமை யண்டினர்க்குத் தோன்று மேலாஞ்
சுருதிமுடி வுணர்ந்தவர்க்குத் தோன்றும் பொன்னூ

மத்தமல ரணிந்தவன்றன் னருள்பெற் றோர்க்கும்
வந்துதிக்கு மவரவரி னுளத்துண் மன்னே. (௱௬)

சித்தமதிற் சினமதனைத் தீர மாற்றி
தெளிமனமாய்த் தெள்ளியோர் கூட்டஞ் சேர்தாற்
பத்தியொடு முக்கரண மொன்ற வைத்துப்
பரகுருவி னடிபணிய வருள் பாலிக்குஞ்
சித்தான வதுதானாய்த் திகழ்ந்து நிற்கிற்
சிவஞான வாரிதியிற் படிந்து நாளுஞ்
சத்தான சுகந்துய்த்துக் சதாகா லத்துஞ்
சரீரமறந் திருத்தலைத் தானீயும் பாரே. (௱எ)

பார்க்கையிலே பரமாகப் பார்க்கும் பேர்கள்
பாரிலுள்ள சரவசர மனைத்துங் காணார்
சேர்க்கையிலே புளிங்கனியின் றோடு போலச்
சேர்ந்துஞ்சே ராதிருப்பார் செகத்தி லொன்றை
நீக்குதலுங் கொள்ளுதலுஞ் செய்ய மாட்டார்
நினைப்புமறப் பின்மையினு ளோர்ப வற்றைப்
போக்கியமா யநுபவித்து நாள்க ழிப்பார்
புன்மனமே யன்னெறியிற் புல்லு வாயே. (௱அ)

கண்ணான தெவற்றினையுங் கண்டுந் தன்னைக்
காணாத வாறுபோற் கலங்கி யிந்த
மண்ணான வுலகனைத்துங் கண்ட வுன்னை
மதித்தறியா திருந்ததனுன் மரண சென்மம்
விண்ணாடு புகுத்திக்கீழ்த் தள்ளி யூசல்
வீசுதல்போ லாட்டியுமெய்த் திலையே யெங்கு
நண்ணாம னண்ணிநிற்கு நிலையி னின்று
நானிலமுந் தொழவாழ்வை நாளுந் தானே. (௱௯)

காணுகின்ற பொருளனைத்துங் கண்ணாய்க் காணக்
கற்றிலையே கண்டமெலாம கண்ட மாகப்
பூணுகின்ற நெறிதனையும் பூண்டா யில்லைப்

பொல்லாத வவித்தையைப்போக் கடித்தா யில்லை
கோணுகின்ற நெறியினைக்கை விட்டா யில்லை
கூரறிவி னோர்குழுவிற் சேர்ந்தா யில்லை
நாணுகின்ற மதியில்லைப் பலவா றாக
நான்கூறிற் பயனென்னை நாடிப் பாரே. (௱ா)

சாதலொடு பிறத்தல்வந்து சூழ்ந்த தென்று
தாபமடைந் திலைவேதஞ் சாற்று வான
பாதகஞ்செய் தலையின்னும் விடுத்தா யில்லைப்
பயமில்லை பரனடியிற் பத்தி யில்லை
சாதனங்க ளைங்கினையு மடைந்தா யில்லைத்
தற்பரத்தைச் சார்ந்தவரைச் சார்ந்தா யில்லை
யாதலினாற் பவத்துன்ப மகல்வ தெங்ங
னாய்ந்தங் கினியேனு மடைவாய் நெஞ்சே. (௱௯௧)

பளிங்கதனிற் பலவான நிறங்கண் டாலும்
பரிசத்துக் கின்மையினாற் பொய்யாந் தோற்றம்
விளங்கினுமென் னுறுமெத்துக் காகு மேவர்
மெய்யென்று கொள்ளுவா ரதுபோற் பூமி
துளங்குமுயி ரனைத்துமெய்போற் றோன்றி னாலுந்
துய்யவறி வின்னிலையாற் பொய்யாஞ் சொன்னேன்
களங்கமற விலங்குஞ்சத் சொருபங் கண்டு
களிப்பான கடலமிழ்ந்திக் கரைவாய் நெஞ்சே. (௱௯௨)

எவனொருவன் றன்னாலேற் றுந்தெய் வத்தை
யெழில்கொடனக் கதுவேறென் றெண்ணி னானேற்
புவமுறக்கீ ழேதள்ளி விடன்மெய் யாகும்
பன்னுரூபா சனைமகிமை யறிந்தோ னல்லன்
எவனொருவ னவனோநா னென்று பூசை
யியற்றுவோ னெங்குந் தானா யிருந்து
பவனொடி ரண்டறவொன் றாயா னந்தம்
பருகுவா னென்னாளும் பற்று நெஞ்சே. (௱௯௩)

ஆ. திருவிருத்தம்,—௲௮௯.
முற்றிற்று.

இஃது அடிதோறு மிடையிடையே ஓரசையைக் கூனாகப் பெற்றுவந்த

கலிவிருத்தம்.

வேலார் கூர்விழியாய்—மிளிர், சுத்தப் பிரமத்திடை
மாலார் சீவர்களும்—வள, ரீச ரொடுசகத்துஞ்
சீலார் நுண்ணறிவின்—றெளி, வற்ற மயக்கத்திலே
மேலா வுதித்தொடுங்கி—விரி, சொப்பனங் கண்டேனே. (௧)

வானே காலோடனல்—வய, மண்ணவற் றின்குணமோ
டேனோ ரென்புநரம்—புதி, ரத்தமை பொய்யுடலை
நானா ரென்றுணரா—நவி, வெய்துமைக் காரிருளிற்
றானாக் கொண்டுழற—றருஞ், சொப்பனங் கண்டேனே. (௨)

மதியீ ரைந்துவரை—மட, வாரக டுள்ளுறைந்தப்
பதியே நீங்கிச்சிறு—பச, லைமுத லெவ்வனமுங்
கதியாய் வார்த்திகமுங்—கடந், தேயிறப் பாய்ப்பிறக்கும்
விதியே கொண்டுழலும்—வெறுஞ், சொப்பனங் கண்டேனே. (௩)

ஏடீ தோழிசகத்—தினி, னேர்படு மெய்ப்பொருளுங்
கூடீ மெய்புரையக்—குவிந், தேவிரி வெய்துதலிற்
பேடீ யெனுமுணர்விற்—பிணிப், புண்டு தினந்தொறுமே
சாடீ யின்னன்மிகத்—தருஞ், சொப்பனங் கண்டேனே. (௪)

பூவார் நான்முகனே—புவி, தங்கு முயிரனைத்து
மேவா நின்றுதிக்க—விரிஞ், சன்றந்தை யும்புரக்கத்
தாவா நின்றுசம—னுயிர், தன்னைப் பருகன்முத
னேவாய் வந்தெனைமுன்—னுகர், சொப்பனங் கண்டேனே. (௫)

வல்லா னுகவுயிர்—வதை, செய்பவ னேவலிவந்
தல்லா ரென்சிரசி—னடி, யான்மிதித் தேகலுமே
நல்லா யானடைந்த—நல, னேடு குலங்களிறந்
தெல்லா யேயொளிர—விசை, சொப்பனங் கண்டேனே. (௬)

நாளு ரென்றுணரே—னரை, யோடுமூப் பெய்தாமே
கோனாய் வந்தொருவன்—குறு, னேக்கத னுலென்னுயிர்
தானாச் செய்துபினுஞ்—சகந், தோன்று திருக்கும்வகை
தேனார் சிற்சுகமாய்த்—தெளி, சொப்பனங் கண்டேனே. (எ)

மாதே வேதனொடு—வளர், விண்ணவ ராதியருங்
கோதே கொண்டுழலக்—குணித், தென்னையொ ருவன்வந்தே
சூதா யேயிருத்திச்—சுக, மீயச்சொ லாதசொல்லிப்
போதே யேகிடவும்—புதுச். சொப்பனங் கண்டேனே. (அ)

யார்தான் கூறவல்லா—ரவ, னுற்றலை யென்னசொல்வேன்
பாரார் கூடினுமே—யொரு, பார்வையிற் பாசங்கெடக்
கூரார் வேல்விழியுங்—குறி, காட்டுங்கைத் தாமரையு
மோரார் மேனியுங்கொண்—டெழு, சொப்பனங் கண்டேனே. (கூ)

தோழீஇ யிக்கனவைத்—தொலை, வின்றியே கண்டிருக்கின்
வாழீஇ யென்றுசொன்னு—னிதை, வாய்விட் டுரைத்தேனே
உளழிபல் செல்லினுமே—யவற், கொல்லையுஞ் சென்றிலதே
பாழியை யென்னசொல்வேன்—பர, மாகவி லங்குதலே. (ω)

ஆ திருவிருத்தம்,—கூாகூω.

முற்றிற்று.

---

## அடைக்கலப்பத்து.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

உலகெலாம் விளக்கு மொருதனிப் பொருளே
யும்பர்க ளினுமுணர்ந் தறியா
திலகுமா மணியே யிறையவர்க் கிறையே
யிணையிலா திலங்குசெஞ் சுடரே
கலகமார் விழியார் கனதன மயக்கிற்
கட்டுண்டு கழிவதற் காற்று

தலகிலா தொளியே யடைக்கலம் புகுந்தே
ஞுதரித் தருடரல் கடனே. (க)

என்றுமோர் படியா யிலங்கொளிர் விளக்கே
யிச்சையோ டனிச்சையு மில்லாக்
குன்றமே கன்று மேய்த்தவ னயனுங்
குறித்துணர் வறிவதற் கரிதா
மென்றுமே வினைக ழெழுபிறப் பிடையே
யிழுத்தழுத் தும்மிட ராற்று
தன்றுபோ லொளிர்வா யடைக்கலம் புகுந்தே
ஞுதரித் தருடரல் கடனே. (உ)

என்பணி பூணு மிறைவனே யாதி
யிடைகடை யிற்றமா மணியே
மின்புரை யிடையாள் பங்கனே வெள்ளை
விடையினி லூரும்வித் தகனே
பொன்பணி முதலாம் போகத்தி லுழன்றே
பொழுதவம் போவதற் காற்று
தன்பர்கட் கமுதே யடைக்கலம் புகுந்தே
ஞுதரித் தருடரல் கடனே. (ங)

தந்தைதாய் சுற்ற மற்றுள வனைத்துந்
தானென விளங்குந் தற்பரமே
செந்தழற் பிழம்பே செக்சர்வா னிறத்தோய்
செகமெனு மிந்திர சாலம்
வந்தெனை மருட்டி வல்லிருள் புகுத்து
வருத்திடக் கழிவதற் காற்று
தந்தமி லின்பே யடைக்கலம் புகுந்தே
ஞுதரித் தருடரல் கடனே. (ச)

முத்தனே யுலக மூன்றினு நிறைந்து
மொழிமனங் காயமு முணராக்
கத்தனே கண்கண் மூன்றுடைக் கடலே

கங்கையு மங்கையுங் களிக்கு
நித்தனே யுள்ளங் கணமெனு மடங்கா
நெறியினி லலேவதற் காற்று
தத்தனே யஞ்சி யடைக்கலம் புகுந்தே
னுதரித் தருடால் கடனே. (ரு)

விண்ணவர்க் கிறையே வேதத்தின் முடிவே
விளங்குறுஞ் சகத்தினைத் தன்னுட்
பண்ணியங் கழிக்கும் பரம்பர மூர்த்தி
பந்தம்வந் தென்றனைப் பற்ற
வெண்ணமும் பலவா யிச்சையும் வளர்ந்தே
யிழுத்தலைத் திடுவதற் காற்று
தண்ணலே கழற்காற் கடைக்கலம் புகுந்தே
னுதரித் தருடால் கடனே. (சு)

நஞ்சணிந் தவனே நாகபூ டணனே
ஞானிக ளிதயதா மரைமேல்
விஞ்சிய வுணர்வே விதிசிரங் கொய்தோய்
வியாபக மானசித் விண்ணே
பஞ்சபூ தத்தாற் பண்ணிய வுலகிற்
படுந்துயர் சகித்திட வாற்று
தஞ்சினே னரனே யடைக்கலம் புகுந்தே
னுதரித் தருடால் கடனே. (எ)

ஓநிடா துணைரு மூத்தமர்க் குறவே
வுயிர்தொறு மிடைவிடா திருந்தும்
வாதியா திற்கு மாறுசெய் மருளே
மயலெலாங் கெடவொளிர் விளக்கே
தீதிறு லடையுஞ் செறியிருள் விழுங்கச்
சிக்கினன் படுந்துயர்க் காற்று
தாதியே சுழன்றே னடைக்கலம் புகுந்தே
னுதரித் தருடால் கடனே. (அ)

முன்னநான் மறைகண் முடிவினைத் தெரித்து
மூர்க்கனே னறிவிலா மையினாற்
பின்னம தடைந்தே னதுமுதற் பெரும
பெண்மக வாதிய வினைவா
னின்னடி மறந்து மின்னலே புசித்து
நின்றழ றுயரினை யாற்றூ
தன்னையே யஞ்சி யடைக்கலம் புகுந்தே
னுதரித் தருடரல் கடனே. (கூ)

ஒப்பிலா மணியே யொண்ணிதிக் குவையே
யும்பர்க டொழுதெழுந் தேவே
வைப்புமா நிதியே மாணிக்க மலையே
மலையரை யன்மக ளுணையே
யிப்பவந் தனிலே யீடணுத் திரய
மீயுவெந் துயரினுக் காற்றூ
தப்பனே நின்று ளடைக்கலம் புகுந்தே
னுதரித் தருடரல் கடனே. (ய)

ஆ திருவிருத்தம்,—கூஉ௱.
முற்றிற்று.

---

## நெஞ்சொடுபுலத்தல்.

அளவடியான்வந்த ஆசிரியவிருத்தம்.

சாதனை நான்கினைச் சாதித் தாலும்புன்
வேதனை மாறிமெய்ப் போத மின்னுமே
வாதனை தோய்ந்திடின் மானி லத்தினிற்
சாதலும் பிறத்தலுந் தனைவந் தெய்துமே. (க)

மலைமுடி விளக்கென மன்னுஞ் சோதியை
நிலையென வமர்வுறி னீடு வாழ்வையே
சிலைநுதன் மாதர்தோள் சேரு மின்பமே
கொலைமுத லனைத்தையுங் கூட்டி வைக்குமே. (உ)

இறப்பிறப் புற்றவ ரியாவ ராயினுஞ்
சிறப்பினைச் செறிந்தின்ன றீர்ந்து ளார்கொலோ
மறப்பையு நினைப்பையு மாற்றி னோர்களே
யறப்பெரும் பரஞ்சுட ரண்டி னோர்களே. (ங)

தினமுமண் ணுகர்சிறு சேயைப் போலவே
கனவிட யத்தினைக் களித்த யின்றனை
நனவினைக் கனவென நண்ணிச் செய்யசிற்
கனமதாய் நிற்றியேற் கலுழ்நன் மாறுமே. (ச)

பற்பல பன்னியுன் பழக்கம் விட்டிலை
யற்பர்தஞ் செய்கையை யறவு மாற்றினை
விற்பன முற்றிலை மெய்யை மெய்யெனக்
கற்பங்க டொறுமுனிக் கண்ட தென்னையே. (ரு)

தந்தையுந் தாயுமில் சம்பு வேமுழுத்
தந்தையுந் தாயுமாய்ச் சமைவுற் றுளுமே
சந்ததஞ் சிந்தையிற் சாக்கி யாகவே
யந்தமில் சாதன மமைக்கி னெஞ்சமே. (சா)

எல்படு புழுவெனத் துடித்தங் கேங்கிலை
வில்படு மணியென விளங்கி நிற்றிலை
கல்படும் வன்மையை நன்கு கற்றனை
அல்படு மொளியையென் றடைவை யாயினே. (எ)

நரனென வுதித்திடின் ஞான மெய்துக
மரமெனத் தோன்றிடின் வாக னாகுக
வுரமென முளைத்திடி னூமை யாகுக
சிரமென வமையிற்செஞ் சரணஞ் சேருக. (அ)

மெய்படு பொருளினை மேவு மெய்யரைத்
துய்யமெஞ் ஞானிகள் சொல்வர் மேலதாய்ப்
பொய்படு பொருளினைப் புல்லும் புல்லரைச்
சைசயெனத் தள்ளுவர் தகைமை யோர்வையே. (கூ)

மாநிலம் விரும்பிய மாந்தர்க் குற்றிடு
மேனில மில்லென விளம்பு நான்மறை
யூனில வாவினை முற்று மோட்டினர்
கூனில வணிந்தவ னடியைக் கூடுமே. (௰)

நெல்லொடு பதறுக ணிரவி நிற்பினும்
வில்லனை முறத்துறில் வேற தாகுமே
நல்லவ ரொடுபிறர் கலந்த ஞான்றுமே
வில்லொளிர் போதத்திற் பேத மேவுமே. (௰௧)

ஊண்விரும் பினையெனி னுற்ற நாடோறும்
வீண்செலு மறவியு மேவு முன்னையே
மாண்விரும் பினையெனின் மன்று ளாடியி
னுண்மல ரடியிணை நாடு நாளுமே. (௰௨)

வாணிபம் விரும்பிடின் வாழ்மெய் பொன்னொடு
மாணில்புல் லுயிரிவை வழங்கி யீடதாய்
நீணில நிறைபொரு ணோர்ந்தி லங்கினூற்
சேண்முத லனைத்தும்வந் திசையிற் கொள்ளுமே. (௰௩)

அரசினை விரும்பிடி னங்க தேசத்தைச்
சரசினிற் சயித்தரன் றுளென் மௌலியைச்
சிரசினிற் றரித்துயர் செய்ய கோலெனும்
விரைசெயும் ஞானத்தை விரித்து வாழ்வையே. (௰௪)

உழுதொழில் விரும்பிடி னுறுமெண் சாணிலம்
பழுதறச் சாதனக் கலப்பை பற்றிநே
ரொழுகுற வுழுதுணர் வித்தை வித்தியாங்
கொழுமையிற் றருஞ்சுகங் கூடி வாழ்வையே. (௰௫)

தொழும்வினை விரும்பிடிற் சொற்று ணைமுதற்
புழுவரை நிறைந்தொளி பொங்குஞ் சோதியை
வழுவற வுள்ளத்துண் மன்னி யன்பினு
லழுதுகை சிரமுற வாழ்வை யின்பிலே. (௰௬)

வாகனம் விரும்பிடின் வாசி மாவமர்ந்
தேகனுய்ச் சிவபுரத் தினிதி னேகினு
ளுகர்கள் பெறலரு மின்ப நாளுமே
மாகட லெனவுனே வளேய வாழ்வையே. (௰எ)

மெய்சொல விரும்பிடின் விழங்குஞ் சிற்பர
னொய்யறி வனைத்தையு நூறி நிற்பதை
யய்யற வுணர்ந்ததை யறையின் யாவர்க்குஞ்
செய்யனுய் மேம்படு தருமஞ் சேருமே. (௰அ)

பொறுமையை விரும்பிடிற் பொறிகண் மற்றுள
சிறுகா ணங்களிச் சகத்திற்சென் றுதுன்
புறுவது பொறுத்திடி னுயரு மெய்ப்பர
மெறிசுட ரெனவிலங் கியல்பு தோன்றுமே, (௰௯)

அடக்கமுள் ளவனென வமர வாசிக்கிற்
சடக்குள கருவிக டத்தஞ் செய்கையை
முடக்கிடின் முனிவர்கண் முன்னும் போதமா
யடக்கலும் விளங்கியின் பாவை நெஞ்சமே. (உ௰)

கற்றலை விரும்பிடிற் ககன மாதியா
யுற்றவைம் பூதமு முளபௌ தீகமுங்
குற்றம தாகுநிற் குணமெய் யாமெனப்
பற்றிடுங் கல்வியைப் பயில்வை நாளுமே. (உக)

பொய்சொல விரும்பிடிற் பொருள லாதவிம்
மெய்முதற் கரணமும் விரிந்த பூமியுஞ்
செய்யுயிர் முதலிய வனைத்துஞ் சிந்திக்கிற்
கைபடப் பொய்மையாய்க் காண்டல் சொல்வயே. (உஉ)

களவினை விரும்பிடிற் கடவு ளார்களு
மளவரும் பொருளினை யாவ ரோர்வுறு
வுளமதிற் றிருடிடி னுதித்தல் சாதலுஞ்
சளமென வகன்றுசழ் பத்துட் டாழ்வையே. (உங)

சோம்பரை விரும்பிடிற் றுன்னும் பற்பல
வாம்பிர விருத்தியின் மன்னல் போக்குறீஇ
மேம்படு மடியினை மேவி னாலிவண்
டாம்பல வாயொளிர் சத்துந் தோன்றுமே. (௨௪)

கள்ளுண விரும்பிடிற் காய மாம்பனை
கொள்ளுநற் சாதனக் கூர்மை வாளெடுத்
துள்ளுற வரிந்ததி னாறுந் தேனினை
நள்ளின ரொடுமையின் றின்பெய் நாளுமே. (௨௫)

கொலைசெய விரும்பிடிற் கொடிய பாதக
மலையெனப் புரியும்வெம் மாற்ற மாகிய
நிலையறு கருவிநற் குணங்க ணீறமெய்ச்
சிலையினுக் குணவளித் தின்பின் வாழ்வையே. (௨௬)

கரும்புவிற் றரித்தவெங் காம னம்பினாற்
பெருந்துய ருற்றிடிற் பின்ன மற்றொளி
ரரும்புமி ழிளநகை வித்தை யாரணங்
கிரும்புள கிக்கவின் பெய்திப் புல்வையே. (௨௭)

குருகத்தி விளைத்திடக் குணிப்பை யாயினெக்
கருமமு மகற்றிச்சிற் ககன மாக்கிய
வுருவமுந் தானுமொன் றன்றி வேறிலாத்
தருமத்து விதத்தினின் மறத்தல் சார்வையே. (௨௮)

கண்ணினுண் மணியெனக் கவினுஞ் சோதியை
யுண்ணினைந் தைந்தெழுத் துருச்செ பித்திடிற்
பண்ணிய வினைகளைப் பாறி முத்தியாம்
பெண்ணினை மணம்புரி விக்கும் பெட்பினே. (௨௯)

பன்மல ரெடுத்தரன் பாதம் பூசிக்கிற்
கன்மமு மகன்றுளங் கரைவ தன்றிமேற்
சென்மமுந் தீர்ந்துயர் தேவர் பூசிக்கத்
தன்மனை யெனவொளிர் கையிலை சார்வையே. (௩௰)

பாலொடு நெய்தயிர் பழங்கள் வெஞ்சனஞ்
சேல்விழி மாதுமை பங்கன் சேவடி
மாலொடு விளக்கினுண் மாசு நீங்கினன்
மேலவ ரடைபதி மேவ லுண்மையே. (௩௧)

செய்பவர் தீவினை யனைத்து நீற்றிநற்
றுய்யவ ராக்கியின் பினிற்று லைத்திடு
நொய்யவெண் பொடியினுன்மேனி நோக்குறிற்
பையர வணிபவன் பக்கல் சேர்க்குமே. (௩௨)

சிவன்றரு கண்மணி யணியிற் றீவினைப்
பவமகன் றகம்பரு மணியின் பான்மையாய்த்
தவம்விரும் புணர்வினைத் தருத லன்றியு
மவமையி லின்பினி லுய்க்கு முண்மையே. (௩௩)

போக்கொடு வரவினைப் புல்லும் பொய்யுட
னீர்க்குமி ழௌபது நிசமன் றேவதைக்
காக்குயி ரகன்றிடிற் கழுகு நாய்நரி
காக்கைகட் கிரையதாய்க் கழியு நெஞ்சமே. (௩௪)

அலைவது நினக்கினி தடங்க லெற்கினி
திலையெனி னிருசும்மா விருக்கி னென்னுறும்
பலமெனிற் றுவிதம்போய்ப் பரமு மாகியின்
னிலமிசை வரவிற னிற்கு நெஞ்சமே. (௩௫)

பஞ்சினை நூல்செயும் பான்மை போலெழுத்
தஞ்சினை யோதிட வாகும் ஞானமே
பிஞ்சுகாய் கனியிலை பெட்பி னுண்டுகெண்
டுஞ்சல்நீத் தருந்தவந் தொடங்கல் வேண்டுமோ. (௩௬)

சாந்திரா யணவிர தங்கி ருச்சிரம்
வாய்ந்துள பக்குவர் மன்னும் ஞானமே
யாய்ந்தவர் கேள்வியி லடைவ தாயினுற்
சாந்துயர் நீக்கரி தன்று சாலுமே. (௩௭)

பூதலம் விண்டலம் பொருந்து மெண்டிசை
பாதல மெவற்றினும் பரவும் பண்ணவன்
ருதலர் பாதத்திற் றயங்கு முள்ளமென்
போதலர் மலர்கொடு பூசை செய்வையே. (௩௮)

செய்வன செய்கிலை தீமை கொண்டனை
நைவதி னொந்திலை ஞான மெய்திலை
யுய்வகை கண்டிலை யூமை யாகிலை
யையுமுக னருளெவ ணடைவை நெஞ்சமே. (௩௯)

அன்றென வாமென வொளிரு மண்ணலை
யொன்றினு மொன்றிடா துணரின் மின்னுமே
நன்றெனல் தீதென லிதனை நாடிடி
னென்றரன் றுண்மல ரிணையை யெய்துவாய். (௪௰)

இல்லது வேண்டினு மிசைவு றுவுனக்
குள்ளது வெறுப்பினு முன்னை நீங்குமோ
நல்லவர் தொழும்பர நம்முள் ளுற்றதாற்
றெள்ளிதி னுணர்ந்ததைச் சேர்வை நெஞ்சமே. (௪௧)

எங்கிருந் தும்மிறை யுட்கண் ணிற்றவ
ரெங்குளன் காட்டுவை யென்றி சைப்பராற்
செங்கதி ரெங்குளன் றெரிகிற் பீரென
மங்குகண் ணுள்ளவன் வகுத்தல் போலுமே. (௪௨)

கண்ணுக்குங் கண்ணெனக் காந்தி யாயுளான்
புண்ணுக்குச் சுகந்தரும் மிழ்தம் போன்றுளான்
மண்ணுக்கு வறுமைதீர் மாரி யாயுளா
னுண்ணெக்க தாகவங் கொளிர்வ னுள்ளமே. (௪௩)

மலையெனத் துயர்பல வந்து சேரினு
மலையெனப் பலபிறப் படைந்து மாயினுங்
கொலைபடு நரகிடை குடிமை செய்யினு
மலைமக ளுணவனை மறக்க னெஞ்சமே. (௪௪)

பந்தமும் வீடுமாய்ப் பரந்து நின்றதைச்
சிந்தையி லுணர்வுறி னிரண்டுஞ் செம்மையே
முந்துசொல் விருத்தியின் முளைத்த தாதலா
லந்தமுற் றொடுங்கலி லவைவி ளங்குமே. (௪௫)

மறுவதி லாவொளி யேம னத்தடை
கறுவங்க ணின்னொளி காணி னிற்குமோ
விறவலி னிற்றலாற் றேன்றிற் றில்லையோ
குறையினேற் கதனுண்மை கூடு தில்லையே. (௪௬)

இரவிது பகலிது வெனவு ணர்கிலாக்
கரவினை யுடையினேன் கதியிற் புக்கிட
வரவினை யணிந்தசெம் மேனி யண்ணலே
பரவினன் பதமலர் பயத்தல் வேண்டுமே. (௪௭)

மாலுநின் மகிமையை வழுத்தற் கின்றித்தீம்
பாலுடைக் கடலுளே பதுங்கி னானெனின்
மேலுவ ரெவருளார் வெய்ய னேற்குறு
மாலறுத் துயருணர் வழங்க வண்ணலே. (௪௮)

ஊத்தைமெய் யினைச்சுமந் துழன்று நானெனல்
பார்த்திடிற் சிரிப்பரே பரம னன்பர்க
ணீத்தவர் தவத்தரு ணிமல நின்னடி
சேர்த்திடிற் சிறுவனுஞ் சீருற் றுய்வனால். (௪௯)

முப்புரம் பொடித்தநின் முறுவ லுயினேன்
குப்புறு மஞரினைக் கொளுத்தப் போதுமே
துப்பிதழ் மடந்தையோர் பாங்கர் தோற்றிய
வப்பனே யுனக்கொரு நலிவு மன்மையே. (௫௰)

விண்ணுளா ரெவர்களும் விரும்பற் பாலதாய்
மண்ணுளா ரெவர்களு மதிக்கற் பாலதாய்க்
கண்ணுளார் மணியெனக் கதிருஞ் சேவடி
புண்ணினேன் றலைமிசை புல்ல வேண்டுமே. (௫௧)

மன்னவர் வாழ்வையு மதித்தி லேனெளிர்
பொன்னகர்க் கிறையவன் போக முன்னிலே
னன்னமுங் கேழலு மறியொ ணுக்கழ
லுன்னின னளித்தெனை யுய்ய வைப்பையே. (௫௨)

பந்தமென் பெருங்கடற் பாழைத் தீய்ப்பதற்
கெந்தைநின் விழிக்கரி தில்லை யாதலாற்
சிந்தையின் பின்செலுஞ் சிறுவ னுய்வதற்
கந்தமில் ஞானமீந் தருளிற் காப்பையே. (௫௩)

மய்யினு னினைவொடு மறவி யெய்தலா
லயலதாய்ப் பிறப்பிறப் படைந்தே னெந்தையே
கயலனை கண்ணிபங் காமுக் காயத்தின்
செயலறுத் தருளினிற் சேர்த்தல் பாரமே. (௫௪)

செனனங்க டோறுமியான் செத்துந் தீமன
மினமொடுஞ் சாகில வெந்தை யென்செய்வேன்
பனகபூ ஷணவது படுநெ றிதரல்
கனதனற் றேுளநின் கடன தாகுமே. (௫௫)

ஆரண முறைமுறை யறைந்து நிற்பினு
நாரண னயன்றி வரிய ஞானத்தைக்
காரண குருசொக்கன் காட்டல் போலவே
பூரண வநுபவம் புல்லு மோபுகல். (௫௬)

தாமரை யிலையிற்றண் ணீர்தயங் கல்போற்
றீமன மொன்றினுங் கலத்த றீர்ந்திடிற்
ஏமுற விலங்குமஃ தெளிய னேற்கருள்
சோமனை யணிந்தவென் றூய மூர்த்தியே. (௫௭)

காமவெங் கோபமென் கன லழிந்திட
வாமபா கத்தொரு மங்கை வைத்தவா
சேமநற் கருணைவெள் ளத்திற் சிஃறுளி
யேமமோ டளித்திடி னிடறு நீங்குமே. (௫௮)

ஒன்பது வாயில்க ளுடைய யாக்கையி
லின்பமா மறிவிருந் தரச செய்திறற்
றுன்பங்கள் சற்றுமி லாது சுண்டிடு
மென்பணிற் றலைவெடுத் தியம்ப வேண்டுமோ. (௫௯)

உலகமெ லாமுதித் தொடுங்க லெவ்விட
மிலகுஞ் சராசர மிருப்ப தெவ்விடம்
விலகற வில்லுமிழ் விமல வண்ணலே
கலகமார் மனத்தினேற் கருளல் வேண்டுமே. (௬௰)

தவமொடு செபமுதற் சாற்று நோன்புகள்
பவமுறு மனத்தினிற் பற்றி டாததா
லவமிகுந் தறிவிலி யாகி யெய்த்தனன்
சிவபரஞ் சுடரருள் செய்தல் வேண்டுமே. (௬௧)

காமிய கன்மங்கள் கருத்தோ டாற்றிலே
னேமங்க ளுருப்பண மொன்று நோற்றிலன்
சாமங்க டோறுநின் சரண தாமரை
நேமமாய் நினைந்தில னிமல காப்பையே. (௬௨)

தந்தைதாய் மகவக மென்னுந் தன்மையிற்
சிந்தைசெ லாவகை செய்து காப்பதற்
கந்தமு மாதியு மற்ற வண்ணலே
வந்துசொக் கலிங்கனுய் வாழ்வு தந்ததே. (௬௩)

காண்பதெ லாமுனை யன்றிக் காண்புறு
மாண்பினை யுடையவர் மனித ராவரோ
பூண்பதுன் னடியலாற் பொன்னைப் பூண்பவர்
சேண்புவி யாளினுஞ் செல்வ ராவரோ. (௬௪)

பொன்னினைத் தருமமாய் மாறிற் பொன்றுங்காற்
றன்னொடு தொடர்ந்தரன் றுளை நல்குமே
யன்னதைப் புதைக்கின்வண் டகற்றித் தேன்கொள
[illegible]வே பிறரதை யிட்ட லோர்வையே. (௬௫

மனைவிமுன் றில்வரை மக்கண் மற்றையார்
தனையனல் கொளுத்தும சானத் தின்வரை
கனைகுர லழுகையிற் கடந்தில் செல்லுவார்
பினைவினை துணையெனப் பின்சென் றெய்துமே. (௬௬)

வாழ்வினைச் சதமென மன்னு வாயெனிற்
றாழ்வினை யடைந்தரு நரகஞ் சார்வையே
யூழ்வினை தொலைத்திடு மொருவன் சீரடி
மாழ்கினை யெனிற்கதி வந்து வாய்க்குமே. (௬௭)

இப்பவத் திற்புக ழெய்தி ஞலது
பிற்பவந் தொடர்ந்தவண் பெருமை நல்குமோ
வொப்பறு மானிடன் கழலை யுன்னினு
லெப்பவ முந்துடைத் தின்ப மீயுமே. (௬௮)

அட்டில்வா யமுதடு காலை யன்னது
கொட்டுண் டுடைந்திடுங் கொள்கை போலவே
மட்டில்செல் வங்களும் வளனு மைந்தருந்
திட்டமா யழியும காலத் தெண்ணுதி (௬௯)

மான்வலைப் படிற்றுடி துடிக்கு மாறுபோ
னீவலைப் படினுமன் னெறியி னின்றிலை
தேன்வழி கடுக்கையங் கண்ணிச் செம்மலைத்
தானவ னெனுமுணர் சார்ந்தி லாயென்னே. (௭௰)

ஈந்தவன் பொருளவ னிடத்தி லேற்பித்தே
வாய்ந்தமுக் கரணமற் றொன்றின் மன்னிடா
தாய்ந்தவைந் தெழுத்தினை யகத்துண் முன்னினுற்
சாய்ந்ததுன் பங்களுந் தவிரு மோர்தியே. (௭௧)

நானென லெனுவரை நாடி நிற்குமோ
வூன்முத லெனதென லுன்னு மம்மட்டே
வானென நிறைபர மருவி நானறிற்
றேனென வொளிர்சுகஞ் சேர்த லிண்ணமே. (௭௨)

எவ்வணந் தோற்றங்க ளிலங்கு மவ்வண
மொவ்வுறும் பரமனே யொளிர்வ காண்பையேற்
கவ்வையாம் பவங்களுங் கழன்று பேரின்பப்
பௌவமுந் துளைகுவை பற்றென் வாய்மையே. (எ௩)

அழுத்தமா யரன்பதத் தன்பு செய்வையேற்
பழுத்தநல் லுணர்வுறும் பாச நாசமாய்ச்
சுழுத்தியு முணர்வொளிர் துய்ய நிட்டையாய்
முழுத்தவும் பவித்திடு மூட நெஞ்சமே. (எச)

தலைமிசை மலையினைத் தாங்கல் போலவே
யலைவுறுங் குடும்பத்தைத் தாங்கி யாவதென்
சிலைநுத லுமையவட் சேர்த்த நம்பன்றாட்
புலைமன மேசிரம் பொறுப்பை நாளுமே. (எரு)

இமைத்தலும் விழித்தலு மிறந்து ணங்கலை
யமைத்தலை யாற்றினுங் கவரும் புள்ளதே
சுமைக்குலப் பொருள்களைத் துன்னிக் காப்பினு
நமைப்பிறர் வஞ்சித்துக் கொள்வர் நாளுமே. (எசு)

கிறுமியை யளித்துயர் கெண்டை சேர்ப்பபோற்
சிறுபொரு ளளித்துயர் செல்வஞ் சேர்த்திடி
னறுகணி நம்பனு மருள ளிப்பனுன்
மறுவறும் பிறப்பிறப் புன்னை மன்னுமோ. (எஎ)

மட்டில்பொன் மக்களு மடிதல் கண்டுமே
கொட்டுமிப் பொருளையும் பொருளென் கொள்பவோ
சிட்டர்க டொழுமரன் சிவந்த பாதமே
யிட்டமாம் பொருளெனக் கொள்வை யென்றுமே. (எஅ)

தன்னவர் மதிக்கினுந் தகைமை சேரினு
மன்னவர் மதிக்கினு மறுமை யெய்துமோ
முன்னவன் கழலடி மொழிமெய் யொன்றிறெ
னன்னலம் வாய்த்திடு நாளு நெஞ்சமே. (எகூ)

வலியரைக் காணிற் றன்வா யடக்கியு
மெலியரைக் காணினன் னவர்மீ தூருமிக்
கலிதொழில் சயித்தரன் கழலைச் சேர்கிலென்
னலிவுமற் றின்பத்தி ஞளும் வாழ்வையே. (அ௰)

இம்மையிற் றவமற மிரண்டு மாற்றினுற்
றம்மையின் புறசெய்தற கைமை யோர்வையே
செம்மையி னுற்றிடா திருந்த மாந்தர்க்குத்
தம்மைத்தாம் பிணித்திடத் தலையும் வேண்டுமோ. (அக)

இரப்பவற் கீந்திடிற் குறையு மென்றெண்ணிக்
கரப்பவ ரறிவரோ கன்ம மீவதை
யுரப்புட னிறைப்பினு மூற்று றீரென
வரப்பறுந் தூய்மையாய் மன்ன றேர்வையே. (அஉ)

தீயவை செப்பினுற் பொறுத்தல் செய்கலாய்
வாயினுற் பிறர்தமை வைத முனன்றே
தீயின்றிச் சுட்டபுண் ணுகுந் தோர்ந்திதை
மாய்வுறச் செய்தர னடிவ ழுத்திடே. (அங)

ஆய்தலை யற்றவர் பலவ ரற்றினுங்
காய்தலைச் செய்கலார் கற்ற றிந்தவர்
மேய்பசுக் குத்தினுங் குத்த வெண்ணிலா
ராயவா றடங்கியின் படைவை நாளுமே. (அச)

ஆகுங்கா லாட்களு மாற்ற வேண்டில
போகுங்காற் பொருந்தின ரிருந்து மென்பயன்
யூகிக்கி லாகாதார்க் கொன்று மாவதில்
வேகித் தரன்கழல் வேண்டு நாளுமே. (அரு)

அடர்ந்ததன் சுற்றமு மருத்த நீக்கிமேற்
றொடர்ந்தவ ருட்டொடர் கோடன் மென்குகை
கடந்தரு குஞ்சர நுழைந்துங் கட்டிவால்
கிடந்தது நுழைவிலா தொக்குங் கேட்பையே. (அசு)

முட்டற வாழ்பவன் முன்றில் சென்றவ
னட்டிலை யுண்பவ ரனந்த மாகுமே
கெட்டிடி னட்டவ ரில்லை கேழ்னெஞ்சே
யிட்டா யிறைவனுக் கொன்று நேர்வையே. (அஎ)

பயன்கொளா தீதல்பார்த் திருந்து மோர்விலா
வியனிசை நோக்கியீ கின்ற வீகையே
நயமில்கூ விக்குச்செய் துண்டல் போலுநற்
பயன்றரு மரனடி பற்றி யீவையே. (அஅ)

யாவது பொருந்து மன்னது பொருந்துக
யாவதிங் ககலு மன்னதிங் ககலுக
வாவதும் போவதும் மியல்ப தாதலா
னேவது விடுத்துண்மை நோக்கி நிற்பையே. (அகூ)

நினைவினை நினைவினு னீக்கி நிற்பையேற்
றனையடை மமதையுந் தணந்து செல்லுமே
வினையது செல்லின்மேற் கரிய தாயசத்
தினையடைந் தின்பமா யிருப்பை நாளுமே. (கூ௦)

அந்தகன் மடவர லழக றிந்திலான்
பந்தமுற் றவன்பரஞ் சற்றும் பார்த்திடா
னிந்தநன் னீதியை யறிந்தென் னெஞ்சமே
யந்தமில் லறிவினி லழுந்தென் னாளுமே. (கூக)

பற்பல சொல்லி யென் பார்ப்ப தியாவுஞ்சித்
தப்புற முளதுஞ்சித் தவனி யாவுஞ்சித்
திப்புற முளதுஞ்சித் சேர்ந்த னீயுஞ்சித்
தப்பறச் சுருக்கமாய்ச் சார்வை நெஞ்சமே. (கூஉ)

வாதனை கெடவளர் பந்த மாண்டிடுங்
காதலிற் கதகரே ணுகந்தெ ளித்தல்போன்
மேதகு ஞானமு மெய்மை யாம்பர
மேதமற் றிலக்கிடு மென்ற னெஞ்சமே. கூ௩)

கற்பன கற்றனை காண்ப கண்டனை
யுற்பவ முற்றனை யூழி யூழியாய்
நற்பயன் பெற்றிலை நாண முற்றிலை
சிற்பர மோர்ந்திலை செய்வ தென்னையே. (கச)

பெரியரிற் பெறலரும் பொருள்கள் பெற்றிலை
யரியன வெனினுமங் கடைத லாய்ந்திலை
யுரியன விட்டிலை யுணர்வி னிற்றிலை
யெரியன னரகினி யென்று மாறுமே. (கரு)

நஞ்சினை மற்றொரு நஞ்சி னாலுமே
யஞ்சுறுந் தீமையைத் தீமை யாலுமே
மஞ்சுறு முலகினின் மாற்றல் போலவே
நெஞ்சினை நெஞ்சினா னிறுத்த நேர்வையே. (கசா)

படர்மதத் தாற்றனைப் பிறனென் பான்மைபோ
லடரறி வேறென வாம விச்சையாற்
றிடதர மாயதைத் தானென் றேயுணர்ந்
தொடர்தொடர் சழல்வதே யின்ப மாகுமே. (கஎ)

தனையது பற்பல சங்கற் பங்களே
தெளிவதோ வன்னதைத் தீர்த்த லாகுமே
தொளியது மனமுதற் றுன்னி நிற்றலே
வெளியதத் துவிதமாய் விளங்க லாளுமே. (கஅ)

வாவுளஞ் சங்கற்ப வாளின் வெட்டினால்
யாவுந்தா னெனவடர்ந் திலங்க லண்ணுமே
மேவுளம் விழுங்கிமே லாக நிற்றிலார்
சாவதும் பிறப்பதுஞ் சார்ந்து ளோர்களே. (ககூ)

தனைமுத லாயறி சகங்க ளவதா
மினைபொருள் கனவினி னேரு மத்தமா
மனையகாண் பற்றறி வனைத்து மாகினால்
வினைபவ முதலிய விட்டு நீங்குமே. (௰)

காசமோ டுற்பத்தி மூர்ச்சை நற்றுயி
லேசுறுங் கனாநன விவற்றை யாயினே
பேசுறு மொன்றிலொன் றில்லைப் பெட்புடன்
மாசறு மயக்கமெம் மட்டம் மட்டதே. (௱௧)

ஆ. திருவிருத்தம்.—௲௯௱௧.

முற்றிற்று



## சொரூபமகிமை.

சிந்தடியான் வந்த விருத்தம்.

உலகி லெங்கணு முனதுருத், திலக லாலவித் தையெவ
ணிலவு மாதவி வியான்சக, திலக மாநிகழ் செய்வையே. (௧)

ஒருத்த னாயுல கெங்கணும், பருத்தி டிற்பசு பாசமுங்
கருத்திற் கொஞ்சமுங் காணுமோ, வருத்தமு மெவண் மன்னுமே

பொன்னை யன்றிப்பூ ணின்மைபோ, லுன்னை யன்றியோ ருலகிலை
யென்னை யானறிந் தெங்கணு, மன்னி நிற்ப வருள்வையே. (௩)

ஏன மனமின மெய்திடா, வானம் போனிறை வள்ளலே
யூனக் கண்ணின ருணர்வுறார், ஞானக் கண்ணினர் நண்ணுவார்.

இன்ப மெங்கணு மிலங்குமேற், றுன்ப மிறையெனுந் தோன்று
என்பொ லாமணி யேயிதை, வன்ப னேற்கு வகுப்பையே. [மோ

அரிய வானவிம் மானிட, வுரியை நீங்குமுன் னுள்ளொளிர்
கரியைக் காட்டிடக் கருணைவான், புரியு நாளினைப் புகல்வையே.

மறைகள் கூறினு மறைவுறு, இறைவன்கூறிலி லங்குமே
நிறைய நின்றுமுன் னேர்படா, னறைய யாவரா னாகுமே. (௭)

எங்கி லங்கியு மெதிர்படான், கங்கு லுற்றவர் காணுறா
ரங்கர் தானென வறிகுவோர்க், கெங்க ணாயக னெட்டிடான்.

மூன்ற வத்தையின் முடிவிலே, சான்றதா நிகழ் தற்பரன்
பூன்ற மாவருள் புல்லினுற், ஞென்று ருதவொன் றுள்ளவோ. (௬)

சுத்தி வெள்ளிபோற் றேன்றல, கத்த னையும வனெதிர்
வைத்தி ருத்தலின் மன்னுமோ, கத்தி ருத்துவ கன்மமே. (௰)

கண்ட மாமகங் காரமே, யெண்டிசை நிறை வெய்தினல்
விண்ட சோதியே தானெனக், கண்டி ருக்கவுங் காட்டுமே. (௰௧)

கால மூன்றுங் கடந்தவன், மாலு மாலுற நின்றவன்
ஞால முற்றுநன் கீன்றவன், வேலி யாமெமை மேவுமே. (௰௨)

பற்று வார்களைப் பற்றுவான்,மற்றை யார்களை மருவலான்[மையே
குற்றமுங் குணமாய்க் கொள்வான், பெற்ற மேறியின் பெரு

பந்த பாச மறுத்தவ, ரந்த மாதிப நிந்துளா
ரிந்த மானிலத் தேயுரு, ரெந்தை யாயுமி லங்குமே. (௰௪)

இருவி னைகளு மெய்துரூர், கரும மேகண் ணுபினர்
திரிபோ டையமுந் தீர்ந்துளா, ரொருப ரத்தினை யுன்னினர்.(௰௫

ஈறி லாத விறைவனே, தேறு மைந்தொழில் செய்திட
வேறு வேறுபேர் பெற்றனன், வீற ணிந்த விபுலையில். (௰௬)

தன்னின் முற்றுந் தரித்துளான், மன்னு மவற்றுண் மறைந்துளா
னின்ன லின்பம தாயுளா, னென்னு ரையினுக் கெட்டுமோ. (௰௭)

வித்தை யெய்திய வீரரைச், செத்துச் செனிக்கவுஞ் செய்திடா
சித்தங் கோயிலாச் சேருவான், மத்தர் சற்றும ருவொணுன். [ன்

என்று மொன்றுபோ லிலங்குவான், பொன்ற லுதித்தலிற் பொரு
னன்றுதீ துக்கு நடுவினன், மன்று ளாடலை மன்னினன். [ந்திலா

தஞ்ச மொன்றுமி றமியனைக், கஞ்ச மாமலர்க் கழலணிந்
துஞ்ச லுதித்தறெு டாவகை, மிஞ்சு மறிவென விளக்கிபாள்.

ஆ திருவிருத்தம்,—௲௯௱௨௧.

முற்றிற்று.

## மதிகூறல்.

### குறளடியான் வந்த விருத்தம்.

சந்த தம்பரஞ்
சிந்தை செய்யினே
பந்த மியாவுமே
சிந்து மோர்வையே. (க)

தேகபந் தம்விட்
டேக மாயொளிர்
யோக மாற்றிடிற்
சோக மேகுமே. (உ)

நித்த நின்மல
சித்த தாகவே
பத்தி செய்திடின்
முத்தி வாய்க்குமே. (ங)

வேத நாதனின்
பாத பங்கயங்
காத லானுனத்
தீத கலுமே. (ச)

அருத்த மண்மனே
பொருத்த மின்மையிற்
கருத்தன் சேவடி
யிருத்து நெஞ்சமே. (ரு)

சின்ம யத்தினைத்
தன்ம யம்மென
நன்ம னத்துறிற்
புன்மை தீருமே (சு)

மூன்ற வத்தையிற்
சான்ற தாநிகழ்
பூன்ற காட்சியை
யூன்று நெஞ்சமே. (எ)

நஞ்ச ணிந்தவன்
கஞ்ச மாமலர்
நெஞ்சி ருத்தவே
யஞ்சன் மாறுமே. (அ)

சுழறல் விட்டினி
யழல்கைத் தாங்கினான்
கழற ரிக்கினே
கழலுங் கன்மமே. (கூ)

கண்ட மியாவும
கண்ட மாமெனக்
கண்டி ருக்கினாழ்
கண்ட மாகுமே. (௰)

ஆதி யந்தமில்
சோதி பாதமே
யோதி நிற்றலே
பூதி யாகுமே. (௰க)

பாச நாசனை
நேசம் வைத்திடிற்
காச நீங்கிமேற்
றேச தாவையே. (௰உ)

மன்னர் வாழ்வது
மின்ன லாமென
வுன்னிச் சின்மய
மன்னு நெஞ்சமே. (ய௩)

ஒருத்தனு மெங்கும்
பருத்த நாதனைக்
கருத்துட் காண்பையேல்
வருத்த மாறுமே. (ய௪)

ஆய மெய்யெனின்
மாய மாய்விடு
நேய மோடரன்
றாய தாளுனே. (ய௫)

முனிவர் கூட்டமே
புனித மாமெனக்
கனிவு செய்திடிற்
றனிமை யாவையே. (ய௬)

அலைவ றுத்துமேற்
றலைமை யாம்பொரு
ணிலைமை யாயுறிற்
புலைமை மாறுமே. (ய௭)

மலமின் மாதவர்
குலம டைந்தினு
னலமோ டின்பமும்
புலமு மன்னுமே. (ய௮)

தீமை யாவுநீத்
தூய்மை யாயுறப்
பாமை போலடங்
கியூமை யாவையே. (ய௯)

தாக்க றுத்தொளிர்
மோக்க மாம்பர
நோக்கி லன்னதே
சேக்கை யாகுமே. (உ0)

எக்க ணத்தினுஞ்
சொக்கன் றாளினை
நேக்கு நெக்குகக்
கைக்குண் முத்தியே. (உக)

பொன்னைப் பூமியை
யுன்னல் விட்டினி
தன்னை போர்வுறின்
மன்னு முத்தியே. (உஉ)

புண்ணு டம்பினி
னண்ணு மாவலை
யுண்ண ணீக்கியே
யண்ண றாள்வையே. (உ௩)

கொண்ட மக்களைச்
சண்டன் பற்றைவிற்
கண்டென் செய்தனை
யண்ட னெஞ்சமே. (உ௪)

பெண்மை பாதியன்
வண்மை முன்னிடிற்
றண்மை யாயுளத்
துண்மை சேர்வையே. (உ௫)

மத்த நீக்கியுட்
சுத்த மாக்கியே
கத்தன் றாளினை
நித்த நேர்வையே. (உ௬)

அத்தி தோலவா
வுத்தி யாய்விடுத்
பத்தி செய்வையே. (உஎ)

கயலின் கண்ணினார்
மயல்வி டுத்திறை
செயலை யுன்னிநற்
பயமுற நீங்குமே. (உகூ)

இந்து சேகரன்
கொந்த லர்க்கழல்
புந்தி செய்யினேற்
பந்தந் தீருமே. (உஅ)

ஆத்தன் சொற்படி
நீத்து யாவையுங்
கூத்தன் றாளினை
யேத்து நெஞ்சமே. (௩௰)

ஆ. திருவிருத்தம்,...௩௩௱௫௧,

முற்றிற்று.

## இம்பில்.

கலித்தாழிசை.

அந்தமு மாதியு மில்லா வருஞ்சோதி
யெந்தையாய் வந்ததென் றிம்பிலடி
யிறப்பிறப் பில்லையென் றிம்பிலடி. (க)

ஆதிப் பரம்பொரு ளாளாகி வந்திங்கு
ஞேதினன் கேட்கவென் றிம்பிலடி
யுள்ளுணர் வானதென் றிம்பிலடி. (உ)

காலாதீ தப்பொருள் காரண ஞ [illegible]யனை
மாலை யறுத்தானென் றிம்பிலடி
மனவாக் கிறந்ததென் றிம்பிலடி. (௩)

சாதனந் தந்து தடுத்தாள வந்தவன்
கோதினைத் தீர்த்தானென் றிம்பிலடி
குணங்குற்ற மற்றதென் றிம்பிலடி. (௪)

போதமாங் கூடத்தன் பூரண மாகிப்பல்
பேத மறுத்தானென் றிம்பிலடி
பேரின்ப மானதென் றிம்பிலடி. (௫)

சாக்கிரஞ் சொப்பனஞ் சாருஞ் சுழுத்தியை
யாக்கி யழித்தானென் றிம்பிலடி
யதுவிது வற்றதென் றிம்பிலடி. (சு)

போக்கிய போகங்கள் சேராமற் பூரண
மாக்கினன் சொக்கனென் றிம்பிலடி
யறிவுரு வானதென் றிம்பிலடி. (எ)

வாக்கிய நான்கின் வருவாய் நிறுத்திநீ
தேக்கென்றான் சித்தையென் றிம்பிலடி
தெளிவுணர் வானதென் றிம்பிலடி. (அ)

காவியந் தேர்ந்துங் கருத்தொன்று மாந்தர்க
ளோவிய மாகாரென் றிம்பிலடி
யுண்மாசு போகாரென் றிம்பிலடி. (கூ)

சுருதியோ டுத்திய நுபவஞ் சூழிற்
கருத வரியரென் றில்பிலடி
காட்சிக்கு மெட்டாரென் றிம்பிலடி. (ω)

போக்கு வரவற்ற பூரணப் பேர்தர்க்குச்
சாக்கி மறையாதென் றிம்பிலடி
தானேதா னானதென் றிம்பிலடி. (கக)

காரிய காரண மாயொளிர் சாக்கியைப்
பேருரு வில்லானென் றிம்பிலடி
பேசும் பிரமமென் றிம்பிலடி. (கஉ)

பூரண மாயும் புரமக மாகியுங்
காரண மானேனென் றிம்பிலடி
கருத்து மிழந்ததென் றிம்பிலடி. (கங)

இருக்கெசுர் சாமம தர்வண நான்கு
முருக்குமு ளத்தையென் றிம்பிலடி
யுள்ளொளி காணுமென் றிம்பிலடி. (கச)

பிரமமாம் பூரணப் பேராழி மூழ்கிக்
கருமங்க டீர்ந்ததென் றிம்பிலடி
கருதொணு வானதென் றிம்பிலடி. (கரு)

காட்சியுங் காணுமற் கண்டு களிப்பவர்
மீட்சிய தானுரென் றிம்பிலடி
வீட்டைய டைந்தாரென் றிம்பிலடி. (கசு)

பாரெங்குங் காணுப் பரமனுப் பார்ப்பவர்
சீரெங்குங் கொண்டாரென் றிம்பிலடி
சித்தேதா மானுரென் றிம்பிலடி. (கஎ)

தேகாதி பந்தங்க டீர்ந்தவர் சிந்தையே
யோகாநு போகமென் றிம்பிலடி
யொன்ருயு கந்ததென் றிம்பிலடி. (கஅ)

ஞானவஞ் ஞானமின் னன்னிலை மன்னியே
யூனம தற்றதென் றிம்பிலடி
யொன்றுங்கண் டில்லதென் றிம்பிலடி. (கக)

தேறும் படிக்ககந் திந்திக்க வைத்தவ
னுறுமு ளத்தனென் றிப்பிலடி
யவனேதா னுனேனென் றிம்பிலடி. (உய)

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்,—தூஙஎயக.



## உந்தியார்.

### கலித்தாழிசை.

எண்ணமெல் லாமிறந் தெங்கு மொளிர்வதோர்
கண்ணேகண் ணுனேமென் றுந்தீபற
காரியந் தோன்றுவென் றுந்தீபற. (க)

அஞ்ஞான நீங்கி யறிவாய் விளங்கின்ற
மெஞ்ஞான மானோமென் றுந்தீபற
வினையுங்க ழன்றதென் றுந்தீபற. (உ)

தேகோகந் தீர்ந்து சிவமே யகமென்னும்
போகத்து ளாழ்ந்தோமென் றுந்தீபற
போய்வர லற்றோமென் றுந்தீபற (௩)

போத முணராத புல்லறி வாற்பல
பேத முணர்ந்தோமென் றுந்தீபற
பேதமும் பிரமமென் றுந்தீபற. (௪)

சொல்லும் பொருள்களுஞ் சொல்லாதவு ள்ளவு
மல்லவு மானோமென் றுந்தீபற
வானந்த மானோமென் றுந்தீபற. (௫)

பேதம பேதமும் பேதாபே தங்களுஞ்
சோதித் தறிந்தோமென் றுந்தீபற
சுத்தப்பி ரமமென் றுந்தீபற. (௬)

உற்றுற்று நோக்கினு மொன்றிலா தந்தத்தின்
முற்றும் பரமாமென் றுந்தீபற
முத்தியு மன்னதென் றுந்தீபற. (௭)

சத்துச்சித் தானந்த மாயொளிர் தற்பரஞ்
சித்தத்தே வந்ததென் றுந்தீபற
திரிபுடி யற்றதென் றுந்தீபற. (அ)

சாக்கிரஞ் சொப்பனஞ் சாருஞ் சுழுத்தியை
நீக்கியோ ளிர்ந்தோமென் றுந்தீபற
நின்மல மானோமென் றுந்தீபற. (௯)

வானாதி பூதத்தான் வந்த வுலகத்தைக்
கானலாக் கண்டேமென் றுந்தீபற
கண்டமு மற்றோமென் றுந்தீபற. (௰)

அங்குமிங் குமலைக் தோடி யறிந்தாலு
மெங்கும்ப ரமாமென் றுந்தீபற
விறையும்வே றில்லையென் றுந்தீபற. (௰க)

ஆறு சமய மறைந்திடு மண்ணலை
வேறறக கண்டோமென் றுந்தீபற
வித்தைய டைந்தோமென் றுந்தீபற. (௰உ)

காரண காரிய முற்றுந்தா னாயொளிர்
பூரண மானேமென் றுந்தீபற
பொய்யொன்றுங் காணேமென் றுந்தீபற. (௰௩)

சிவமன்றி யொன்றையுந் தேரு தறிவாகத்
தவஞ்செய்து தீர்ந்தோமென் றுந்தீபற
தத்வங்க டந்தோமென் றுந்தீபற. (௰௪)

மண்ணாசை பொன்னாசை மைந்த ராசைமுதற்
பெண்ணாசை யற்றேமென் றுந்தீபற
பின்ன மறுத்தோமென் றுந்தீபற. (கரு)

அருளால் வலிவந் தறிவளித்தாண் டாற்குப்
பொருளொன்றுங் காணேமென் றுந்தீபற
போதமாய் நிற்றலென் றுந்தீபற. (கசா)

பொறிபுல னந்தக் கரணங்கள் போம்வழி
சிறிதேனு மில்லையென் றுந்தீபற
செகம்பர மானதென் றுந்தீபற (கஎ)

சென்ன மரணமென் னூசலிற் சேர்வார்க்கு
மன்னத்துட் டோன்றுதென் றுந்தீபற
மாதேவ ரூபமென் றுந்தீபற. (கஅ)

எங்கு மறிவா யிருந்தே நிகழ்வார்க்குத்
தங்கிட முண்டோவென் றுந்தீபற
சத்தேய வர்காணென் றுந்தீபற. (கசு)

இக்கனன் வார்த்தை யெடுத்துப தேசிக்குஞ்
சொக்கன்றாள் சேர்ந்தோமென் றுந்தீபற
சுத்தமு மானோமென் றுந்தீபற. (உ௰)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்.—கூகூாகக.

## திருக்கழலடைதல்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

வெறிகொள் மயல்வந்து பொருந்தின
 வினையும் பலவொன்றி யருந்தின
செறியு மடிதுஞ்சல் செழித்தன
 திரிபை யழுமண்டி யழித்தன
குறியு மெனினின்று குலைந்தன
 குணமுஞ் சிறிதின்றி மலைந்தன
னறிவுக் கறிவென்ன விலங்கிறை
 யலருங் கழலண்டின னண்டினன். (க)

திருகுற் றமனத்தினை யுற்றுபல்
 செனனத் துளமூழ்ந்தி மிதந்தனன்
வருகுற் றம்வரம்பி லியற்றினன்
 வளர்மெய் முழுதுந்துகண் மன்னின
வுருகுற் றவுளத்த ருவர்த்தன
 ருனையன் றியிங்கொன்றையு முன்னில
னருகுற் றொளிரம்பர விம்பரி
 னலருங் கழலண்டின னண்டினன். (உ)

வசைசொல் லுயிர்பொன்னென வுன்னினன்
 மனைமங் கையரின்பென வெண்ணினன்
றசையென் புநரம்புகு டர்க்கொடு
 சமைமெய் யினைமெய்யென நம்பினன்
றிசைபற் பலசென்றுலை வொன்றிய
 சிறுபொன் விழைவிற்சில வெல்செலு

வசைவெய் தினன்விண்ணவர் நண்ணரு
மலருங் கழலண்டின னண்டினன். (௩)

மடிவின் றியவன்மன நன்குற
வளருங் கருணைக்கடல் பொங்கிடிற்
குடிபொன் றிடுமெங்குறு புன்குணங்
குலவு மருருங்குறை வெய்துறும்
படியின் மறைநன்குண ருற்றுளம்
பதிசின் மயமென்மய மென்பதை
யடியற் கருடன்மைய றிந்தறி
வலருங் கழலண்டின னண்டினன். (௪)

இனமிந் தியமெங்கணுஞ் சென்றன
விதயத் துளும்வல்விரு டென்றின
சினமென் னைவலிந்து செறிந்தன
செயுமுன் வினைபற்றி யலைத்தன
கனறண் ணெனகன்னிய ரின்னலங்
கதுவிக் கொடுசென்றது கொன்றிட
வனன்மண் முதலெண்ணுரு வங்கொளு
மமலக் கழலண்டின னண்டினன். (௫)

பிறப்பென் பிணிபின்ன லவிழ்ந்திடப்
பிழைத்தெங் ஙனமுய்குவன் வையகத்
திறப்பெவ் வணமென்றனை விட்டினி
திருமெய் யுணர்சிக்குவ தென்றுகொன்
மறப்பைத் தரும்வன்பவ பந்தமு
வளர்மும் மெயையென்ன தியானென
லறசிற் கனமெங்கு மொளிர்ந்திட
வலருங் கழலண்டின னண்டினன். (௬)

தனிநின் றவர்தன்மய மெய்திநித்
தரங்கக் கடலென்ன விளங்கினர்
கனிமென் மனமுற்றவ ரித்தரை
கனவென் றுகருத்தி னிறுத்தினர்

முனிவிச் சையடைந்திடு மென்னுள
மொழிவற் றபரத்தினை முன்னில
வனியப் பொருளின்றி யடங்கலு
மலருங் கழலண்டின னண்டினன். (எ)

இன்ப மினதென்று முணர்ந்தில
னெழில்சித் சடமென்ப தறிந்திலன்
றுன்பத் தினையென்று நுகர்ந்தனன்
சொருப மினதென்று மறிந்தில
னென்புத் திரனென்மனை யென்னதி
லெனப்புந் திசெய்தின்னு மயங்கின
னன்புள் ளுறவத்தவ ளித்திட
வலருங் கழலண்டின னண்டினன். (அ)

செயலின் றியிலங்குயர் சித்தினைத்
தெரியி னிருவினைக டெரித்திட
மயறுன் றியதென்பதி தென்பது
மறவத் துவிதத்தினை மன்னுற
முயலின் சிருங்கம்மென வின்னில
முற்று முணர்வுற்று நிகழ்ந்திட
மயலின் றிநிறைந்தொளி ரெம்மண
லலருங் கழலண்டின னண்டினன். (கூ)

வருத்தம் பலவெய்தின னன்றியு
மதனைங் கணைபட்டு மெலிந்தனன்
விருத்த மெனைவந்து பொருந்திடின்
மெய்யிந் தியங்குன்றி விளக்கறுங்
கருத்துந் தள்ர்வெய்தி மயங்குறுங்
கழறத் துயரொன்றல துன்றிய
வருத்தங் களுமன்றென நின்றெளி
ரலருங் கழலண்டின னண்டினன். (ம)

முற்றிற்று.

அ. திருவிருத்தம்,—நுசரூக.

## ஐயகோ.

*அடியிரண்டாய்த் தம்மிலொத்து வந்த குறள்வெண்செந்துறை.*

மூரணிற் றடுத்தாண்டா னையகோ
மூங்கையா ளாக்கின னையகோ
கரணந் தொலைத்தன னையகோ
கழலாக் கழற்றின னையகோ. (க)

அறிவுரு வாக்கின னையகோ
வதுவிது வாக்கில னையகோ
குறியேதுங் கூறில னையகோ
கூடத்த னாக்கின னையகோ. (உ)

ஊனைக் கெடுத்தன னையகோ
வுணர்வைக் கொடுத்தன னையகோ
வானிற் புகுத்தின னையகோ
வாசனை நீக்கின னையகோ. (௩)

பொருளைக் கவர்ந்தன னையகோ
போகந் தொலைத்தன னையகோ
மருளைத் தடுத்தன னையகோ
வாழ்வை யழித்தன னையகோ. (௪)

பித்தென விட்டன னையகோ
பேசா திருவென்ற னையகோ
வெத்தினும் விடுகில னையகோ
ஏகினும் போகில னையகோ. (௫)

தத்துவ நீத்தன னையகோ
தனிமைய னாக்கின னையகோ
சித்தங் கெடுத்தன னையகோ
சீவனை மாற்றின னையகோ. (௬)

ஆண்டியா யாக்கின னையகோ
வசைவற வைத்தன னையகோ
தாண்டி மிதித்தன னையகோ
தானே தானுக்கினு னையகோ. (எ)

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்.—கூசாஅ.

## நெஞ்சிற்கமைதிகூறல்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சித்தினை மேவ விங்ஙனஞ்
செப்பிய வேதமு றைப்படி
பத்தியை மாலுஞ் சிந்தையை
பற்றுக ணீக்கி வைத்திடின்
முத்தியின் வீடெளி தெய்துறு
முச்சக மீதுள வத்தமுஞ்
சுத்தியிற் காணும் வெள்ளியாய்ச்
சொப்பிர காச மின்னுமே. (க)

மின்னென வேவிளங் கின்னில
மித்தைய தாமென வுட்கொடு
சின்மயந் தாமென நிற்பவர்
செப்பிடும் வாய்மையை யொப்பிடின்
நன்னெறி சால மன்னிபுன்
னச்சனை பாச மெட்டுணை
துன்னலி லாது வற்றிமுன்
சொப்பிர காச மின்னுமே. (உ)

கக்கின சோறென வித்தையிற்
கண்ணெதிர் காணுமிம் மண்ணினிற்

புக்கிடு மாவலை யுற்றிடிற்
    பொக்கமில் ஞான மன்னியெப்
பக்கமு மாய்நிறை வுற்றதிற்
    பற்றிய தாக நைத்திடுந்
துக்கமு நீங்கியித் தொக்கினிற்
    சொப்பிர காச மின்னுமே. (௫)

கட்டினி லேயுழன் றித்தனை
    கற்பமு நீங்கிய பின்னரு
முட்டிறம் வாய்ந்திலை யென்னைநிற்
    குற்றது மோர்ந்திலை நன்னிலை
தொட்டிலை யாயினுஞ் சொக்கனன்
    சொற்றரு தீஞ்சுவை கைக்கொளிற்
சுட்டறு ஞானமு மெட்டியச்
    சொப்பிர காச மின்னுமே. (௬)

பற்றிய காமவ னற்படிற்
    பத்தியு மோய்ந்தவ நித்தமு
முற்றுமைக் காரினை யொத்திடு
    முள்ளமு மாயவ ரெய்ப்புறு
முற்றும வாவொழித் திச்சக
    முன்னெதிர் காணினும் வத்துவிற்
றெற்றிய தாமென முன்னிடிற்
    சொப்பிர காச மின்னுமே. (௭)

இச்சையி னோடை னிச்சையு
    ளெய்த்திலை வீழ்ந்து நிற்பினு
மச்சமு மற்றிலை வத்துவை
    யண்டிலை யார்வமொ டுங்கிலை
விச்சையை மேவி யெங்கணு
    மிச்சிர மாமுண ருற்றுபின்
றுச்சமெய் யாமென வுன்னிடிற்
    சொப்பிர காச மின்னுமே. (௮)

பத்திஞெ டேழென் றத்துவம்
　　பட்டிட நோற்றிலை நற்றவஞ்
சத்துவ வாசனை பற்றிலை
　　தற்பதந் தானென நிற்றிலை
செத்திடின் மேனிலை யுற்றுமெய்
　　சிற்கன மாக நிற்கினற்
சுத்தமு மேவி யெங்குமாஞ்
　　சொப்பிர காச மின்னுமே. (எ)

திப்பிய மாம்பொரு டெய்த்திலை
　　சிற்பர னுமென நிற்றிலை
யிப்புவி யாவையு மின்னென
　　வெண்ணிலை பாசம றுத்திலை
மைப்படு காரிருள் விட்டினி
　　மத்தமோ டாறணி யத்தனூர்
துப்பிதழ் வாய்மொழி பற்றிடிற்
　　சொப்பிர காச மின்னுமே. (அ)

மெய்யினி னீறினை யிட்டிலை
　　வெண்டலை யான்மணி தொட்டிலை
பையினி லேயுறல் விட்டிலை
　　பன்னிடு மாதவங் கிட்டிலை
சையென வாழ்வு வெறுத்திலை
　　சன்மய மாம்பத முன்னியே
தூய்யவர் வாய்மொழி மன்னிடிற்
　　சொப்பிர காச மின்னுமே. (கூ)

விஞ்சிய போதம டைந்திலை
　　மேநினி யாசையொ ழித்திலை
வஞ்சனை மோகம ழித்திலை
　　மன்னிய தீதுக ழித்திலை
பிஞ்சக னுமமு லைத்தினிப்
　　பெட்புடன் யோகநி லைத்திடிற்

றுஞ்சுத ரோன்றல ழித்தொளிர்
சொப்பிர காச மின்னுமே. (எ)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்,—௲௨௱க௮.

## அருளிறைப்புகழ்ச்சி.

நேரிசை யாசிரி யப்பா.

இருபா மிருசக மெனநனி யுணரக்
கருமெனப் பற்றுக் கருத்துறு மவித்தை
போக்கிட வொளிர்கடை நோக்குறு விழியு
மெய்யறி வுணர்த்த நொய்துரை வாயும்
பவந்தெற வபயமு வந்தருள் கரமு
மானந் தநறவ மருத்திவாழ் விக்கத்
தேனந் தரும்பிற் றிகழ்குறு நகையுங்
கண்டா ரிருள்கெட விண்டோய் கதிரவ
னுதயமே யப்பத் துதைவெழின் மேனியும்
மனவிட ரகற்ற வனசநே ரடியும்
மலர்சங் காதியால் வரன்முறை தொழும்பர்
பலர்சூழ்ந் தேத்திப் பணிந்திடுஞ் சொக்க
நின்பா லிருந்து மென்பால் வாளா
விருந்திட லும்மைய ரும்பெறற் பவத்தியான்
றவமிக் கியற்றிடாத் தவறே
யவையல தெந்தா யறைவவே றின்றே. (க)

இஃதிடையே தனிச்சொற் பெற்றுவந்த நேரிசை யாசிரியப்பா.

தேசிக சிறுவன் செப்புவ தொன்றுள
மாசறு குணமும் வரம்பறு ஞானமுந்
தானென விளங்கு மான்ம விளக்கமு
மோனமு முப்புடி தானறு தானமும்
பேருறு மகண்டா காரவி ருத்தியு

மதுவுந் தீர்ந்தா னந்தச் சிரசா
மதீத நிலையை யருளி லெதிர்மறுத்
தீவதே துளதெனி னியம்புவன் கேணீ
தாவிருங் கடல்சூழ் தரணியின் வழக்கம்
பற்பல விருப்பினுஞ் சிற்பர முணர்ந்தோர்
வீறிய திரண்டெனக் கூறின ரவைதா
நூல்வழக் கேனைய சால்பின ரொழுக்கமா
முன்னைய விரிக்கின முத்திவேட் டுள்ளோன்
மின்னிகர்த் தழியு மெய்யுயிர் பொருளென்
பதுகொண் டவற்றிற் கெதிரறி வூட்டிட
நூல்கனு வறலா னூல்வழக் கென்ப
பின்னைய தறிஞ ரந்நெறி பேணலாம்
அதனால்
அநித்த மெய்யுயி ரருத்த மோடவா
செநித்த தினமுத லுளதிரி வினைப்பய
னழுக்கா றச்சம் வழுத்தறி யாமைபொய்
மரணஞ் செனன மமதை புலனே
கரணஞ் சூனியங் கன்மன மாயை
யிவைமுத லாயுள நவையுறு பொருள்க
ளெவர்க்கு மீயா திட்டினன் வைத்துளே
னீகுவன் பெறுதி யெந்தாய்
சோகமின் றுன்பொரு டெய்ப்பகல் குவையே. (உ)

நிலைமண்டிலவாசிரியப்பா.

கரும்புள் ளொலிக்கு மரும்புபண் மலர்கொடு
விரும்பிக் கண்ணுதன் மேனியிற் சாத்தியு
நதிகடன் மூழ்கியும் பதிதொறுந் திரிந்துங்
கண்டிகை பூண்டுங் குண்டிகை தாங்கியு
நீறணிந் தைந்தெழுத் தேறச் செபித்துங்
காவி யுடைதரித் தோவிய நிகர்த்துக்
கானிடை வசித்தும்வந் தீனமின் றுண்டும்

பனிமழை வெயிலிற் படுதுயர் சகித்துங்
கனியிலை சருகுவேர் காய்கிழங் கருந்தியும்
பொறிபுல னடக்கியு முறுமன மொடுக்கியு
நாசிமேற் புருவ நடுவி லொளித்தும்
வாசியை நிறுத்தியு மாசனந் திருத்தியுந்
துயிலைத் துறந்தும் பயிறவம் புரிந்தே
பரநிலை சுமந்து பரமுணர்ந் தனர்யா
ஞேர்தவ முஞ்செயா தேருட லோம்பி
வருத்த மிகவுற் றருத்தந் தேடி
முப்போ துண்டு செப்பன முலையார்
மையலிற் பட்டு மெய்யறி விழந்தே
யடங்காச் சித்தம் மடங்காச் சீற்ற
மயக்க மமதைசோம் புயக்குறு மானங்
கனவு மறதி நனவுகண் டுயி
லிழுக்கம் லோபமாம் பழிப்புறு மியலுளேன்
இவ்வண நிகழுந் தெளவை யேனைச்
சொக்க னென்னுந் தொல்லா சிரியன்
நிர்க்குண சுகமா மதுநிறை யக்கொடு
தன்னுளங் கெட்டுல கின்னடை தோன்று
மானமு முடலபி மானமும் விட்டுக்
களித்து நகைத்துங் கண்ணீர் ததும்பித்
துளித்து மழுதுந் துதித்துங் குதித்தும்
பித்தன் புரைய முத்தன் றோன்றிச்
சித்தந் திருத்திச் சித்தை விளக்கி
முரணி ரண்டு முண்டகம் பழிச்சுஞ்
சரணடி தந்தோ ரதிசயந் தானே. (௩.)

இஃதிடையே தனிச்சொற் பெற்றுவந்த நிலைமண்டில வாசிரியப்பா.

காவாய் பெரும கழறுவ தொன்றுள
பூவுல கத்திழி வென்பன புகலிற்
கடல்சூ ழுலகிற் றொடர்கன் மத்தினுன்

மாதர் வயிற்றிடை வந்துசூன் முற்றிப்
பேதுற வெய்தப் பிறந்திட லிழிவாம்
பிறக்கினு மவயவப் பெற்றிநன் றின்றிக்
குறையினு மிகினு மதனினு மிழிவாங்
குற்ற நீங்கிக் குவலயத் துதித்துஞ்
சற்றுந் தணியாத் தாவுறு நோயாற்
கழிதா லதனினு மிழிவென வகுக்கும்
நோய்பிணி யின்றி நுண்ணிய வழகாய்க்
காயம தெய்திற் கல்விகள் சிறிதுங்
கல்லா மூடம் கற்றறி மூட
மொல்லுத லதனினு மிழிவென வுரைக்கும்
மூட நீங்கிட வோதிநூல் கற்று
மருந்தவும் பொருந்தவும் அரும்பொரு டேடி
யிரந்திட லூர்தொறு மதனினு மிழிவாம்
இரந்தவ னின்புறத் தருபவ னீகையைத்
தடுப்பத தனினுங் கடுத்த விழிவாம்
அம்மொழி மேற்கொடு தம்மா லியன்றன
கொடுத்திடா திடிசொலாற் கடத்துத விழிவதின்
மேலிழி வின்றென நூல்க ளுவன்றிடும்
ஆதலின்
இவற்றினை முற்றுந் தவத்தெளிந் திலங்குஞ்
சொக்க நின்னடித் துணைமல ரடையின்
றக்கண முயருணர் தந்தருள் வாயென
வீண்டடைந் தனன்யான் வேண்டுகை மறுக்கா
தருளுத னின்மே லாங்கட னன்றோ
திருவுள மகிழ்ந்துரை செய்யுமா ரணனே. (௪)

இணைக்குற ளாசிரி யப்பா.

செய்யபங் கயன்மா லுய்யுமா றுணரா
ரும்பரு மறியா ரிம்பருங் குறியார்
சௌன காதியா மௌனிகள் பேசார்

சுருதியு மறையா மிருதியு முரையா
பொற்பட வொளிருந் தற்பத வருத்த
மெவ்வண நிகழு மவ்வணந் திகழ
வடைந்தவர்க் கருளுமா னந்தசொக் கேசனே
தமியேன் மொழியை யமைவுறக் கேண்மோ
மொழிதழு தழுப்ப முழுவென் புருக
விழிகணீ ரிறைப்ப மெய்மயிர் சிலிர்க்கு
மன்பர் களிதய வம்புயத் தடத்துப்
பஞ்சினுங் குழைந்து செஞ்சுட ரெறித்தமர்
மெல்லிய மலர்த்தாள் கல்லினும் வலியவென்
மனமீ துறினுங் கனதுய ரென்றே
நினைதுளங் கொண்டையோ
அதாஅன்று
துற்குண வாசனை பற்றிட மனைசுத
ரெனுமீ மொய்ப்ப வினையுடன் முற்றும்
பொறிபு லவாசைச் சிறுபுழு வரிப்ப
மும்மலச் சேற்றில் விம்மி மிதப்பக்
காண்டொறுங் காண்டொறு மீண்டரு வருத்தோ
என்மீ திரங்கா தின்னமு திருத்தியோ
கன்மன முருகக் கண்கணீ ரிரைப்பச்
சொன்மன மணுகாச் சொரூப நிலையினை
மன்னி யொன்று மாசிறத் தடிந்து
முப்புடி யின்றி யெப்படி விளக்குது
மென்றை யுற்றே யிஃன மெண்ணினையொ
வின்றெனிற் றாயோய் துன்பாவ ரிதிபுகா
தின்ப வாரிதி யெய்த
நன்கருள் புரிக நாளுமெய்ந் நெறியே. (௫)

முற்றிற்று

அ. திருவிருத்தம்.—௲சாஉ௲



## வதுவைவிரும்பல்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

புனைநூல்கண் முற்று முறையேய றைந்த
பொருளீது மன்றி யிலதே
தனையாய்ந்த பேர்க டணிவாயு ரைத்த
சகசத்தி னிலையு மதுவே
நினைவன்றி யொன்று நிகழ்கின்றி லாத
நெறியானு முலகு கனவே
வினைமங்கி னுலு மதுதோன்றி டாது
வெளியாய்வி ளங்கு மொளியே. (க)

அறியாமை யாதி யுறவாகி யென்னை
யநியாய மாக வவமே
குறியேது மின்றி சிவநின்றும் வேறு
குடியேற வைத்த வதனு
னெறியேத விர்ந்து துயிலாதி யேநன்
னிலையென்று சிந்தை மருள
வெறியேது றத்தி யினிதாள வேண்டும்
வெளியாய்வி ளங்கு மொளியே. (உ)

மருளாம விச்சை யெனுமூத்த தார
மனையாடோ டோய்ந்து வடிவி
லிருளாடு மக்க ளறுநால்வர் தோன்றி
யெனதாளை மீறி யொழுகிக்
கருளாவ தின்ன தெருளாவ தின்ன
கணியாது தாயு மவரும்
வெருளீதன் மாற்ற மணம்வே றமைப்பை
வெளியாய்வி ளங்கு மொளியே. (ங)

கைமாயஞ் செய்த மருளான்ம யங்கிக்
கலைஞான மொன்று முணராப்
பொய்வாய்ந்த பூமி முதலாம னைத்தும்

பொருளென்று சிந்தை கொளுவி
வெய்தாகு மின்னல் சுக மென்று கண்டு
மிகவாவல் பொங்கி வறிதே
மெய்வாய்கண் மூக்கின் வழிசெல்ல லோர்வை
வெளியாய்வி ளங்கு மொளியே. (ச)

நெய்யாருங் கூந்த லுடையாளென் னெஞ்சி
னெடுமோக மெய்தும் வகையாய்ச்
சையோக மீந்து தனைநீங்கு றாது
சரசம்பு ரிந்த வதனா
லய்யோசற் றேனுஞ் சுகமாவி ராம
லவளிட்ட பணிசெய் தமர்ந்தேன்
மெய்யாக வேறு வதுகொள்ளி லுய்வன்
வெளியாய்வி ளங்கு மொளியே. (ரு)

நாலாறு மைந்த[redacted]சேய்தொ டர்ந்து
நகையாட லெள்ளல் வெகுளன்
மாலாதி யாறு மடிதுஞ்ச லாதி
மருள்புன்கு ணத்தில் வீழ்த்திச்
சேலார்கண் மாதர் வயமாயு ழன்று
திரிவேனை யாள வரிதோ
மேலார்க ளத்து விதமாக மன்னும்
வெளியாய்வி ளங்கு மொளியே. (சு)

மனமாதி நால்வர் மதியூகி யாகி
வளர்போத நிலையை மருவா
நினைவோட யர்த்தல் முதலான பற்ப
னெறியேசெ லுத்தி யவமே
தனையாய்வு றாத வகையாய்ம ருட்ட
சகமெய்மை யென்று முழன்றேன்
வினையொன்றி லாத வுயர்வோர்க ளொன்றும்
வெளியாய்வி ளங்கு மொளியே. (எ)

## வதுவைவிரும்பல்.

நெடுங்கால மாக வடுவிய வீர
நெஞ்சத்தி லாது தழுவிக்
கொடும்பாம்பி னஞ்சை யனைபல்ல போகக்
கொழுமுலை யூட்டி யகலாப்
படும்பாழ்சு ழுத்தி தனிலேது யிற்றிப்
பகலூடெ ழுப்ப விச்சை
விடுமொ றும்விச்சை மனையாக்கி யாள்வை
வெளியாய்வி ளங்கு மொளியே. (அ)

அலையாதி தோன்றி யழிவெய்தி னுலு
மகழ்வேலை யன்றி யிலைபோ
னிலையாத லோகஞ் சிவமன்றி வேறு
நிகழாமை மூடி வதியு
முலையேந்த விச்சை குடியோடு மாற்றி
முனிவோர்கள் புகழ்விச் சையை
விலையேறு மங்க ளமதாற்றி யாள்வை
வெளியாய்வி ளங்கு மொளியே. (கூ)

மனையாள்வ குத்த பணிசெய்தல் போல
வருகீழ்மை யொன்று மிலதே
தனையோர்வு ருத வெனைவான ரத்தின்
சமமாக வாட்டு மவளைப்
புனையேய ரோடுங் கொலையேபு ரிந்து
புகழ்விச்சை தோயு மணமாம்
வினையாற்றி யென்னை யினிதாள வேண்டும்
வெளியாய்வி ளங்கு மொளியே. (ய)

முற்றிற்று.

௲ திருவிருத்தம்.—௲௨௬௬.

——○◇○——

## அவித்தைபுலம்பல்.

### கலிவிருத்தம்.

ஏகனுமறி வென்னுமாண்மகற் கிசைந்துபற்பல காலமாய்ச்
சோகமின்றியங் கிருவரும்புணர்ந் துடலுயிரெனத் துன்னுணு
மோகமாமவர் வித்தைமாதினை முயங்கவன்னள்கை மாயத்தா
லேகெனப்புறம் பேவிடுத்தன ரிசைப்பனியாவரோ டாண்டையே.

பற்பலவுட லடையினுமவண் பற்றிச்சென்றின்ப மீந்தவர்
சொற்படிநடந் தேனினையீளத் தொட்டநாண்முத விட்டநீத்
தற்பமுமெனை நோக்கிலாரிங்ங னுற்றமாதர் சகிப்பரோ
கற்பினுரிது கழறலாவதோ கணத்துயிர்மாய்ப்ப னண்டையே.(உ)

என்னைப்பற்றின வளவிலேகமா யிருந்தவர்பல ராயினுர்
தன்னையேமறைப் பிக்குமாங்கரன் சனிக்கவாழ்ந்தன ரவனுளே
பின்னைவித்தையைக் கூடியென்னையும் பிறந்தமைந்தருந் துறந்து
கான், மன்னியூண்டுயி னீத்துமூகையாய் வதிகின்றாரவ ணண்
டையே. (௩)

எவற்றைக்காணினு மென்னதென்னதென் றிழுத்துச்செல்லவு
மழுத்தினேன், றவத்திலேபுக றடுத்தங்கிங்குள்ள சகத்தின்வாழ்வி
னிற் றுபித்தேன், பவத்தினுவினை யாளைப்பற்றின வேளையோவெ
னைப் பார்க்கிலா, ரவத்தமென்குன ரவளுரைப்படி யாண்டியாயின
ராண்டையே. (௪)

பேதையேனு மிவர்க்குச்செய்திடும் பிழைகள்கண்டிலன் பிள்ளைக
டாதையேயென வழைக்கினுஞ்சற்றுந் தயையிலாரெதிர் நோக்கு
றார், மாதிரண்டுடை யார்களிவ்வண மாற்றலிங்குமுன் கண்டி
லேன், ஞாதியாய்வந்து மூண்டனள்வித்தை ஞாயமோவவர்க்
காண்டையே. (௫)

பசிக்கிதென்றறு நான்குபுத்திரர் பலவிடயத்தை முன்னியே
புசிக்கினுமதை யொட்டிலார்வெளி புல்லுமென்றெருங் கோட்டு

வார், வசிக்குமில்லையு மிளையாடன்வய மாக்கியொன்றிலி யாயினர் நிசிக்குநேர்குழல் வித்தைதங்கையாய் நேர்ந்துங்காய்ந்தன ளாண்டையே. (௬)

மாயையாகிய வன்னைக்கேமண வாளனுண்டியின் வாய்மையா னேயமாய்வித்தை யேமணந்தவ னெறியினின்றமைக் குறியிலா தீயசேர்த்தினர் புறஞ்செலுத்தினர் சேர்த்தமங்கல னீயணிந் தாயமோடுநீ டூழிவாழ்கென வறைவசெப்புமி னுண்டையே. (௭)

மித்தையாமுற வெய்திநானென விளங்கிமேதினி முற்படப் புத்திரராறு நால்வரோடிவண் புக்கையின்வித்தை மாயத்தா னித்தமாமுற வால்விரும்பித்தன் னிலைமைகாணிபொன் பணிமுத லத்தங்கேட்டுத்தான் கெடினுமன்னனை மகன்றிட ரிதென் னுண்டையே. (௮)

அய்யோவன்னவர் செயலுணர்ந்திடா தவர்க்குமுன்னம் புகுந்த னன், றுய்யநீறணி யாண்டிவந்தொரு சூதின்வித்தையி னெழிலெ லாஞ், செய்யவாய்திற வாமலோதின னவளைச்சேர்ந்தனர் தின முமே, மையன்மீக்கொள ளேக்கினன்னனை மருவல்விட்டிடா ராண்டையே. (௯)

வித்தைகண்ணுமென் கண்ணுமேயவ ரொத்திருக்க வியற்றினேன் மெய்த்தவசியின் சொற்கொளீஇயவர் வேற்றுணர்வினை மேவியே சித்தையுஞ்சட மாகக்காட்டுமென் பக்கலாசையத் தீர்ந்துபின் பொய்த்தலற்றவவ் விளையவளோடே போயினர்காணு மாண்டை யே. (௰)

மங்குனேர்குழ லாளளித்திடு மருந்தினுலுணர் மயங்கியே கங்குறன்னையும் வெளியதென்குனர் கருத்துமில்லவ ராயினர் தங்கணவரை யிங்ஙனஞ்செய றக்கதோமாதர் புக்கினுற் றங்கையென்றிது வரைபொறுத்தனன் சற்றிரங்கில ராண்டையே.

சாந்திதாந்திக ளென்னுந்தாதியர் தன்னைச்சூழ்வுறத் தற்பரம் வாய்ந்தநிட்டையி லேபுகுந்தனர் வரவுபோக்கிலர் வாய்திறு

நேர்ந்திழையினை யானைப்பற்றியிவ் வண்ணமாயினு லென்செய்
வேன், தேர்ந்தமூலத்திப் பாய்வனல்லது சீவியேனுயி ராண்டை
யே. (௧௧)

உருவமின்றியி ருந்தவருல கம்படைத்தளித் தொழித்திடும்
பெருஞ்செயலளித் தும்மென்னில்பிர வேசித்தாலும்பிற் பொழு
திரார், புருடரென்றவர் செய்ததியாவையும் பொறுத்தனன்பெண்
கள் பொறுப்பரோ, திருகுளத்தவ ராயினுரைப்பின் சேரறக்கதன்
ருண்டையே. (௧௨)

காமமாதியென் புத்திரர்மிகக் களைத்துவெம்பசி நோயினுற்
ருமதாய்க்கண்ட புசிக்கினுந்தய வின்றிப்பார்த்துக்கொண் டிருப்
பரால், தூமவார்குழ லிளையாள்சொற்கட வாதவள்பின் ருெடர்
ந்தனர், பூமனுயுள புருடர்பெண்வழிப் போதல்கண்டில னுண்டை
யே. (௧௩)

எப்பொழுதிவர் சத்திேனுடசத் தில்லராகியி ருந்தன
ரப்பொழுதேயென் னெழில்குறைந்தமர் பதியுமில்லவ ளாயினே
னிப்பொழுதெனிற் சனித்தமைந்தரு மிப்படியாயி னேந்திழாய்
செப்பருமுயிர் வாழ்தறன்னினு மாள்தனன்றெனத் தேறினேன்.

ஆண்டிசொற்கேட்கி னுண்டியாவனென் றகிலமுமறி யாததோ
மாண்டுதென்புத்தி மங்கைநல்லவள் வாய்மைகேட்டிங்ங னுயினர்
வேண்டுநற்புத்தி கூறினுமவர் மீள்கிலாததென் விதியதே
தூண்டின்மீனெனத் துடிக்கிலென்பயன் சோதிபுக்குவ னுண்டை
யே. (௧௫)

சிரத்தையேசம தமமுதலிய சேடியர்தனைச் சூழவே
பரத்தையோருஞ்ச மாதிதன்னிற்ப துங்கினரின்னு மீண்டிலா
ருரத்தையென்சொல்வ னவித்தையேன்குல மொழியினுமினைப்
பார்கொலோ, திரத்தவின்மைந்த ரோடுஞ்சிவனைத் தீர்த்தறிண்
ணமென் னுண்டையே. (௧௬)

என்றுமேயினை யவனைநோக்கியே மாந்திருப்பரா லெனையுற
வொன்றுமுத்தியு முறையுண்மைகளு மொன்றுங்கண்டில னுதவ

வே யின்றுசேருவ ரென்றுபற்பல ளுளிழந்ததை யன்றியே
தொன்றுதொட்ட வுறவுமெண்ணிலர் சொல்வதென்னுள வாண்
டையே. (௧௭)

யான்வலிதிற் புணரினுமவ ரென்னைசீறுவ ராயினர்
தானிளையளை வலிதிறப்புல்லிச் சருவவேண்டுமென் றேங்குவார்
ஊனமில்லவ ளோக்கினுடன் மூகையாயுண ரொழிகுவா
ரீனமாயவ ரியல்பறையவு மெனக்குவெட்குதென் னுண்டையே.

தானெனுந்தன்மை யற்றுத் தற்குள்ள சகலவிர்த்தியு மற்றுமே
ஊனுருக்கியு ளந்தளர்ந்துகண் ணீருகுத்துணர் வொழிந்துளா
ரானநாயக ரிவ்வணமுற வரிவையர்கள் பொறுப்பரோ
வீனமில்லவ ளாதலிற்சகித் தாளினியிரோ மாண்டையே. (௧௭)

மானமுள்ளவ ராதலினவ வாயிலின்வழி வந்திலா
ரானநாயக ரடங்கினிவ்வண மறிவையர்தேற்ற லாவதோ [கே
வீனமில்லவ ளுண்ணடுங்கியென் னெதிர்ப்படாளிதற் கென்செய
னுட்சேறலு மறமன்றென்னுயிர் நான்றுநீக்குவ லாண்டையே.

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்.—௲௪௱௬௪.

## கௌளி

அடிநான்காய்த் தம்மிலொத்துவந்த இரட்டைக் குறள்வெண்செந்துறை.

வேதமுடி வானதொரு வேந்தன்வரு மாகில்
வித்தகனுய் மத்தமுதல் வேண்டவரு மாகிற்
போதகனுய்ப் புரணவுணர் புல்லவரு மாகிற்
புன்மையற்கு நல்லகுரல் புகலுசிறு கௌளி. (௧)

சொன்மனமுங் கண்டறியாச் சோதிவரு மாகிற்
சுகிக்கவுண ரளித்தாண்ட சொக்கன்வரு மாகில்
வின்மதனை வென்றவொரு வீரன்வரு மாகின்
மீளவொரு கால்வரவு விள்ளுசிறு கௌளி. (௨)

காதனமை விட்டொழித்த கத்தன்வரு மாகிற்
கண்ணேகண் ணுத்தந்த கருணைவரு மாகிற்
சாதலுதித் தறவிர்த்த சத்தன்வரு மாகிற்
றக்கவுரை தக்கபடி சாற்றுசிறு கௌளி. (ங)

கருவினைக ணத்தழித்த கத்தன்வரு மாகிற்
காசினியிற் கரந்தொழித்த கள்ளன்வரு மாகி
லருவுருவ மாயொளிரு மண்ணல்வரு மாகி
லையமற நொய்யகுர லறைவைசிறு கௌளி. (ச)

எல்லையிலா வின்புருவ னென்னுள்வரு மாகி
லிரவுபக லற்றொளிரு மிரவிவரு மாகிற்
றொல்லைவினை தீர்த்தாண்ட தோழன்வரு மாகிற்
றுய்யகுர னல்லதிசை சொல்லுசிறு கௌளி. (ரு)

தத்பதத்தைத் தந்தாண்ட தத்வன்வரு மாகிற்
சமயங்க டந்தொளிருஞ் சம்புவரு மாகிற்
புத்புதமீ தென்றுரைக்கும் போதன்வரு மாகிற்
புரணமுட னல்லகுரல் புகலுசிறு கௌளி. (சா)

இன்னபடி யென்றுணர்த்து மிறைவன்வரு மாகி
லின்பதுன்ப மணுகாத வீசன்வரு மாகிற்
றன்னையறி விக்கவொளிர் சம்புவரு மாகிற்
சந்ததமு வந்துகுரல் சாற்றுசிறு கௌளி. (எ)

சொல்லமுடி யாதபொருள் சொல்லவரு மாகிற்
சும்மாவி ருக்கவைக்குஞ் சூரன்வரு மாகிற்
கல்லைக்கனி யாயமைக்குங் கத்தன்வரு மாகிற்
காதலொடு நல்லகுரல் கழறுசிறு கௌளி. (அ)

சத்தியம சத்தியத்தைச் சாற்றவரு மாகிற்
சருவமுமே பிரமமென்ற சாமிவரு மாகிற்
சுத்திநமைச் செய்தவொரு தொல்லோன் வருமாகிற்
சுருக்காக நல்லதிசைசொல்லுசிறு கௌளி. (கூ)

அருமலங்கண் மாசறுக்கு மாத்தன்வரு மாகி
லரிபிரம ரறியாத வாதிவரு மாகிற்
குருமணியாய் வாய்ந்தவொரு குழகன்வரு மாகிற்
கூடவொரு கால்வரவு கூறுசிறு கௌளி. (ம)

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்.—௩௬௬௪.

திருக்கழற்புகழ்ச்சி.

கலிவெண்பா.

நீர்வேலி யாதற்கு நீளறங்க ளோங்குதற்குங்
கார்வேலி யாயமைந்து கண்ணுறங்கும்—பார்மீதி

லன்னை வயிற்றிலீ ரைந்துதிங்க டங்கியதற்
பின்னை வெளியாம் பிறப்பெய்தி—மின்னுமிழும்

பொற்காப்புத் தண்டை புலம்புஞ் சிறுசதங்கை
நற்கால் கரத்தமைத்து நாடோறு—மிக்காகக்

கண்ணுக்கு மையெழுதிக் கச்சிறுக்குங் கொங்கையமிழ்
துண்ணக் கொடுத்து முறவாக—வண்ணமணித்

தொட்டிலிலே தூங்கவைத்துந் துய்ப்பனவும் பூண்பனவு
முட்டின் றுதவி யகமுகிழ்த்துக்—கட்டழகைக்

கண்டு களித்துக் கனிவாயை முத்தமிட்டு
மண்டு சுகத்தின் வளர்க்கையிலே—கொண்ட

வறியாமை முன்வளர வானவுடல பின்னுய்ச்
சிறியா ருடனாடிச் செல்லுங்—குறியோர்ந்து

ரிக் கமர்த்திப் பயின்று பலகலையுந்
தெள்ளித் தெளிந்த சிறுபொழுதி—லொள்ளொளியிற்

சொக்கனெனும் பேருருவாய்த் தோன்றி யகத்திலுள
மைக்கரிய பந்தவிருண் மாற்றுகழல்—பீக்கரிய

ஞான நிலையினிலே நாடோறு நின்றிலங்க
மோன நிலைமுன்னே மூட்டுகழல்—தானவனாய்

நின்று திசையனைத்து நின்மலமா யேநிறைந்து
மன்று ணடிப்பவிவண் வந்தகழ—லன்றாலின்

கீழிருந்து வேதார்த்தங் கேட்ப வருள்செய்து
பாழறுத்த நால்வேதம் பற்றுகழல்—ஊழகற்றிச்

சன்மயமே தானென்று சந்ததமுஞ் சிந்தையறச்
சென்ம மகற்றித் தெளிந்தகழ—லென்மயத்தை

யெல்லாங் கெடுத்தழித்தே யென்னையெனக் கேயளிக்கச்
சொல்லாமற் சொல்லிவைத்த துய்யகழல்—பொல்லா

னெனவுலக முற்று மிசையாது சித்தாந்
தனையாய்த் திருக்கச் சமைத்தகழல்—நினையா

திருந்தார்க ணெஞ்சி லிருஞ்சுகத்தை யென்றும்
வருந்தா தளிக்கவிவண் வந்தகழல்—திருந்தாத

புன்மையே னெஞ்சம் புகுந்திச் சிவமாக்கச்
சின்மயத்தை யுள்ளே செறித்தகழல்—வன்மையா

யாருங் கரைத்தற் கரிதாய வுள்ளத்தை
நீராக் கரைந்துருக்கு நேயகழல்—பாராதி

யண்டங்க ளத்தனையு மண்ண லுருவமெனக்
கண்டிருக்க வுள்ளுணர்வைக் காட்டுகழல்—பண்டைப்

பழவினையைச் சுட்டொதுக்கிப் பாசந் தொலைத்த
மழவினையென் னுள்ளமிசை வைத்த—அழல்போ

லெரிக்குங்கா மாதிகளை யெள்ளளவு மில்லா
தரித்துப் பரத்தி லழுத்தி—யுரித்தாகி

யென்னதியா னென்றலறுத் தின்னபடி யென்றுணரத்
தன்னை யறியவுணர் தந்தகழல்—முன்னை

வினைவயத்திற் செல்லாது மீட்டிச் சுகநீ
ரினையுடைத்தென் னுட்பெருக்கு மீறில்—கனவுடலிற்

றோன்றாத தோற்றித் துகளறுத்தே யுள்வெளியும்
ஊன்றமா நிற்கப் புரிந்தகழ—லான்ற

வெழுபிறப்பின் றீயவையு மென்னை யணுகாமற்
சுழுவி லருளைச் சொறிந்த—கழுவாய்

ககனமுட்டி நின்றாலுங் காய்பொறிமுன் பஞ்சாய்ப்
பிசுவழித்து ஞானநறை வீக்கி—யகநெகிழச்

செய்தகழ றேவர் தெவிட்டிநிற்க வின்பமழை
பெய்தகழல் பின்ன மறுத்தகழல்—பய்தனிலே

போத றவிர்த்தகழல் போத மளித்தகழ
றீது நலஞ்சமமாய்ச் செய்தகழல்—வாதனையை

முற்றுந் தொலைத்தகழல் மூவர் களுந்தேடிப்
பற்றும் பகர்வரியப் பத்மகழல்—சுற்றும்

பதினாற் கரணங்கள் பாய்ந்துமோய்ந் தாலுங்
கதிரா யிருந்தொளிரக் காட்டி—முதியோர்கள்

பண்ணுந் தவத்தாற் பரிபூ ரணமாக
நண்ணுங் கதியளிக்கு ஞானகழ—லெண்ணி

யளத்தற் கரிதாக வங்கிங் கெனும
லுளத்திற் புகுந்தே யொளியாய்த்—தளிர்த்து

மனவாக்குக் காய மணுகா வகைசிற்
கனமாக்கித் தன்னையே காட்டிக்—கனவினை

நீர்க்குமிழைப் பேய்த்தேரை நீலவில்லை மின்னைப்போ
லாக்கி யுலகையறி வித்தகழல்—நீக்கமிலா

முன்னை வினைமாசை முன்போக்கி யன்பினீர்
தன்னைமிக வாட்டித் தயங்குகழற்—பின்னையிந்தப்

பேருலக முற்றும் பிரமமா கப்பார்க்கச்
சீர்பெறு மஞ்சனங்கண் டீற்றுகழ—லேர்பெறவே

சத்வா சனேகொழிக்குஞ் சந்தந் திமிர்ந்தேய
சத்வா சனையொழிக்குந் தன்மகழல்—சித்விண்

ணருமை யறிவுறுத்து மாரணங் கேட்ட
றருமகர குண்டலத்தைச் சாத்திப்—பொருவரிய

வீர மதகரியை மெய்ம்மூன்றி னூடாமற்
றீர முடனழித்த செய்யகழல்—பேரறிவாம்

பாலூட்டி மொய்யிருள்கள் பாறித் தினமொளிர
மாலூட்டு மென்முடியாய் வைத்தகழல்—கால்கைக்கு

வெட்டவெளி யாக விளங்கும் பரம்பொருளைச்
சட்டை யதாகத் தரித்தகழல்—முட்டின்றி

யெங்கெங்குந் தானா யிருந்தபடி யேயிருத்திக்
கங்குன் மயக்கறுத்துக் காத்தகழல்—சங்கையறுத்

தெப்போது நெஞ்சே யிமைத்துவிழி யாமலதைத்
தப்பாமற் சிந்தித்துச் சார். (க)

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்.—௲௪௬.

## பொதுமகளிர்விழைவறுத்தல்.

ஒன்பதின்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

உடம்பி லியானெனு மடம்பு குந்திடி லுடைந்து போய்மிக வடைந்த போதமு வேறதாய்க், குடம்பு ரைந்தசை தனத்தி லேமனங் குறித்தெ ழுந்தன னிறுத்தும் வெண்ணெயின் வாடி யே, யிடம்ப மாயுள விடங்கள் பூண்பணி யெதிர்ந்த செல்வ மும் பொதிந்த கல்வியு மிழந்துபோ, யுடன்பி றந்தவர் தொ

டார்ந்து நன்மதி யுறுத்த வும்மவை வெறுத்து வென்னரு திரு த்துமே. (க)

வடித்த வேல்விழி குடத்தி லேகடி தடத்தின் மாய்ந்திடி னெடுத்த யாக்கையை வளர்த்துநோய், வெடித்த குலையுந் தடித்த புண்களு மிகுத்து மெய்யினி லுகுத்த செம்புனீ ரருந் தவே, கடித்த லீக்களுந் தொடுத்த கீடமுங் கறிக்கும் வே தைபற் கறித்து மூங்கையாய்ப் பொறுத்துமேற், றுடித்த மூம் மொழி மடுத்தபேர் கள்வந் தடுத்தீ தென்னெனத் தொடுத்த புத்திக ளருத்துமே. (உ)

கிழித்த மாவடு பழித்த கண்ணியர்க் கிரங்கி நெஞ்சழிந் தற ங்கொ ளாயெனின் மறங்கொளீ, யிழித்த புன்னடை செழித்த ரும்பொரு ளீத லிற்றுபுன் களித்த கன்ளினுங் கெளிதினே, யழித்தல் கண்டவர் மணிப்பூண் டிணியென வடுத்து வாங்கு வர் கொடுத்து வீணினில் வறிஞ்ஞனு, யொழித்து நல்லரைச் சுழித்து மெரியெழ விழித்துன் றுட்களைக் கழித்துப் பவக்கட லுழல்வையே. (௩)

பணைத்த மூலையுறு மினத்தி னூர்நரை பழித்த மலரிரு ளழி த்த குழலினுக் கணிர்துமே, யிணைத்த வுடலினைச் சலத்தி னுற்றுடைத் தரைத்த வரிசன நிரைத்து மெய்யினை யிசைய வே, மணத்த குங்கும மழுத்தி யெங்கணு மணைத்து மேகலை பிணித்து கச்சினை யணிந்துமேற், புணர்த்தி வரிவளை திணித்த சிலம்புகள் பொருத்தி யெவரையும் வருத்து மயலினை யறுத் திடே. (௪)

நடைக்கு ளேநுணங் கிடைக்கு ளேவிழிக் கடைக்கு ளேம லர்த் தொடைக்கு ளேசிலர் நலியவே, யுடைக்கு ளேநகைப் படைக்கு ளேயிரு தொடைக்கு ளேயல்குற் புடைக்கு ளேபல ருழலவே, கடைக்கு ளேபினற் சடைக்கு ளேதுயிற் கிடைக்கு ளேமெயின் மூடைக்கு ளேகலர் கழியவே, விடைக்கு ளேம யற் கொடைக்கு ளேகவர்ப் பெடைக்கு ளேவிழுந் திடற்ப டலொழித் திறையுன்னே. (௫)

கலையி லேயுடம் பலையி லேவெறு விலையி லேமைதன் சிலையி லேதினங் கரையவே, முலையி லேநின்ற நிலையி லேவிழி வலையி லேமலர்த் தலையி லேயுள முலையவே, விலையி லேமருட் கொலையி லேகாம வுலையி லேயிசைக் கலையி லேயுடன் மெலிய வே, புலையி லேமனந் தொலையு மாறின்பிற் புல்லும் பேதையி னல்ல லழித்தரற் புகழ்வையே. (சு)

இசையிற் சிலரையும் வசையிற் சிலரையு மெழிலிற் சிலரை யு மழலிற் சிலரையு மிரங்கவே, நசையிற் சிலரையு மசைவி ற் சிலரையு நடிப்பிற் சிலரையுங் குடிப்பிற் சிலரையு நசிப்ப வே, பசையிற் சிலரையு மொசிவிற் சிலரையும் பண்பிற் சில ரையு நண்பிற் சிலரையும் படியவே, தசையிற் சிலரையு நிசியிற் சிலரையுஞ் சருவு மரிவையைப் பிரிவுற் றரனடி தனையுனே.(எ)

சகத்தை மயக்குற முகத்தை மினுக்கியுந் தரித்த பாகிலை கறித்த ருந்தியுஞ் சரசமா, யகத்தி லன்பறுத் திகத்தில் வயி ற்றுண வடுத்த பொருளுரை விடுத்துப் பறிகொளு மரிவையி ன், சுகத்தை மெய்யென நிகத்த வறிவிழுந் தொடுத்த கருப முங் கெடுத்துப் பவத்தழற் குரிமையாய்ப், புகத்த லைப்பட றகர்த்துச் சித்தினைப் பொருந்தி யதனின்ப மருந்தி யெங்க ணும் புரிப்பையே. (அ

ஒருத்த ரைக்கடை நிறுத்தி யும்பிரி தொருத்த ரைத்தனி ற் புணர்த்தி யும்வே றெருத்தர்மேற், கருத்தை வைத்தய லொருத்த ரைத்தனங் கயக்க விட்டகங் களிக்க வைத்திரு கண்ணினல், விருத்த ரிளையவர் வருத்த மெய்துற வருத்தி மையலை யருத்தங் கைக்கொடு விடுப்பரா, லெருத்தி னட திடுங் கருத்த னையகந் திருத்தி யிருத்திடிற் பருத்த வினை ளு மிறக்குமே. (கூ

பட்டிலே நெற்றிப் பொட்டி லேமனங் கிட்டி யேயடி பட் மேதின மிறத்தலா, லெட்டி லேயொரு மட்டி லாவது நட் பொன்மனை குட்டி யென்றவா விட்டுமே, கட்டில் பஞ்சணை

வட்டில் பலவணி புட்டில் மலர்களு மிட்டு மவருரைக் கட்டிலே, கெட்டி யாய்க்கொடு திட்டினு மவரைக் கட்டி யணைத் தலை விட்டுக் கிளருண ரொட்டிடே. (ய)

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்.—ருசஎரு.

## வாரணம்.

இரட்டைக் குறள் வெண் செந்துறை.

பிரம தண்டிற் பிணிப்புண்ணும் வாரணம்
பேதஞ் சிந்தப் பிறங்கிடும் வாரண
முரம னைத்து முதறித் தொலைத்தபின்
னுபரே காந்தத் துறைமத வாரணம். (க)

ஆர ணத்து ளடங்காத வாரண
மந்த மாதி யமைவுறு வாரணங்
கார ணமெனக் காசினி யாவைகளுங்
கருத்தி றந்தோர் கழறுமவ் வாரணம். (உ)

கரணக் காடழித் துக்களி வாரணங்
கண்ட முற்றுங் கழற்றிடும் வாரண
மரண சென்மந் தொலைக்கு நெறியினின்
மதர்த்து லாவுமம் மான்மத வாரணம். (ங)

கன்ம னத்தைக் கரைத்திடும் வாரணங்
காண்பான் காக்ஷி கடந்தொளிர் வாரணம்
பன்ம தங்களும் பற்றித் தொடரினும்
பார்வைக் கும்கப் பட்டிடா வாரணம். (ச)

நெஞ்சைப் பஞ்சாய்த் துரத்திடும் வாரண
நின்ம லத்தினர் நேருறும் வாரணந்
தஞ்ச மென்றவர் தங்களைத் தன்பதத்
தான்மி தித்துத்தற் காத்திடும் வாரணம். (ரு)

வேத நான்கும் விளித்திடும் வாரணம்
விண்ட யன்முதல் காண்பரும் வாரணந்
தீது நன்மையைச் சிந்தியா தெங்குமாய்ச்
சிந்திப் போரைத் திகழ்த்திடும் வாரணம். (௬)

கால மூன்றுங்க டந்தொளிர் வாரணங்
காச நீத்தவர் கண்டிடும் வாரணம்
ஞால முற்றுநன் காண்டுந லந்தீதி
னடுவி ருந்து நடித்திடும் வாரணம், (௭)

நேதி செய்யினி கழ்ந்திடும் வாரண
நிருவி கற்பத்து ணின்றிடும் வாரண
மாதி யந்தமி லாமல கண்டமா
யறிவு ருவாய மர்ந்திடும் வாரணம். (௮)

ஊழ்வி லங்கையு தறிடும் வாரண
முள்வெ ளியுமொ ளிர்வுறும் வாரணம்
வாழ்வ னைத்தையு மன்றெனக் காட்டித்தன்
வனசத் தாளில்வ ணக்கிடும் வாரணம். (௯)

சாதி பேதந் தவிர்த்திடும் வாரணஞ்
சார்ந்த பத்தியிற் றங்கிடும் வாரணம்
பூதி சாதனம் போற்றுவா ருள்ளத்திற்
புகுந்த ருளைப் பொழிமத வாரணம் (௰)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்.—௩௪௮௫.

## அச்சோப்பதிகம்.

### கலிப்பா.

பத்திநெறி யறியாத பாமரரோ டுழல்வேனை
முத்திநெறி காட்டுதற்கு முன்னவனே கருணையினு
லுத்திமறை யநுபவமு மொத்திருப்ப வலிவந்தே
நத்தியெனி தாண்டமையை நவிலரிதே யச்சோவே . (௧)

பிரமனரி முதலானோர் பேசாநு பூதியினைச்
சுரர்முனிவர் தொல்லுலகர் சுத்ததபோ தனர்நிற்பக்
கரமணிபோற் காட்டுதற்குக் கருணையினுற் றடித்துவந்த
குரவனின தொருமகிமை கூறறியே னச்சோவே. (உ)

கண்டகண்ட வாதியர்கள் காதலித்த தேததுவே
யண்டங்க டொறுநிறைந்து மாதிமறை தேறறியாப்
பிண்டங்க டொறுங்கரியாய்ப் பிறங்கியுமோ ருயிரறியாப்
பண்டைமுத லெனையாண்ட பரிசறியே னச்சோவே. (௩)

அண்ணலெனை யறியாத பக்குவத்தே யறிவுருவாங்
கண்ணதனைத் தந்ததனுற் காசினிசின் மாத்திரமாய்
நண்ணவதி லோய்ந்திருக்க நலிதுன்ப நீங்கியப்பா
லெண்ணருமின் பத்தாழ்ந்த தென்சொல்வே னச்சோவே. (௪)

ஆட்டுவித்த பம்பரம்போ லாடலுற்றே னதிருநமன்
சீட்டுவந்தா லென்செய்வேன் சித்தநின்பாற் சென்றிடுமோ
கூட்டுக்கு ளுணர்வளித்த கொற்றவனே யதைவிளக்கிக்
காட்டுவித்த கழற்பெருமைக் கென்சொல்வே னச்சோவே. (௫)

பொட்டனின்ற புலமனக்கண் பொத்திவிடப் பொட்டிட்டுத்
துட்டமலத் தூறேகத் துன்பிழியச் சோதிசெய்து
நட்டனெனக் கொண்டாண்ட நன்கருணைப் பெருவெளத்திற்
பட்டமிழு மென்போலப் பார்பெறுமோ வச்சோவே. (௬)

எண்ணுமறை மீதிருந்த வெம்பெருமா னென்றனையு
மண்ணிவா வென்றுரைத்தே யகிலமெலாந் தன்வடிவாய்க்
கண்ணிலிக்குக் கண்ணளித்த வாறுபோற் காட்டிவித்த
வண்ணமிந்த மானிலத்தி லார்பெறுவா ரச்சோவே. (௭)

பொத்தையுடன் மெய்யெனவே புந்திசெய்து திரிவேனை
முத்துமணி மாணிக்க மனையவொரு முழுச்சோதி
சித்தநனி சீராக்கித் தேவர்களுந் தெவிட்டிநிற்க
வைத்தாண்ட விதமதனை வழுத்தறியே னச்சோவே. (௮)

மைப்படுகண் ணியர்மயலின் மனமழிந்து நிற்பேனை
யொப்பிலியாய் வந்தொருவ னுள்ளத்தி னுட்புகுந்து
தப்புறுமா மாயைமுதற் சாடியவன் வெளிச்செறிக்க
வெப்போது ஞானவிளக் கேற்றுவித்தா னச்சோவே. (கூ)

கங்குல்பக லென்றறியக் கண்ணிலியாய் நின்றேனைச்
செங்கதிரு மங்கமிகத் தேசொளியாய் வந்தொருவன்
பங்கமெலாந் தீர்த்துத்தன் பாதத்தைச் சிரஞ்சூட்டி
யங்கணனுய் வைத்தாண்ட தார்பெறுவா ரச்சோவே. (ய)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்.—கூசகூரு

ஊசல்.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

ஆரணநான்கையுங்காலாயமைத்துமேலே
யறிவென்னுந்தொடர்பூட்டியகிலமியாவும்
பூரணமாம்பலகைதனிற்பொருந்தவைத்துப்
பொங்குமகண்டாகாரவிருத்திதன்னைக்
காரணமாமேற்கட்டியாயமைத்துக்
கனங்குழையார்மையலிலேசேராவண்ண
மேரணமாங்கூடத்தனினிதிருந்தே
யிறப்பிறப்பிலியையாமலாடீரூசல். (க)

நிற்குணமாஞ்சாக்கியொளிர்நிமலபோதர்
நிச்சயாநிச்சயங்கணேராமோனர்
சற்குணாதீதரெலாந்தானேதானுய்த்
தற்பரத்திலமூழ்ந்தினவர்சார்ந்துநிற்கப்
புற்குணமாம்பொய்யழுக்காறுசைவஞ்சம்
பொறிபுலனந்தக்கரணம்புறம்பினிற்கச்
சொற்கடங்காக்கூடத்தனினிதிருந்தே
சேர்கமுதலியையுமலாடீரூசல். (உ)

அட்டாங்கயோகினிகளருகினின்றே
யாலாத்திபரிமாறச்சமதமாதி
தொட்டாட்டச்சத்வவாசனையாந்தோழி
தூய்யதண்காறரும்வெண்சாமரைகள்வீசப்
பட்டாலவட்டங்கலைஞானமாதும்
பரிவுடனேவீசிவரப்பத்தியென்னுங்
கட்டழகமின்னணங்குகணமுநீங்காக்
களிப்பியவின்பமுடனுடீரூசல். (௩)

தோகையர்கடோடனங்கடோய்தனீக்குஞ்
சுத்தநிராசைமாதர்சூழ்ந்துநிற்பச்
சாகைசேருபவேதமங்கைசூழச்
சந்ததமுமுபநிடதைசார்ந்துநிற்க
மூகையர்களெவ்விடமுமொய்த்துநிற்க
முத்தியெனும்பெண்களுமேமுன்னினிற்க
வோகையுடன்விமர்சனிவியாபினியினுப்ப
னுடனமர்ந்துகூடத்தவாடீரூசல். (௪)

சாதனநாற்பெண்களெதிராகநின்று
தன்வடிவைத்தெளிவிக்குமாடிகாட்டச்
சேதனமாம்ஞானப்பெண்டபந்தாங்கச்
சித்தியெட்டுஞ்செப்புபணிவிடைகள்செய்ய
வேதனைகள்பழவினைகளகன்றுபோக
மெய்சிலிர்த்தல்வேர்த்தலுடலிளகலெய்த
வாதனங்களெட்டெட்டுமெடுத்துநிற்ப
வகண்டபரகூடத்தவாடீரூசல். (௫)

வைகரிமத்திமைபரைபைசந்திமாதர்
மகரவீணைகள்பாடவாய்வென்மாதும்
பெய்கலன்களொலிப்பநடனங்கள்செய்யப்
பேரறிஞரிமையாதுபெட்பிற்பார்க்கச்
செய்கருமந்தவிர்கருமஞ்செப்புநூலைத்

திகழ்மார்பிலணிந்தவர்கள்சேய்மைநிற்க
வய்கலத்தமித்தலிறந்தொளிருஞ்சோதி
வடிவானகூடத்தவாடீரூசல். (௬)

ஆவரணவிட்சேபமென்றமாத
ராசாரவாயில்கடந்தப்பானின்று
சேவைசெய்தற்கில்லாதுதேம்பித்தேம்பித்
தியக்கமுறமாயையெனுஞ்செவிலியன்னோர்
நோவதனைத்தவிர்க்கவஞர்நுழைந்துபார்க்க
நுண்புலமிலாமையுணர்ந்தோடிச்செல்லத்
தேவர்களுந்துதிப்பவிருதேவியோடுந்
திகழுங்கூடத்தமகிழ்ந்தாடீரூசல். (௭)

பரவியவிராட்டுசுராட்டுடன்சம்ராட்டும்
பதிவாகப்பக்கமெங்குமூர்த்துநிற்க
வுரவுபிரவிருத்தியெனுமுரிமைமாது
மொதுங்கிநின்றேயுரைப்பவற்றையுடன்முடிக்க
நிரவியநிவிர்த்தியெனுநிமலமாதர்
நேர்ந்தவர்கள்சித்திரம்போனிற்பச்செய்ய
கரவிலாதிலங்குமிருபாவையோடுங்
காந்தியுடன்கூடத்தவாடீரூசல். (௮)

வாய்மையெனமங்கிலியப்பெண்கள்வாழ்த்த
வகைவகையாய்வரும்வினையைப்பொறுமைமாதர்
தூய்மையுடன்பொறுத்துமகிழ்வூட்டிநிற்பத்
தூலவுடன்முதன்மூன்றுமறந்தபோதிற்
சேய்மையண்மைகளுமற்றுத்திகழ்வதான
தீரனெனுங்கூடத்தசிறியேமுள்ள
மாய்வுறுமாறருள்புரிந்தங்கிருமாதோடு
மழகாகவின்பின்மகிழ்ந்தாடீரூசல். (௯)

எண்ணரியமுனிவர்தபோதனர்கள்சித்த
ரிருடிபர்கின்னரரியக்கர்கிம்புருடர்
விண்ணவர்கள்சுரர்சுரேந்திரன்குபோன்

வித்தியாதரர்சத்தரிஷிகந்தர்வர்
கண்ணனயனரன்முதலோர்கற்பின்மாதர்
காராளரரையர்மறையவரின்னோரி
னண்ணுமனண்ணியெவரையுமிலக்கு
ஞானவடிவானவனேயாடீரூசல். (௰)

கலைமகளுந்திருமகளும்யாழைமீட்டக்
கந்திருவமாதர்சங்கீதம்பாடச்
சிலைமுதலரம்பைதிலோத்தமையுமாடத்
தெய்வமகளிராசிசெப்பிவாழ்த்த
விலையுண்டெனுவிடையிந்திராணியேத்த
வெழிலுறுமருந்ததியுமிசைவாய்ப்போற்றத்
தலைமையொடுபுலைமையிரண்டிறந்தொன்றான
தத்துவனேகூடத்தவாடீரூசல். (௧௧)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்.—௬௫௦௯.

## திருப்பள்ளியெழுச்சி.

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

போற்றியெங் குமொளிர் பூரணப் பொருளே
புதைமனம் விரிந்தது பொறிபுல னலர்ந்த
நாற்றிசை மனிதரு நனவினை யடைந்தார்
நறுமலர் விரிந்தன நயனங்கண் மலர்ந்த
மாற்றில்பொன் னெனவொளிர் கதிரவ னுதய
வரையடைந் தனன்செய்ய வாரணங் கூவிற்
றேற்றருங் கழலிணை யெளிதமக் கருளு
மின்னமிர் தேபள்ளி யெழுந்தரு ளாயே. (௧)

அறிவினி லறிபவ ரகத்துறை யுணர்வே
யருமறை முடிவினி லமர்ந்திலங் கிறையே
குறிகுணங் களுமிறந் தொளிர்மணி வரையே

குயில்களு மயில்களுங் கூவின தெந்தாய்
செறியிரு ளகன்றிடத் திருமுக மென்னுந்
தினகர னுதித்தெழத் திருவுள மிரங்காய்
வறியோமைக் காத்திட மலர்க்கழ லீயு
மாசின் மணியேபள்ளி யெழுந்தரு ளாயே. (உ)

அன்னங்கண் மலர்ந்தன வழன்மதி விண்மீ
னலரொளி மழுங்கின வடியருக் கிரங்கி
யின்னலைத் துடைத்தரு ளெளிதினி தளிக்கு
மீசனே பாசவி மோசன தமியோ
மின்னிக்கர்த் தழியுமிவ் வாழ்வினை மெய்யாய்
மேதைசெய் தளுர்புகுந் தேமெலி வுற்றோம்
பன்னகப் பணியணி பரமனே கருணை
பாலிக்க வேபள்ளி யெழுந்தரு ளாயே. (௩)

வண்டுகள் பாடின வளர்கருக் குருவி
மறைகளை யோதின வலம்புரி யொலித்த
தொண்டினைப் புரிபவர் துன்னின ரெங்குஞ்
சுத்தவெ ளியேயிரண் டிறந்தொளிர் சோதி
கண்டங்க ளெமதுமுன் காணொரு வகைபாய்க்
கலந்தேக மாயொளிர் கருணையங் கடலே
மண்டிருள் வெளிசெய மலர்முகத் திரவி
வயங்கொளி படப்பள்ளி யெழுந்தரு ளாயே. (சு)

அற்பொழு தகன்றன வந்தணச் சிறுவ
ரருமறை யோதின ரழகுறுஞ் சுகங்கள்
பொற்புடன் பாடின பொன்னுல கவரும்
பூசுரர் முதலியோர் புறம்பேகாத் திருந்தா
ரெற்படு மொளிக்கொளி யாயிலங் கிறையே
யெங்களை யடிமைகொண் டின்னருள் புரியுங்
கற்பக மேகமும் பவத்தழன் மாற்றுங்
கடலமு தேபள்ளி யெழுந்தரு ளாயே, (ரு)

இவ்வண மிதுவென வியம்புதற் கரிதா
யெங்கனு நிரவிய விதயத்தின் வெளியே
மைவண்ண னயன்சுரர் மாலுறும் பொருளே
மனத்தினு னினைப்போரை மயக்கிடு மருளே
யெவ்வண்ணங் களையுந்தன் னெழில்வண்ண மாக
வியற்றியு மகந்தையா லறிவிழந் திருந்தே
மெய்வண்ண மாம்பர வீட்டின்ப மடைய
விளங்கொளி யேபள்ளி யெழுந்தரு ளாயே. (சு)

ஐம்பெரும் பூதமா யவற்றினுக் கிறையா
யகம்புறக் கரணமு மாகிய விளக்கே
யிம்பரி லனைத்தையு மெழில்பெற விளக்க
விலங்குதே சிகவடி வாயெழுந் தருளித்
தம்பதஞ் சிரமிசை தரித்தனர் நீக்கித்
தன்மய மாயொளிர் சின்மய மாக்கி
வம்பனேன் றன்னையு மாண்டமா மணியே
மாசில்வெ ளியேபள்ளி யெழுந்தரு ளாயே. (எ)

பஞ்சக ருத்தருமா யவர்க்குப்பன் னியராய்ப்
பார்முத லண்டங்க ளனைத்தையும் படைத்தே
யஞ்சலிற் புரந்தழித் துந்திரோ பவித்து
மநுக்கிர கஞ்செய்து மவனியைக் காத்தாய்
தஞ்சமென் றடைந்தவர் சனனம தொழிக்கத்
தனையன்றிப் பிறிதொன்றைத் தன்னிற்காட் டாமன்
மிஞ்சிய வறிவுரு வாய்விரித் தாளும்
விமலவ டிவேபள்ளி யெழுந்தரு ளாயே. (அ)

ஆண்பெண் ணலியென வறையுமிவ் வகிலத்
தடங்கலு நிறைந்ததிக் கிரமித்து விளங்கு
மாண்பொரு ளேயணு வுக்கணு வாக
மகத்துக்கு மகத்தென வயங்கருட் டேனே
பூண்பணி மடவரல் போகத்தி லுழன்றே

பொழுதவம் போக்கிடும் பொங்கிரு ளகலக்
காண்பரு மொளிமுகக் கதிரவ னுதயங்
கண்டுதொ ழவேபள்ளி யெழுந்தரு ளாயே. (௯)

இரவொடு பகலற விலங்குமெம் பெருமா
னிமைத்தல்வி ழித்தலற்ற விருடிகட் கிறையே
வரவொடு போக்கறத் தொளிருஞ்சின் மயமே
மறவியு நினைத்தலு மறுத்தவா வாழ்வே
கரவு வெளியிரண் டிறந்தலர் கடலே
கன்மன முடையினேங் கறையிரு ளகல
விரவியை மழுக்கிடு மெழின்முகக் கதிரிங்
கிலங்கிட வேபள்ளி யெழுந்தரு ளாயே. (௰)

நாட்டமூன் றுடையவ நானிலத் திறையே
நாதமுங் கடந்தொளிர் நற்பரம் பொருளே
கோட்டமுள் ளவருள்ளங் குடிபுகுந் திருந்துங்
குணித்திடற் கருமையாய்க் குலவுசெஞ் சோதி
வாட்டங்க ளறுத்தெமை மானில மிசையே
வாழ்விக்கச் சொக்கனாய் வந்தமா மணியே
தேடடங்க ணிறைவேற முகத்தின கரனைத்
தெரிசிக்க வேபள்ளி யெழுந்தரு ளாயே. (௰க)

விரிமன மடங்கினர் விளங்கின ரொருசார்
மெய்சிலிர்த் துடன்மறந் திருந்தன ரொருசா
ருரிதரித் துணர்வினி லுறங்கின ரொருசா
ரோகையி லொன்றையு முணர்ந்தில ரொருசார்
பிரியமோ டெவர்த்தலைப் பீறின ரொருசார்
பேதவபே தத்தைப் பிழந்தன ரொருசா
ரெரிமுதன் முச்சுட ரொளிகெட விலங்கு
மெம்பர மேபள்ளி யெழுந்தரு ளாயே. (௰உ)

முற்றிற்று.

ஆக திருவிருத்தம்.—௯௱கஅ.

## அன்பிற்றுதித்தல்.

நேரிசை யொத்தழிசைக் கலிப்பா.

சரவசர வுயிரனைத்துந் தானாகத் தரித்தெங்கு
நிரவியொளிர்ந் திலங்குமொரு நினதுருவை யெளிதாக
விரவுவண மனங்கரைத்தே விமலசுக மளித்தோய்கேள்

இது தரவு.

பல்லுயிரு மிகவிரும்பிப் பரவசமாய் மனமழிந்து
சொல்லாலுந் துதிப்பதற்குன் றிருமேனி சுகக்கடலே

ஞானக்கண் ணினையுடையார் நாடோறு மகமகிழத்
தானவனாய்த் தரிப்பதற்குன் றிருமேனி தகைமலரே

திரிபுடியை யறுத்தவர்க டெளியாமற் றெளிந்துய்ய
கரியவிரு டனைப்போக்குன் றிருமேனி கதிரொளியே

இவைமூன்றுந்தாழிசை.

அதனால்—இது தனிச்சொல்,

எம்மனோ ரகமுஞ் செம்மையிற் றிருந்திக்
கனைகடல் வேலியாய்ப் புனைவுறு முலகின்
மாதுபொன் மகவென வளையும் பந்தத்
தீதகன் றின்னலைத் தீர்க்கும்
பாதப் போதினைப் பற்றுத லெளிதே (௧)

இது ஆசிரியச்சுரிதகம்.

அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா.

அறிவுடையீர் அறிவுடையீர்,
எறிகடலிற் றுயில்வோனு மிளவனச மலரவனுஞ்
செறிகாவின் புரந்தரனுந் திசைமன்னி வதிபவரு

மெண்ணரிய வுருத்திரரு மிமையவரு முனிவர்களுங்
கண்மனத்தா லறிவரிதாய்க் கடிநகரிற் பதின்றிசையு

யிறையளவு மகலாதே யிலங்குவடி வெனவிளங்கி
மறைநான்கின் முடிமீதே வளர்ந்துநிறைந் தொளிர்கையிலே

இதுதரவு.

அண்டங்க ளடுக்கடுக்கா யாக்கியதி னுள்வெளியு
மண்டுசுரர் நரர்ழிருகம் வளர்பறவை நகர்வனவுந்
தெண்டிரையிற் றிரிவனவுஞ் செடிமுதலா யெழுவகையும்
பண்டுபோற் படைத்தலினு லயனென்பார் சிலமாந்தர். (க)

அவ்வணமே யவனியுள வுயிரனைத்து நிலைபெறவே
பவ்வமதில் விடவரவப் படுக்கையிலே யனந்தலுறுங்
கவ்வைவளை திகிரியிரு கையிற்சேர்த்த கரியவனே
யெவ்வமறப் புரத்தலினு லிறையென்பார் சிலமாந்தர். (உ)

மானொருகை மழுவொருகை வளமைபெறத் தரித்தேசெவ்
வானிறமாய்த் தமகுணத்தி லுதித்தசையு மதிச்சடையு
மான்மதத்த கரியதளு மருங்கிசைத்த வுருத்திரனே
யீனுலக மழித்தலினு லிறையென்பார் சிலமாந்தர். (௩)

இவை மூன்றுந் தாழிசை.

பெருமுல கதினுயிர் பேணுங் கன்மமே
சருவமு மளித்தலிற் சத்தென் பார்சிலர்

செப்புறும் பொருளொரு தெய்வ மன்றியே
யிப்புவி யொளிர்தலி லியல்பென் பார்சிலர்

இவை ஈரடி இரண்டம்போதரங்கம்.

குணத்தினைப் பொருளெனக் கொள்வர் சிற்சிலர்
மணத்தினைப் பொருளென மருள்வர் சிற்சிலர்

நிணத்துடல் பொருளென நிறுப்பர் சிற்சிலர்
கணத்துதித் தொடுங்குணர் கரைவர் சிற்சிலர்

இவை யோரடி நான்கம்போதரங்கம்

ஐம்பொறிய தென்பார்சில ரகங்கிருதி யென்பார்சில
பம்புமன மென்பார்சிலர் பகர்சித்த மென்பார்சிலர்

இவை முச்சீரோரடி நான்கம்போதரங்கம்

பாழினைச்சிலர் காழினைச்சிலர் பதியினைச்சிலர் மதியினைச்சில
ரூழினைச்சிலர் பூழியைச்சில ரோதையைச்சிலர் மேதையைச்சிலர்

இவை இருசீரோரடி யெட்டம் போத ரங்கம்

ஆங்கொருசார்—இது தனிச்சொல்

மனத்தினின் மாசுறு மினத்தினைச் சேர்ந்து
தனத்தினைத் தேடித் தன்மெய் யோம்பி
யின்மனை சுதராய்க் கின்பி னளித்தலை
நன்மையிற் றீர்ந்த தவமென நாட்டிக்
காலந் தள்ளுங் கழுவனேன்
மூலமு ணர்வனோ மொழிந்தரு ளெந்தையே. (உ)

இது ஆசிரியச் சுரிதகம்

வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா

அரனரியோ டயன்முனிவர் அமரர்பதி சுராவுணர்
நரர்முதலோர் துதித்திறைஞ்ச நாமனமெய்க் கறிவரிதாய்ப்

பல்லாண்ட வகம்புறமும் பரவியவற் றைச்சடமாய்
வில்லாருந் தனைச்சித்தாய் விளக்கியும ந்தத்தினிலே

தன்னில்வே றறச்சத்தா மாத்திரமாய்த் தயங்குவித்தும்
பன்னரிய மறைமுடிவிற் பதிவர்க வமர்ந்தொளிர்வோய்

இது தரவு

அதலமொடு விதலமுமே யடுத்தசுதல் ரசாதலமே
விதமான தலாதலமே விரிவான மகாதலமே

யிதமான பாதலமே யறையுங்கீ ழெழுபுவியுஞ்
சதமான வரைக்கீழாஞ் சரீரமாய்ச் சமைத்தனையே

பூலோகம் புவர்லோகம் புகல்சுவர்க்க மகாலோக
மேலாகுஞ் சனர்லோக மிகுத்ததவ வுலகமதின்
பாலாகுஞ் சத்தியமே பகருர்த்த வெழுபுவியு
மாலாகு மரைமேலாய் வளருடம்பாய்ச் சமைத்தனையே

சுரர்முனிவோர் தனித்தனியே சொலுமுணர்விற் றுயில்கொள்ள
விரவுபல தனிக்குகையும் விரிஞ்சன்மான் முதலோர்கள்
பரவுலக முதலனைத்தும் பரிவாகத் தனிலுளதாய்
நிரவியிலங் கொருமேரை யிலிங்கமென நிரைத்தனையே

இவை மூன்றுந் தாழிசை

வரைமுக டுறுமொரு மரமிற விரைகொள
நுரைதரு மலைபடு கலையின நொடிபட
நிரைநிரை படிபவர் நெடுவினை சிதறிடக்
கரைபுர டருநதி நரம்பெனக் கதுவினை

அலைகட லினையிடை யணிபெறச் சுலவிய
கலையுடை தரைமக ளுயிர்களுங் கணிசிறப்
புலைமன மொடுங்கினர் புகுபல குகையுள
மலையினை யெலும்பென மகிழ்வொடு மருவினை

மகரமொ டுறைசுற வளையின மலைதரப்
புகரினுங் கரையிடைப் பொலிகுமிழ் நிரைநிரை
பகலென வொளிபெறப் பவளமுந் திவளிட
நிகரறு கடலினை யுதிரமென் னிறுவினை

அளவறு கிளைபல வடர்தரப் படரிலை
யிளமலர் நறைதுணர் சொரிதர வெழிலுட
னுளமகிழ் வொடுசுக முதலிய பறவைகள்
வளமொடு வதிமர மொதியென மருவினை

இவை நான்கும் அராகம்

வாசவன் முதலியர் வளரெண் டிக்கினை
யோசைகொள் சுரோத்திர மெனவு ஞற்றினை

மண்ணினை விளக்கிமேல் வயங்கு செஞ்சுடர்
நண்ணிய கண்ணென நாளு நாட்டினை

இவை யீரடி யிரண்டம்போதரங்கம்.

வாக்கினை வைகரி முதல வாக்கினை
நோக்கருங் கேசமாய் விண்ணை நூக்கினை

தாக்கறும் பூமியைச் சரண மாக்கினை
தீக்கனல் ரசனையாய்ச் செறித்து நின்றனை

இவை யோரடி நான்கம்போதரங்கம்.

பிரவிருத்தி நிவிர்த்தியுநீ பேச்சிறந்தோர்க் கெளியையுநீ
பரவுதலோ டொடுங்குதனீ பகுதியொடு விகுதியுநீ

பாற்கடலிற் றுயின்றோனீ பதுமமலர் மிசையோனீ
யாற்கீழன் றமர்ந்தோனீ அகல்விசும்பி லூர்ந்தோனீ

இவை முச்சீரோரடி யெட்டம்போதரங்கம,

ஒன்றுநீ பலவுநீ யுறவுநீ பகையுநீ
நன்றுநீ தீதுநீ நயமுநீ பயமுநீ

கண்ணுநீ கருத்துநீ கருளுநீ யருளுநீ
மண்ணுநீ விண்ணுநீ மறமுநீ யறமுநீ

இவை யிருசீரோரடி பதினாறம்போதரங்கம்.

எனவாங்கு—தனிச்சொல்

ஒன்றிரண் டென்ன வுரைத்திடப் படாஅ
நின்றநின் னுண்மையை யன்றய னரியு
மேலகீ ழோடியு மேவிடா வகையாய்க்

கோல்விடு மழலின் கொழுந்தன பிழம்பா
யிலங்குநின் றன்மையைக் கலங்குவேற் குணர்த்தக்
கற்பனை கடந்தொளிர் பொற்பத
மேற்றுதுங் கூற்றுயிர் மாற்றுக ழலோனே. (௩)

இது ஆசிரியச் சுரிதகம்

ஆ. திருவிருத்தம்—௩௰௨க.

## அதிசயப் பத்து.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

பொய்யனேன் புலையேன் புணர்முலை யோனிப்
பூணினுர் புகழையே புகன்று
கையனேன் வாளாப் பிறப்பிடை சிக்கிக்
கண்கணீ ரரும்பிடக் கவலும்
வெய்யனே னுய்ய வீங்கிரு ளகற்றி
வெறுப்பொடு விருப்புமி லாத
துய்யநன் னிலையிற் றுளேந்திட வைத்த
வதிசயந் தொகுப்பரி தாமே. (க)

எத்தனை பிறப்போ வெண்ணிறு னறியே
னேழையேற் கிதுவரை யமைத்த
வத்தனே யின்னு மழிக்கிலை நின்னை
யன்றிமற் றியாரகற் றுவரென்
றித்தரை மீதிங் கிவ்வணங் கழிவேற்
கிரங்கிவன் பந்தத்தைத் தீர்த்தே
சித்துரு வாக்கி யெங்கணு நிறைத்த
வதிசயஞ் செப்பரி தாமே. (உ)

காதலான் மனது கணந்தொறு மெழுந்தே
காண்பன வனைத்தையும் விழைந்து

வேதனை பலவா றுறுத்தலி னின்பான்
மேவில னெனக்கவல் வேற்குச்
சாதலோ டுதித்த லற்றிட வருளாற்
றற்பர நிலையினைச் சாற்றிக்
கோதினைத் துடைத்தங் கொளிருணர் வளித்த
வதிசயங் கூறரி தாமே. (ங)

தய்யலர் மாயத் தடங்குழி வீழ்ந்துஞ்
சர்ப்பமாய்த் தடையையோர் வதுபோன்
மெய்யெனச் சகத்தை யுணர்ந்து மெய்ப்போத
விளக்கினை யிருளெனத் தேர்ந்துஞ்
சய்யெனத் திரிவேற் கிரங்கிவெந் நிரையந்
தனிற்புக றடுத்துசன் மயத்தைக்
கய்யி லாமலகக் கனியென வளித்த
வதிசயங் கரைவரி தாமே. (ச)

விண்ணவர் கோவாய் வேதத்துட் பொருளாய்
விமலமாய் விளங்கருள் வெளியாய்ப்
பண்ணவர் பரவும் பராபர வடிவாய்ப்
பரந்தொளிர் பரம்பர மூர்த்தி
புண்ணவாய் மலநீர் புறங்கசிந் தொழுகும்
பொய்யுடன் மெய்யெனப் புகலுந்
திண்ணனேன் றனக்குச் சிவபத மளித்த
வதிசயஞ் செப்பரி தாமே. (ரு)

விளக்கிடை வீழ்ந்து தன்னுயிர் மாய்க்கும்
விட்டில்போன் மாதரா ரின்பச்
சளக்கிடை வீழ்ந்து மெய்பொரு ளாவி
தன்னைவிட் டகல்வுற வுழன்றே
யிளக்கமில் லகமு மொழுக்கமின் னடையு
மியைந்துளே னென்றனக் கிரங்கித்
துளக்கமுள் ளறிவை யளித்துட னுண்ட
வதிசயஞ் சொல்வரி தாமே. (சு)

ஐந்தலை யரவின் கண்டம தறுக்கி
லடையவு மடிவன போல
விந்தமெய் யியக்கு மைம்பொறி மாயு
மிடரிடைப் படுத்தக மிறக்கி
லிந்துசே கரவென் றிரங்கிடு மெளியெற்
கெளிதிற்சின் மாத்திர சொருபந்
தந்தெனை யாண்டு துயரினைத் தடுத்த
வதிசயஞ் சாற்றுதற் கரிதே. (எ)

எல்லைய தின்றி யெழுந்தபாற் கடலே
யென்றுநீ யன்றுநா னுளனாற்
றொலலையோ சற்று மோய்ந்திலை யிறைவா
துண்ணென வருளினுண் டிலையேன்
மல்லையே புரியுஞ் சமனெனை மாய்ப்பன்
மாசிலா மணியென விரங்கி
யெல்லினும் பகலோ டாற்றெனை யாண்ட
வதிசய மியம்பரி தாமே. (அ)

நித்தனே நிமலா நினையலா துலகி
னிகழ்ந்திட வொருபொரு ளிலையாய்ச்
சுத்தனு யொளிருஞ் சோதியை யென்னுட்
டுளக்கிட வருளளிப் பாயேற்
பித்தனேன் புன்மை தவிர்ந்துன திருதாட்
பெட்புட னடைவனென் றிரங்கு
மத்தனேன் றன்னைக் கருணையி னுண்ட
வதிசயம் வகுப்பரி தாமே. (௯)

பய்யர வல்குற் பாவையர் மையற்
படுகடல் வீழ்ந்துநெஞ் சழிந்தேன்
செய்யனே யயன்மா றேடியுங் காணு
சிவப்பிர காசமெய்ச் சுடரே
யய்யனே யென்றிங் கரற்றிநை வேனை

யருளிஞ லினிதெடுத் தாண்ட
மெய்யனே யுன்னை யன்றிவே றென்றை
மேவொணு வகைபுரிந் தருளே. (ம)

முற்றிற்று.

அ திருவிருத்தம்—அடுராகக.

குணலை.

அடிநான்காய்த் தம்மிலொத்து வந்த இரட்டைக் குறள் வெண்செந்துறை

சுத்திர சிதம்போன் மேதினி ஈண்பதே
தூநெறி யென்றறைவாய் குணலை
துன்பமு மின்பமுந் தோன்றும னிற்பதே
சுத்தமா மென்றறைவாய் குணலை
பத்தியும் புத்தியு மில்லாத பாமரப்
பாழ்விட்டோ மென்றறைவாய் குணலை
பரமன்றி மற்றென்றைத் தேடினுந் தோன்றுத
பரமானே மென்றறைவாய் குணலை. (க)

ஆதியு மந்தமு மில்லா வமலனா
மாயினே மென்றறைவாய் குணலை
அறிவுரு வல்லா லகிலத் தொன்றையு
மறியோ மென்றறைவாய் குணலை
பேதித் தொளிர்பொரு ளெல்லாம் பிரமமாய்ப்
பெற்றே மென்றறைவாய் குணலை
பேச்சிறந் தநெறி யின்றிவ்வு லகினிற்
பிழைத்தோ மென்றறைவாய் குணலை. (உ)

ஆங்ச முதலிய வல்லலை முற்றினு
மழித்தோ மென்றறைவாம் குணலை
அயர்த லோடுன்ன லழித்த கண்டம
தாயினே மென்றறைவாய் குணலை

நாசமோ டுற்பத்தி யாம்வழி தூர்ந்துபுல்
நன்காய்த் றென்றறைவாய் குணலே
நண்பக லோடிர வற்றொளி றொன்றையுண்
ணட்டோ மென்றறைவாய் குணலே. (௩)

இறைய ருள்செய்ய வெழில டியருக்
கெழுந்த தென்றறைவாய் குணலே
யிந்தம றைப்பொரு ளுள்ளங் கொளக்கொள
விணங்கு மென்றறைவாய் குணலே
கறைவ டிவுறு முள்ளத்தை யுட்கொளக்
கண்டோ மென்றறைவாய் குணலே
காசினி சித்தன்றி மற்றொன் றாய்த் தோன்றிடக்
காணே மென்றறைவாய் குணலே. (௪)

உள்ளது மில்லது மோருமு ணர்வேயா
முற்றன மென்றறைவாய் குணலே
ஓசைப ரிசமு ருவஞ்சு வைகந்த
மொழிந்த தென்றறைவாய் குணலே
கொள்ளுத றள்ளுத லற்றொளிர் சிற்பரங்
கூடினே மென்றறைவாய் குணலே
கோதற்றுக் கூடத்த னச்சுக வேலே
குளித்தோ மென்றறைவாய் குணலே. (௫)

சாதல்பி றத்தலிற் சத்தாய்ப்பு ருடனைச்
சார்ந்தோ மென்றறைவாய் குணலே
தத்பத தோம்பத ரெண்டின்லக் கியார்த்தமு
தானுனே மென்றறைவாய் குணலே
வாதங்கள் பேசிம யங்கித்தி ரிந்தபல்
லேதிலோ மென்றறைவாய் குணலே
மாயைமு தலிய பற்றிவ ருத்துமிந்
நோயிலோ மென்றறைவாய் குணலே. (௬)

தேறுங் கரணஞ்சிற் றின்பஞ்சே ராதுசித்
சேர்ந்த தென்றறைவாய் குணலே

சித்சட மாகத்தெ ரிசகஞ் சித்தாகத்
தெளிந்த தென்றறைவாய் குணலை
நாறுமு டம்பினை நானெனல் விட்டுமெஞ்
ஞானமாய்ற் றென்றறைவாய் குணலை
நாயிற்க டையனு மென்னுளே நற்சிவ
நாட்டினு னென்றறைவாய் குணலை. (௭)

ஆண்பெண் ணலியெனும் பேதம றிவினி
லற்ற தென்றறைவாய் குணலை
ஆகாயா திபஞ்ச பூதமுஞ் சித்தி
லறிந்திலை யென்றறைவாய் குணலை
காண்பவன் காட்சிகாட் சிப்பொருண் மூன்றுமே
கடந்த தென்றறைவாய் குணலை
காரியங் காரண மென்றுபி ரித்தலுங்
கழன்ற தென்றறைவாய் குணலை. (௮)

கரந்த வற்றுள்ளுங் கரந்தி ருந்ததைக்
கண்டோ மென்றறைவாய் குணலை
கண்ணுக்குங் கண்மணி யாயொளிர் காந்தியே
காரண மென்றறைவாய் குணலை
நிரந்த ரச்சுக நீத்த மெங்கணு
நிறைந்த தென்றறைவாய் குணலை
நிலையில் லாமையு மஃதன்றி வேறாய்
நிகழ்ந்தில வென்றறைவாய் குணலை. (௯)

காமக் குரோதலோ பம்மத மச்சரங்
கழிந்த தென்றறைவாய் குணலை
காணும்பொ ருண்முற்றுஞ் சிற்கன மாகவே
கற்றோ மென்றறைவாய் குணலை
நாமரூ பங்களு மாறிச் சிவமாக
நண்ணின மென்றறைவாய் குணலை
நானென்னு மாங்காரம் விட்டுத்த னுண்மையை
நாட்டினே மென்றறைவாய் குணலை. (௰)

நித்தியா நித்திய வத்துவைத் தேர்தலே
நின்மல மென்றறைவாய் குணலே
நெஞ்சமு தற்பொறி நீத்துயர் சித்தையே
நேசித்தோ மென்றறைவாய் குணலே
சத்துவம் ராசதந் தாமத முக்குணந்
தடிந்த தென்றறைவாய் குணலே
சதுர்ம றைப்பொரு ளேவடி வாகிவந்
தாண்ட தென்றறைவாய் குணலே. (மக)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—சுடுாசஉ.

## பூணூல்.

இரட்டைக் குறள் வெண் செந்துறை.

பருத்தியாற் சமைக்கப்ப டாதநூ லெங்கணூல்
பாருள்ளோ ராலறி யாதநூ லெங்கணூல்
விருத்திக்க தீதமாய் விரியுநூ லெங்கணூல்
வேதாந்த வெளியினில் விளங்குநூ லெங்கணூல். (க)

திரிபுடி மூன்றையுந் திருத்துநூ லெங்கணூ
றேகாதி பந்தத்தைத் தீர்க்குநூ லெங்கணூல்
கரிவடி வாகவே யிலங்குநூ லெங்கணூல்
காட்சியா லளப்பரி தாகுநூ லெங்கணூல். (உ)

ஒருவரா னுரைக்கப்ப டாதநூ லெங்கணூ
லுத்தமர்க ளுள்ளத்தி லோருநூ லெங்கணூல்
கருவினை சற்றுமிலா தழிக்குநூ லெங்கணூல்
காயம் பொறிகளுக் ககப்படா தெங்கணூல். (ங)

பருமை சிறுமையிலா திலங்குநூ லெங்கணூல்
பாரெங்குந்தே டினுமகப் படாதநூ லெங்கணூல்
கருமைவெண் மைகளின்றி யிலங்குநூ லெங்கணூல்
கருதுவோர் கருத்துக்கெட் டாதநூ லெங்கணூல். (ச)

அண்டமணி யணியாய்க்கோத் திருக்குநூ லெங்கணூ
லாதியந்த நடுவிலா தமர்ந்தநூ லெங்கணூல்
கண்டமுற்று மகண்டமாக் கட்டுநூ லெங்கணூல்
காலதேய பரிச்சேதங் கடந்தநூ லெங்கணூல். (ரு)

கையாற் றிரிக்கப்ப டாதநூ லெங்கணூல்
காயத்திற் பூணப்ப டாதநூ லெங்கணூல்
பொய்யா முலகத்தைக் கடந்தநூ லெங்கணூல்
போதமு டையவர் பூணுநூ லெங்கணூல். (சு)

உடம்பின மூக்குப்ப டாதநூ லெங்கணூல்
லுற்றுற்றுக் கோத்ததெலா முருவுநூ லெங்கணூல்
விடம்புரை பந்தத்தை யிறுக்குநூ லெங்கணூல்
மெய்யறிவா னந்தமுளார் மேவுநூ லெங்கணூல். (எ)

சுத்தப்ப டிகம்போல் விளங்குநூ லெங்கணூல்
தூசினை யென்றுமு றூதநூ லெங்கணூல்
முத்தரா யுள்ளவர் பூணுநூ லெங்கணூல்
மோகமுள் ளவரென்று முன்னுநூ லெங்கணூல் (அ)

சாத்திரந் தேர்ந்தவர் சாராநூ லெங்கணூல்
தன்னையு ணர்ந்தவர் சாருநூ லெங்கணூல்
சூத்திரத் துள்ளே துலங்குநூ லெங்கணூல்
சொன்மன மெய்யுக் தொடாநூ லெங்கணூல் (கூ)

வேதமு பநிடதம் விளம்புநூ லெங்கணூல்
விண்ணவரும் பெறவரி தாகுநூ லெங்கணூல்
நாதனுஞ் சொக்கனுரை நல்குநூ லெங்கணூல்
ஞானமு டையவர்க ளுடுநூ லெங்கணூல். (ய)

முற்றிற்று

ஆ. திருவிருத்தம்—கூஙாகூஉ.

## பூசையியல்.

### கண்ணிகள்.

எம்மா னிருந்தபடி யெங்கெங் கிருந்தாலு
மம்மானைப் பூசிப்ப தருமறைநான் கின்வழக்கே. (க)

அறுபதோ டாறு றடுக்கடுக்காய்த் தோன்றிமறை
வுறுகருவி யெம்பரருக் கரியணையா யுஞற்றுதுமே. (உ)

அன்பினு லுள்ளுருகி யாறுவழு தெழுநீ
ரின்புருவா மீசற் கபிடேக மாட்டுதுமே. (ங)

ஈரிரண்டு சாதனமா மெனும்பொற் பணிகளையுஞ்
சீருறவெம் மண்ணறன் றேகத்தணி குதுமே. (௪)

ஞானவன லூடஞரை நாசமுறச் சுட்டெடுத்துச்
சூனமில்வி பூதிதனைச் சொருபர் கணிகுதுமே. (௫)

ஊழிதோ றுஞ்செய் யுயர்தவத்தின் வாசனையாம்
பாழிமிகுஞ் சந்தனத்தைப் பரனுக் கணிகுதுமே. (௬)

ஈசானிய முதலா யெட்டுத்திசை களையும்
தாசா யரனிடையிற் சுற்றி யணிகுதுமே (௭)

சற்குணங்கள் முற்றுமவன் சந்நிதியைத் தானவிளக்கப்
பொற்கம்ப தீபமதாய்ப் பொருத்தி விளக்குதுமே (௮)

கந்தரச ரூபமெல்லாங் கடவுள் சமூகத்தி
லுந்துபழந் தேங்காயா யுடைதது படைக்குதுமே (௯)

சந்தம் பலவாயுஞ் சார்ந்தசொற்க டானெருங்கத்
தந்தகவி முற்றுந் தாராகச் சூட்டுதுமே. (௰)

நிராசையொடு நற்குணங்க ளெய்பால்கற் கண்டுதேன்
விராவியட்ட பாவனநீ வேத்தியமா யூட்டுதுமே. (௰க)

மனம்புத்தி யாங்கார சித்தம் வகைவகையா
மனகர் தமக்கே யதிரசமா யாக்குதுமே. (௰உ)

பல்லூழி கன்மமெலாம் பலகார வர்க்கமதாய்
நல்லான்முன் றித்திக்க நன்ருய்ப் படைக்குதுமே. (௰௩)

அளவிறந்த சங்கற்ப மத்தனையு மாரமுதா
யுளமுவக்க வெம்மண்ண லுண்ணப் படைக்குதுமே (௰௪)

பஞ்சகோச முற்றும் பரமாத் துவிதற்கு
மெஞ்சலில்வென் னீராக விட்டுப் படைக்குதுமே. (௰௫)

ஆரோபந் திரோதைகளை யண்ணற் கடைசெய்து
சீரா யினிதுண்ணச் சேரப் படைக்குதுமே. (௰௬)

கற்றுக் கதறலெலாங் கைநெல்லிக் காயதனை
யுற்றபர மற்கூறு காயாய்ப்படைக்குதுமே. (௰எ)

ஆனந்த பாஷ்பமா மருநீரைக் கைகழுவ
தானந்த மில்லாத தத்துவற்கு வார்க்குதுமே. (௰அ)

தையலர்கள் போகத்தூள் சற்றிலா தேதூர்த்து
மெய்யநுபூ திப்பஞ் சணையை விரிக்குதுமே. (௰௯)

இம்மா னிலமுணரா விறையை யிதயத்துட்
சும்மா விருக்கச் சுகமோ டமர்த்துதுமே. (உ௰)

அண்டவிடி பேரிகையா மடிமின்ன லாலாத்தி
தண்டங் கெடுபிடியாய்த் தற்பரற்குச் சாற்றுதுமே. (உக)

நான்மறையி னேசையெலா நாலுவகை வாத்தியமாய்
ஆன்மநிலை யாவிளங்க லடைக்காயா யாக்குதுமே. (உஉ)

இந்தவித மேபரனை யிதயத்தி லன்பாகச்
சந்ததம் பூசைசெயத் தற்பதம் வந்தெய்துறுமே. (உ௩)

முற்றிற்று.

௬௨. திருவிருத்தம்—சுருளாஎடு,

# அன்னைப்பத்து.

### கலிவிருத்தம்,

சித்தினி டத்திற் செகமுயிர் பரமென்னை
மித்தைய தென்ற னென்னே யென்னு
மித்தையு மெய்ப்பர மன்றிமற் றென்றாய்ச்
சித்தியா தென்ற னன்னே யென்னும். (க)

அருமறை யத்தனு ரம்பரத் துட்புகத்
திருவருள் செய்ததா லன்னே யென்னுந்
திருவருள் செப்பிற் றிருக்கணுற் பார்ப்பதே
கருவுறல் போக்குமென் றன்னே யென்னும் (உ)

நாடற் கரியராய் நானிலம் விளக்கினுங்
கூடற் கரியர்கா ணன்னே யென்னுங்
கூடற் கரிதாய கொள்கைய ராயினும்
வீடாய் விளங்குவ ரன்னே யென்னும் (ஙூ)

சூழு மறியாமை சுட்டுதே தூரத்திநின்
றாளு மறவன்கா ணன்னெ யென்னு
மாளு மறிவனு யாண்டவ னுயினும்
பாழை யறியான்கா ணன்னே யென்னும் (ச

அஞ்ஞானம் பொக்க வறிவா மெனநீக்கி
மெஞ்ஞானம் பூட்டினு ரன்னே யென்னும்
மெஞ்ஞானத் தாலே விழித்த விமைத்தலிலார்க்
கிஞ்ஞாலந் தோன்றிடா தன்னே யென்னும் (ரு

பூமியீ ரேழிலும் பூரண மெய்தினோர்
காமியங் காண்பரோ வன்னே யென்னுங்
காமிய சஞ்சிதங் கன்மிக டங்களைச்
சேமித்தி ருக்குமா லன்னே யென்னும். (சு

சாத லுதித்தலில் சத்தாம் புருடனைக்
காதலிற் றந்தாரென் றன்னெ யென்னுங்
காதன் முதலிய கருத்தைக் கதுவாமற்
சூதிற் றொலைத்தாரென் றன்னே யென்னும். (௭)

யானென தென்னுஞ் செருக்கறுத் தானபின்
றானவ னாக்கினு னன்னே யென்னுந்
தானவ னாகச் சகமுழு தாயினு
ரானவா றுக்கவெளி தன்னே யென்னும். (அ)

வீயுமு டம்பினின் மெய்ப்பரங் கண்டவர்
தோயுவார் சிற்சுக மன்னே யென்னுந்
தோயுவார் பந்தத் துண்மாசு மீக்கொள
மாயுவார் தோன்றற் கன்னே யென்னுந், (௯)

நாலாறு தத்துவ நாடாதி றுத்தவர்
மாலாறி னார்முற்று மன்னே யென்னு
மாலாதி விண்ணவர் வந்தித் திருக்கவு
மாலாக்கி னுன்சித்தி லன்னே யென்னும். (௰)

முற்றிற்று.

அ. திருவிருத்தம். ௬௬௱அ௰௫.

## அறுதியுரைத்தல்.

### கலிவிருத்தம்.

நாறுமுட லென்னதென நண்ணினபி மானம்
வீறுநம னென்னதென மெய்கெடவு தைத்தே
சீறுநர கத்திடைசெ லுத்துவனி தோர்ந்தே
யீறில்பர மாய்விகழ வென்றுமுயல் வாயே. (௧)

ஆதிமறை தேடரிய வண்ணலுரு வாயி
னேதிசெய வென்னுளது நின்றபடி நீற்கிற்

பிறியுள தோபுகலும் பேதமுண தோயார்
நீதுகல மும்முளதோ தேர்ந்தறிதி நீயே. (௨)

காதலியை நீகதுவிக் கண்ணுதன் மறந்தால்
வேதனைசெய் சண்டனுனை யாவலின் மிகுத்தே
தூதரைவி டுத்துகவி துன்னுநர கத்தே
கேதமுற மென்றலைகை கீழுறவி ருப்பான். (௩)

மாடமனை கூடமதில் வாஞ்சையினி னின்று
னீடுலகி லியாரடைவர் நீயடையுங் கேடே
நாடவரி தாயசிவன் றாள்பரவி னுளும்
பீடுடைய நல்லகதி பெட்பினடை வாயே. (௪)

பொன்னினை நினைந்துசில போதினை யகன்றாய்
மின்னினை நினைந்துடலம் வெம்பமெலி வுற்றா
யென்னினைவை யெய்தினுமி டைஞ்சல்படு வாயாற்
றன்னிலையி லேநிறுவல் சற்றும்வழு வேலே. (௫)

கோலமுள மானிடர்கோல் கொண்டுகிழ முற்றார்
வேல்விழிய ராங்தையென மெய்திரைய டைந்தார்
ஞாலமுழு தாண்டவரு நல்லறிஞ ரானார்
பாலசசி சூடரனைப் பற்றுதல்வி டேலே. (௬)

நேசமுற விவ்வுடலை நீர்கொடுவி ளக்கி
வாசமுறு சந்தமொடு மாமலர்கள் சூடித்
தேசுபெற வைக்கினுஞ்சின் னேரமதி னுறும்
பாசமற மெய்நெறித ரும்பரம்வி டேலே. (௭)

குன்றுசிலை யாயெடுத்த கோனடிநி னைந்தே
நின்றுமுரு காதவிரு ணேயர்களை பற்றி
வன்றின்மறல் சென்றுருக்கின் வன்மனம ரக்கா
யன்றுமுரு கிர்கொலோவ றைந்திடுமி னேற்கே. (௮)

சுற்றமனை மக்களிவர் சூழ்ந்திடவும் வாண

ரிற்றபொழு தேமபடர் சூழ்வரேம ரென்றே
நற்றவம தென்றெழுத்தைந் துள்ளினையு வாயே
லெற்றுநதி சூடிறையெ ழிற்கழல்சேர் வாயே. (௯)

வேசையர்கண் மீதிலுயி ருள்ளளவும் விழ்ந்தே
யாசைசெய்த டைந்ததனு லானபுகழ் சேர்மோ
காசொடுட லாவிகுரு கான்மலரில் வைத்தான்
மாசினைய கன்றுபர ஞானமடை வாயே. (௰)

வேதமுட னாகமபு ராணமிதி காச
மோதுநெறி நிற்கினுன துற்பவமு மாறு
மாதுமனை மக்களென வாஞ்சைநெறி நின்று
லோதுபிற விக்கடலின் மூழ்குவையென் றும்மே. (௧௧)

வேதமுள விமலனுள மெய்யுளது கந்தப்
போதுளது போதமுள புண்ணியர்க ளுளராற்
றீதகற லரிதன்று தினமவஞ் செலாதே
யோதலறி தல்பணிதல் சாத்தலுன லுழையே. (௧௨)

தந்தம்வினை தாம்நுகரா தியாவர்நுகர் வாரென்
றந்தமறை சொற்றவுரை யாய்ந்துமறி யாயோ
வெந்தைகழ லெப்பொழுது மிச்சையொடு பேணின்
முந்தைவினை யத்தனையு நாசமுறு முன்னே. (௧௩)

வந்தவுடன் முற்றுமென தென்னுமதி செய்து
புந்தனைய றுத்தளையோ பண்ணுவது கேளாய்
சிந்தனைய றுத்துயர்சி வத்தினைய கத்தே
வந்தனைசெய் தாலதுவ ழித்துணையு மாமே. (௧௪)

எடுத்தசன னங்கடொறு மீட்டுபொருள் கூட்டி
னடுத்தவழ கேசனும தற்குரிக ராகான்
றொடுத்தவது மித்துணைய தொன்றுமறி யாயால்
விடுத்தினிப ரன்கழலை மேவல் கடன் றுனே. (௧௫)

பிறவிதொறும் வேட்டமனை பெட்புடன்க ளிக்கி

னிறைதுழவ மாலேயணி கண்ணனிக ரன்று
லுறைமனமி றந்தமுத லுள்ளிகசை யுற்றுற்
கறையறுபே ரின்பமுடன் கையில்வருங் காணே. (௧௬)

ஊழிதொறு முற்றவனை யப்பனையு ணர்த்தி
ஞழிசிறி தாகியவர் காத்தலில ராவார்
பாழினிலே காதுதினம் பாதமலர் பற்றிற்
சூழ்வினைக டீருமிரு துன்பிறுமி தோரே. (௧௭)

மத்தமுறு பித்தனுக்கு வன்றுயர்தோன் றுப்போற்
சித்தமருள் கொண்டதனுற் றீகவிவோர் கில்லாய்
கத்தனடி சேர்ந்தவர்கள் காற்கடையி னின்றுற்
பெத்தமொடு முற்றதுயர்ப் பின்னலறி வாயே. (௧௮)

மாதமொரு காதவழி செல்புரவி மான
நாதனையு நாளடைவி னுடில்பய னென்னே
சாதலுள தென்பதற்குச் சாக்ஷியும்வேண் டும்மோ
பாதமலர்ப் போதினையுட் காதலொடுபெற்றே. (௧௯)

நீறுபுனைந் தக்கமணி நீள்சிரம ணிந்தே
யாறுமதி சூடிறைவ னைத்தெழுத்த கத்தே
கூறுவதோ ராயிரத்தெண் கூட்டியுரு வேற்றிற்
றேறுகதி யக்கணமே சேருவது மெய்யே. (௨௰)

மக்கண்மனை யொக்கலணி கக்கலென மானித்
தொக்கினுழை சிக்கறிவை யக்கணம ளிக்குஞ்
சொக்கனடி புக்கியுள நெக்குருகிச் சொக்கின்
மிக்ககதி கைக்குள்வருந் துக்கமுமே வாதே. (௨௧)

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம். ௬௬௭௬.



எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

வானகமு மண்ணகமும் வளைந்தொருமித் தானு
  மாலயன்வ லாரியிவர் மருவவுணி னுலு
மூனகமே னன்றி யொருவருண ராதா
  யோங்குமலைக் குறத்திநா னுற்றகுறி சொல்வேன்
கானகமும் பதினன்கு காசினியு நானே
  கடலாறு சத்தநதி மற்றுளது நானே
மோனமுட னுற்றிருந்து சலியாது கேளாய்
  முக்காலந் தேர்ந்துகுறி மொழிகுவனென் னம்மே. (க)

இந்திரிய மீரைந்தாய் விளங்குவது நானே
  யிதின்விடயம் பத்துமா யிலங்குவது நானே
சிந்தைமதி யாங்காரஞ் சித்தமது நானே
  செப்புமிவற் றின்றொழில்கள் சேரவுமே நானே
யெந்தமலைக் குறத்திகளு மென்னையலா வில்லை
  யிரண்டாகக் கொள்ளினீ யெண்ணியது மெய்தாய்
முந்தைவினை நீங்கிவிடு முட்டின்றி வினவாய்
  முக்காலந் தேர்ந்துகுறி மொழிகுவனென் னம்மே. (உ)

தெள்ளுகுறி யுள்ளபடி செப்புகிறேன் கேளாய்
  செகத்துளச ராசரங்கள் செய்பவனு நானே
நள்ளியிவற் றுளந்தோறு மங்கங்கி ருந்தே
  நன்றாக நாடோறுங் காப்பவனு நானே
துள்ளியவை மாய்வடையத் தொலைப்பவனு நானே
  சொல்லுமே காதசவா னந்தங்களு மியானே
மொள்ளுதலி லாச்சுகத்தின் மூழ்கியிது கேட்பாய்
  முக்காலந் தேர்ந்துகுறி மொழிகுவனென் னம்மே. (ங)

பார்தொடுத்து விண்ணளவும் பறப்பனவு மியானே
  பாய்கின்ற மிருகமுத லூர்வனவு மியானே
நீர்வேலி யாய்நிற்கு மெழுகடலு மியானே
  நிலவுமதி கதிர்கோளு ளரவுகளு மியானே

பூராய மாயெடுத்துப் புகல்வதற்கு மடங்காப்
　　பொய்யுலகை மெய்யென்னிற் புல்லும்வெய்ய பந்த
யோர்சீரு முறிந்ததெனப் பிரிந்தென்னுரை கேட்கின்
　　முக்காலந் தேர்ந்துகுறி மொழிகுவனென் னம்மே. (ச)

இம்மானி லத்துள்ள விப்பிரரு மியானே
　　யிறையவரும் வணிகரொடு காராளர் யானே
வெம்மாயஞ் செய்தொழுகும் வேல்விழியு மியானே
　　மீனுமை சுறவொடுநீர் வாழ்வனவு மியானே
யெம்மாத வருங்கேட்ப ரெனதுகுறி தன்னை
　　யிதற்குமுனங் கேட்டவரு மிறப்பிறப்பைக் கடந்தா
மும்மாது மென்போலக் குறியுரையார் சொன்னேன்
　　முக்காலந் தேர்ந்துகுறி மொழிகுவனென் னம்மே. (௫)

இளமையினிற் குறிகேட்கி னெல்லாம்வந் தெய்து
　　மெய்ப்பினிற் கேட்கினங் கென்னகல னுண்டாம்
வளமைபெறு காயத்தை நானென்ன லறுத்தான்
　　மாண்டுபிற வாதவகை வந்துதிக்கும் பரரா
யுளங்கழுவிப் பூரணத்தி லுறங்கும்வகை கற்று
　　லுயர்விவே கக்குழவி யுன்னகத்தி லுதிக்கு
முளவனைய மலமருந்தி நாள்கள்கழி யாமே
　　முக்காலந் தேர்ந்துகுறி மொழிவனடி யம்மே. (௬)

சும்மாவி ருக்கின்ற தொழில்கற்க வேண்டுஞ்
　　சுயஞ்சோதி தானாகத் துலங்கும்வழி தேர்ந்தே
தம்மாவி யன்றளவு சாதிக்க வேண்டுந்
　　தக்ககுறி தக்கபடி சாற்றுகிறேன் கேளாய்
தம்மாது லன்பூமி தனமென்ன வுன்னிற்
　　சடமான பந்தமுத றன்னையக லாதே
மும்மானி லந்தாழ்ந்து கேட்பினுமு ரைக்கேன்
　　முக்காலந் தேர்ந்துகுறி மொழிவனடி யம்மே. (௭)

ஐந்துகோ சங்கள்கடந் தப்பாலி லங்கு
மரியபொரு டெரியவரு மறிவுருவாய் நிற்பாய்
சிந்தையிறக் கக்கற்கி னறிவுருவக் தெய்துந்
தேகத்தி லெனதென்ற லெம்மட்டுள தம்மட்
டுந்துமியா னெனலுண்டு மொழிக்கினவை முற்று
முயரேகாந் தத்துறையு முன்னையுணர் வாயான்
முந்தைவினை கெட்டுவிடு முத்தியுமி தாகு
முக்காலந் தேர்ந்துகுறி மொழிவனடி யம்மே. (அ)

உயர்பொருளின் மேலான வுயர்பொருளு மியானே
யுரைக்குமும் மூர்த்திகளி லுருத்திர னு மியானே
வியன்றிக்குப் பாலகரில் விண்ணவர்கோ னியானே
வேதத்திற் சாமமியான் விண்மணியிற் கதிரியான்
மயலதனின் மாயையான் மாக்களுக்குட் டேனு
மாசுணத்திற் சேடனுன் மானிலத்தின் றோற்ற
முயற்சிருக்க மெனக்கொள்ளின் மூடாது பந்த
முக்காலந் தேர்ந்துகுறி மொழிவனடி யம்மே (க)

ஆதிநடு வந்தமிலா தகண்டபர மான
வரியபொரு ளடைகுவா யகமடங்கி நின்று
னேதிசெய்து பார்க்கினது சேடித்து நிற்கு
நிச்சயமா யன்னிலையி னின்றுசுகஞ் சேர்வாய்
பாதிமதி தரித்தவனைப் பாதிமதி யாலே
பற்றிடினு மெட்டிடான் பகர்வதினு லென்னே
மோதியலை வீசினும்பேய்த் தேரினனி ருண்டோ
முக்காலந் தேர்ந்துகுறி மொழிவனடி யம்மே (ய)

சொற்கடங்காச் சூட்சமெலாந் தொன்றுமென்றன் குறிப்பிற்
றொன்மையர்க ளறிவார்க ளிதன்பெருமை தன்னை
மறகடம்போற் பற்றினர்க்குப் பலம்வந்து மருவு
மனத்தின்வழி சென்றவர்க்கு வாய்ப்பதுமொன் றிலையாற்
றற்பரமே தானென்று சந்ததமு நின்றுற்

சனியாத வொடுங்காத சாயுச்சிய மடைவாய்
முற்பவவா சனையிலதாற் பிற்பவமு மில்லை
முக்காலந் தேர்ந்துகுறி மொழிவனடி யம்மே. (௰க)

முற்றிற்று.

ஆ திருவிருத்தம். சூசுராகள.

பண்டிதர்

அறுசீர்க்கழிநெடிலடி இரட்டையாசிரியவிருத்தம்.

ஆக மெடுத்தறி னந்தொடுத் துட்க
ணடைந்திடு மாசாலே
யறிவெனுந் தன்னைய றிந்திடல் விட்டய
லானவை யத்தனையு
மோகம தாலென தியானென வுன்னிமு
யங்குநோ யன்றியுமே
முத்திநெ றிப்புக ழுதறி வோர்துதி
மொய்ம்மறை கேளாதே
யூகமோ டெண்செவி தன்னைய டைத்திடை
யூறுசெய் நோயாலே
யோதுசு ரம்பல கேட்டுள காலமு
மோடின தெந்தாயே
வேகமு டன்றொலைத் தின்சுக மீயுநின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வேண்டினன் பண்டிதரே. (க)

வேதாந் தோதுறு மந்நெறி மேவு
விடாதிரு நாண்முட்டும்
வீக்குறு வாத மெனும்பிணி பற்றிமெய்
மேவுற வொன்றலவே.
மாதரை யன்றியு மட்சிலை கற்சிலை

மையனோய் மேவிடவே
மங்கைய ரென்றும திந்துளம் பொங்கி
மயங்கிவ ருந்தினனே
தீதடை பல்வழி யெங்கணுஞ் சென்று
திகைத்துவி ழுந்தனனே
சோகங் கார மெலும்பிணி யின்னமுந்
தீர்ந்தில தெந்தாயே
வேதனை நீத்திட வின்சுக மீயுகின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (உ)

நாமமு ரைத்திடு நாவைய டக்கிந
லித்திடு நோயாலே
நானில மீதுள கான்பல பாடியென்
னுள்கள்க ழிந்தனவே
யோமனி றுப்பன யன்பனைப் பானென
லென்பது ணர்த்தறிவை
யிர்த்திருள் பற்றி யழித்தது மேற்படர்
வெய்தின தென்னையனே
நேமமு டன்றவ மாதிபு ரிந்திட
நெஞ்சகி னைத்திடினே
நேர்பகை யாய்மடி துஞ்சல டுத்து
நிகழ்த்த றடுத்தனவே
வீமமு தற்றொலைத் தின்சுக மீயுகின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (௩)

துப்பமீ ராடிநற் பூக்க டொடுத்தரன்
றொல்கழல் சாத்துமிரு
தோள்க ணிணைந்த கரத்தைமு டக்கிவெண்

துன்பளி நோயாலே
வையமி சைப்பல சென்மமெ டுத்தவண்
மாண்டது மோரீரோ
மறவிய டுத்துயர் வோர்க ளறைந்திடு
மாறுக ளொன்றினிலும்
பையவெ னுஞ்செல விற்றுட லோடு
படுத்தின வெந்தாயே
பகருதற் கித்துய ரொன்றல வென்பதுன்
பாதமு மோராதோ
வெய்யதுன் பிற்றிட வின்சுக மீயுநின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (௪)

ஆவர ணம்மெனு மோர்குண மீதெழுந்
தறிவைச் சிறிதெனுமே
யறியவொண் ணாதுக ருத்தவி ருட்டி
லழுத்தின தெந்தாயே
தாவறு மற்றொரு பேதகு ணம்மெனைச்
சார்ந்ததை வெவ்வேறாந்
தாரணி சீவஈ ரம்பல பேத
சராசர மாகிறைக்கத்
தூவறு புன்மதி பற்றியென் னுட்க
டொலைந்தது மோராயோ
சோகம யின்றுப வத்திலு ழன்றதுந்
தோன்றலை யோபரமா
மேவுறு துன்பழித் தின்சுக மீயுநின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (௫)

ஆசையெ னும்மொரு நோயடைந் திவ்வுல
கத்துள வத்தமெலா

மரியன வெளியன வென்றுண ராமல
கத்தின்மி குத்தவலாய்
நீசர்க ளாயினும் வாசவ னுய்க்கொளி
தாசனெ னப்பணிந்தே
நெடிதுவ ருந்திய டைந்தன விட்டுநே
ராதன மேற்கவலாய்ப்
போசனந் துஞ்ச றுறந்துவ றழ்ந்து
புலர்ந்தன னெந்தாயே
புன்மைய னுயினு மெண்மைகொ ளாதுளம்
பூண்டுக டைக்கணினல்
வீசுது யர்க்கட விற்றிட வின்சுக
மீயருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (௬)

ஐந்தலை மாசுண மாம்புலன் சீறி
யடைந்து கடித்ததனு
லாம்விட மேறிம யங்கிய ழிந்துணர்
வற்றகி லத்தினிலே
சிந்தனை யாயுரு நாமமி வற்றினைச்
சித்தென வேதெளிந்தே
தேசவிர் தன்னைம றந்துதி னம்படு
தீங்குக ளோராயோ
கொந்தலர் மாதர்க டாதர்க ளேதர்கள்
கூடிவ ளைந்தெனையே
கூறுயி ருஞ்சம னென்னந கித்தனர்
கூறிட நாவுளதோ
வெந்துய ரற்றிட வின்சுக மீயுகின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (௭)

ஆயசு கத்துவே டம்மெனு நோயென
    தாக்கையை யண்ணியதா
லாசறு பேரா னந்தம் வெறுத்தய
    லாஞ்சுக மத்தனையு
நேயமு டன்றுளைந் தாடிநெ டும்பக
    னிங்கவ ருந்தினனே
நீக்கரி தாம்பவ நோயெனு ணின்று
    நெடுந்துய ரீந்தனவே
தாயனை யாயிவை சாரினிவ் வேழையன்
    றுங்குவ னேபுகலாய்
தமியன டைந்தவென் னேய்பல வாயினுந்
    தன்முறு வற்கெதிரோ
வேய்த ரவிர்த்த லுறுஞ்சுக மீயுநின்
    மெய்யருண் மாத்திரையை
வேலைகொ றும்மளித் துள்ளமோய் தள்ளவும்
    விங்கினன் பண்டிதனே. (௮)

மத்தமு றும்பொரு ளிச்சம டர்த்துபர்
    வாளறி வற்றுதனை
மாலில மெழுத னுதமவ ரைத்தெரி
    தத்துவ மத்தனையுந்
சித்தென வுள்ளிம யங்கி யிலைந்துயர்
    தீங்கினை யெய்தினனே
சேற்றும மைம்பொறி மீதடர்ந் தேகமாஞ்
    சித்துண ராவகையாய்
பெத்தம ளித்திட வன்னத னுல்வரு
    பின்னம தற்றுணர்ந்தே
பேசவ டங்குமோ யானடை புன்றுயர்
    பெம்மவ ரிந்திலையே
வித்தகர் நத்திட வின்சுக மீயுமின்
    மெய்யருண் மாத்திரையை

வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (௬)

உலகமோ டெல்பல நூல்களி லுற்றிடும்
வாசனை யொன்றியெனை
யொவ்வொரு சென்னமும் பற்றிய லைத்தின
லூட்டிய தோன்றலவே
கலக மிடும்விழி யார்மயல் கொண்டு
கணந்தொறு மாகுலமாய்க்
காயம னற்படு வெண்ணெயெ னக்கரை
வுற்றது மோராயோ
யலகிலின் னேய்க ளடைந்திடி னேழைய
னுற்றுவ னேழ்கலா
யன்பிலி யாயினுந் தன்சிசு வென்றனை
யாதரித் தல்கடனே
விலகற வில்லுமி ழின்பம ளிக்குமின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (௭)

காயமெ டுப்பது நோயடை தற்கெனுங்
கட்டினை யோராயோ
கண்ணிலி தன்னையுங் காசினி கைகொடுத்
தேற்றுதல் காணாயோ
தீயவ னைமிகத் தூயவ னாக்குத
றேர்ந்தவர் செய்கையன்றோ
தீர்வரு நோயினை நீக்கன்ம ருத்துவர்
திரமென் றோராயே
தூயசின் மாத்திர மாயிலங் காதியிற்
றுன்னின வல்லவையே
துவிதம டைந்ததி னந்தொடுத் தண்டின
துன்பத மோராதோ

மேயவின் னேய்கெடுத் தின்பம ளிக்குமின்
மெய்யருண் மாத்திரையை
வேளைதொ றும்மளித் துள்ளநோய் தள்ளவும்
வீங்கினன் பண்டிதரே. (கக)

ஆ. திருவிருத்தம்—௩௯௨௮.

## வற்புறுத்தல்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஈத னைத்துமுயர் பரம தாகநினு
ளிலக லாலெதனை யிகழுவாய்
காத லோடெதனைக் கொள்ளு வாயுயர்ந்த
காட்சி யாரிதனை யோர்வரே
யோத லுற்றபர முத்த ரல்லவர்க
ளுலகி லியான்பிறரென் றுன்னியே
சாத லோடுபிறப் பெய்தி யின்னலுவர்
தாழ்ந்து நிற்பரதை யாழ்ந்துபார் (க)

வாத னைத்தொடர்தெ றிக்கு நாளளவு
மானி லத்திறனை வந்தடை
யாத னைக்கடல னைத்து மின்பமென
வாத ரித்துமர ணைய்திமேற்
றீதி னைத்தருகு மறலி செய்யுமின
றேக்கி மீண்டுமந்த நெறியதா
யாத லன்றிபிறி தடைந்த தென்னைபுக
லாய்ந்து வாழ்வையுள நாளிலே. (உ)

வீட டைந்தவர்கள் விண்ட வாய்மைகளை
மெய்ய தென்றுபுந்தி செய்யினன்
காட டைதலறுங் கன்ம பந்தம்விடுங்
கறையில் ஞானமுழ்வர் தெய்துமே

கூட டைவதிலே கோச மைந்தகனிற்
கூற்ற மெய்தலிலே தேற்றமே
தோட டர்ந்தகுழன் மங்கை பங்கனரு
டுன்னி னிற்பைபுகழ் மின்னவே (௩)

மான முள்ளவர்கண் மோன நன்னிலையின்
மருவி நின்றுசுக முறுவரா
லான தன்மையத றிந்துன் ளுள்களைய
வத்தி லேகழிய நத்தியே
யூன மெய்துமுட றன்னை யானெனவு
மூன்று மாய்பவர்க ணட்பினைத்
தான டைந்தனைய தால ருந்துயர்கள்
சார்த றிண்ணமிதை யோர்வையே (௪)

உளதெ னும்பொருளி னிலதெ னும்பொருளி
னுருவ மாயெவையி லங்கிடு
மளவி லாதசிவ மாகு மப்பொருளி
லாசை வைத்திடின்மா சிற்றுமேல்
வளமை துன்னுமறி வாகி யெப்பொழுது
மாசு கக்கடலின் மூழ்கியே
களமெ னுந்துயர கன்று முத்திபுகல்
கைவந் தெய்துமிது மெய்மையே. (௫)

விடவெ யிற்றரவு சடம கற்றலென
மேதை யுள்ளவர்கால் வேதமே
திடமு றுத்துபொரு டன்னி லொன்றியுட
றெரிகி லாதுதிரி வார்களே
நடலை வாழ்விதனை யோர்ந்து மன்னதனி
னுடி நாளுமிக வாடியே
கெடல் விடுத்தினிய சித்தின் மாய்தல்வெகு
கீர்த்தி யென்றறைவ னுத்தனே. (௬)

அறிவி னைக்கொடுத னக்க பின்னமென

யாவ னோர்வனன் றேவனே
முறிவி னைக்கொடுத னக்கு வேறெனவே
மூன்னு வோன்பசுவ தாவனு
னெறியி னுற்கரண மிற்ற காலையது
தானெ னுங்கினைவு நின்றதோ
குறியி னுலுணரின் மௌன மன்றியொரு
கொள்கை யென்னுளது வில்லையே. (எ)

கனவிற் றோன்றுமொரு மன்னன் செய்க்குலகிற்
காணு நீதிகளைக் கரைவபோ
னவிற் றோன்றுமிக பரமவாவு முயிர்
நல்ன நாலுவகை நீதியை
யனகன் வாய்மறைய றைந்த தாயினும
தன்க ருத்திவண மல்லவே
சனக ஞதியர்க ணின்ற வுண்மைநிலை
தனைய டைந்தநிலை புனைவையே. (அ)

மடுவிற் பற்றிடுமோ ருண்ணி யுண்ணுதிர
மன்னும் புன்ருசிகொண் டினியபா
லடுத லின்சுவையு மவண மாகுமென
லன்மை போல்விவித பக்குவர்
தொடுபல் பேதநெறி பற்றிமறை பலவாய்ச்
சொற்ற போதினுமுத் தமமதா
நடையி னர்க்குபர வுண்மை வத்துவினி
லக்கி யந்தெளிய நவிலுமே (கூ)

கூறும் வத்துவொரு குணமி லாமையினுற்
குறியு மன்மைபதாய்க் குலவிடுங்
தேறின் முப்புடியு மன்மையா லுலக
சீவ ரோபேரந் தெரியுமோ
மாறு செய்மயல றுத்த வர்குழுவில்
வாய்மெய் யுள்ளமொரு மித்துமே

யிறில் பத்திசெயி னியாவும் வத்துவதா
யிலங்கு முண்மையெந்த நாளுமே. (ய)

முத்தர் தங்களது பூதி யின்வலியான்
மோன வத்துவில்வி ழிப்பரே
பெத்தர் தங்களது பூதி யான்முழுதும்
பேத மாஞ்சகமாய்ப் பார்ப்பரே
உத்த மக்குரவ னுஞ்சொக் கலிங்கமகிழ்ந்
துரைத்த வொன்றையுமே யுன்னிநற்
சித்த சித்தெனல்போ யுண்மை யானநிலை
சேர்வை நாளுமிது திண்ணமே. (யக)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—தூசுஙுகூ.

## பிரார்த்தனைப்பத்து.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வேதப் பரியாய் மெய்த்தவத்தோர்
மேவற் குரியாய் வெண்சுடராஞ்
சீதப் பிறையாய் செய்தவங்கள்
சிறிது மில்லே னுய்வகையாய்ப்
போதக் கடலை வளிதளித்துப்
பொல்லா வினையைப் போக்கடித்துப்
பாத மலரைச் சிரஞ்சேர்க்கப்
பரமா வருளைப் பதிப்பதென்றே. (க)

என்று மிருப்பே னென்றிருந்தே
னிறப்பே னென்னு நினைவில்லேன்
வன்றிண் மறல்வை யகமனைத்து
மாய்த்தல் கண்டு மருளாலே
பொன்று முடலைப் போற்றிசெய்தேன்

புன்மை சிறிதோ புகலற்கே
குன்றம் வில்லாய்த் தரித்தோயென்
குறைக டவிர்த்த னின்மேற்றே. (உ)

மேல்கீ ழுலகம் பலவாருய்
விரும்பித் துதிக்கி னவர்க்கவனந்
தாழ்வி லுருவா யுயர்காட்சி
தன்னை யளித்துத் தற்காப்போ
யோய்வி லாம லுழலுமன
மொன்றை யடக்கி யுணர்புகுத்துன்
கால்கட் கலந்தேன் றந்தருளிக்
காத்தல் கடனே கடையனேயே (௩)

கடைய னுகு மொருவனைத்தற்
காத்த றீர மெனவுலக
மடைய வறைத லோராயோ
வத்தா சிறியே னறைவதென்னே
படைவேற் கண்ணுர் நிலம்பொன்னிற்
பற்று மாசை யறவோட்டித்
தடையற் றிலகும் பரசுகத்தைத்
தருவ தென்றே தமியேற்கே. (௪)

கேடில் செல்வ மடைந்தவரைக்
கிட்டி யொன்றுங் கேட்டுமிரேன்
பீடில் புன்கா வியமுணர்ந்தே
பெருநாள் கழித்தேன் பெம்மானே
யீடில் பரமே யிதயத்து
ளிருந்து மறியா தேங்குகின்றே
னுடி யிரண்டற் றுளிர்நம்பா
நளிர்மா மலர்த்தா ணல்காயே. (௫)

கரத்தி லொழுகு நீரதுபோல்
வாணுள் கழிதல் காணுயோ

திரத்த மழைநாட் சுரைக்கொடிபோற்
செறியு மாலைத் தெரியாயோ
திரைத்த னரைத்த லாதியவா
லழுகுந் தேய்த தெளியாயோ
சிரத்திற் கடுக்கை தரித்தோயே
சிறியேற் காத்தல் கடனினதே. (௬)

தனது சங்கற் பத்தாலே
தரணி தோன்ற வதைமெய்யாய்த்
தினமு நோக்கி மகிழ்வாகத்
தேய்த்தே னெனது நாளெல்லாம்
பனகப் பணியும் புலியதளும்
பரிசிற் றரிபபா யீதனைத்துங்
கனவாய்க் கண்டுன் கழல்காணக்
காட்டாய் கருணைக் கடலமுதே. (௭)

இராக முதல்வெவ் விடவரவ
மிதயப் புற்றிற் சஞ்சரித்தால்
விராவ லரிதே சற்சனர்கள்
விமலா வுய்யு நெறிகாணே
னிராம யந்தா னெனவுணர்த்து
நிமல ஞான மளித்தென்னைப்
பராவு மகங்கா ரங்கெடுத்துப்
பணிப்பாய் பாதத் துணைமலர்க்கே. (௮)

தனையுள் ளுணர்வா னுடுதலே
சகத்தின் றோற்ற மறக்கெடுக்கு
முனையொப் பார்க்கஃ தெளிதாகு
மரிதா மெனையொப் பார்க்குணர்வாய்ப்
பனையத் தனையா னும்பாசம்
பற்றி னுலு நின்னதரு
டினைமத் தனையி யிற்போதுந்
தேவா சிறியேற் கிரங்காயே. (௯)

அத்தி நரம்பி னாற்செய்யு
மியாக்கை யணுவு மகத்தாகும்
புத்தி மான்க டனதென்று
புந்தி செய்யார் சிறியேனே
பொத்தை யுடலை யன்றியுமே
புறச்சார் பாகு மெவற்றினையு
நித்த மென்ன தியானென்னு
நெறியி னின்றேன் குறியாயோ. (ய)

பிராண னசையி லசைந்திடுவர்
பிராண னொடுங்கி லஃதொழிவர்
பிராண னுடலி லுளபோழ்தே
பேசாப் பெருமை தனையடைய
விராவும் பந்தத் தளையவிழ்த்து
வினையைக் கெடுத்து மேல்வீடா
மிராவும் பகலு மறுமிடத்தே
யிலங்க வைத்தா லாகாதோ. (யக)

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—துசுரும.

## ஆசைப்பத்து.

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வேதன் மால்சு ரேந்திரன்
விண்ண வர்க ணண்ணரும்
பாத மன்றி யொன்றையும்
பற்றி லேனி தோர்வையாற்
பூதி சாத னங்களைப்
பூண்டைந் தக்க ரத்தினை
யோதி யுள்ள தெக்குக
வுணர்வை யீய வேண்டுமே. (க

மாடம் வீடு மாளிகை
மங்கை பொன்ற னமிவை
கோடி தேடி னுலுடன்
கூட வாரா தோர்கிலன்
பீடில் காய மெய்யெனும்
பேதை மையி லாழ்ந்துமேல்
வீடி மூந்தி டாதெனை
மின்ன வைத்தல் வேண்டுமே. (உ)

அத்த வென்ற கத்துளே
யன்பி னுனைக் தின்பமாய்
நித்த மோதி யாயுளை
நிறுத்து மாற றிகிலேன்
மைக்க ருங்கண் மங்கையர்
மையல் பட்டு வெய்யதாம்
பைக்குள் வீழ்ந்தி டாதெனைப்
பாது காத்தல் வேண்டுமே. (ங)

எட்டி ரண்டு மோர்கிலா
வேழை யாயி ருப்பினுக்
துட்ட னென்று கைவிடிற்
றாய னுவ னேசொலாய்
மட்டி லாத வின்னல்கள்
வந்த டுத்த வெல்லையிற்
கிட்டி நின்ன டிமலர்க்
கீழி ருத்தல் வேண்டுமே. (ச)

நாற்ற முள்ள வாக்கையை
நானெ னமதி த்தலாற்
போற்று ஞான மின்றிநாட்
போக்கி னேனென் னையனே
சேற்று மமெ மூர்ந்துகண்

சேர்பொ றிம யங்கிடக்
கூற்ற ழைக்கி னின்னடி
கூட்டி யாளல் வேண்டுமே. (ரு)

தொக்கின் மூவெண் டத்துவந்
துன்ன வன்ன தோடியான்
புக்கி வாழ்த றன்னினும்
போத மின்றி யேதமாங்
கக்கல் விக்கல் சர்த்தியுங்
காச மீளை பேதியு
மொக்க வந்து மாய்த்திடா
துவந்து காத்தல் வேண்டுமே. (சா)

தாளை யு[illegible] வெண்ணினுற்
சார்ந்த சொம்பன் மீக்கொளீ
காளை நாளை யென்றுள
நாட்க ளுங்க ழித்ததே
வேளை யெப்போழ் தென்றெமன்
மெய்க ழிக்க நோக்கிறான்
காளை யேறி யூருவோய்
கருணை வைத்தல் வேண்டுமே. (எ)

வேதன் வெம்ம றலியும்
[illegible] டோமென் றார்க்கிறார்
மாதா [illegible]ண்ணினான்
[illegible] பெய்கிறார்
பேதை யேனிவ் வாதையைப்
பீறி மாய்க்க வல்லனோ
நாத னேநின் றுமமுன்ன
ஞான மீயல் வேண்டுமே. (அ)

பேத மோத வெண்ணிலை
பின்ன முமவ் வண்ணமே

வாதம் பேசி யாயுளே
　　மண்ணின் மீதி ழந்தனன்
கோத கன்ற ஞானமுங்
　　கூம்பு கையு நின்றுணைப்
பாத முன்னு முள்ளமும்
　　பாலித் தாள வேண்டுமே. (கூ)

மூன்று கன்ம மோயவு
　　மொய்த்த பந்தந் தேயவுந்
தோன்று சென்மந் தீயவுந்
　　தூயர் பாத மேயவுஞ்
சான்ற தாகி யாயவுந்
　　தானே தன்னிற் றோயவும்
பூன்ற வின்பம் பாயவும்
　　போத மீய வேண்டுமே. (ய)

வேதம் வாழி யாகமம்
　　வியாதன் சாந்த லிங்கனிற்
போத மீப ரம்பரை
　　புகுந்த சொக்கன் வாழியே
மாத வத்த ரந்தணர்
　　வணிக ரிந்நூ லோருவோ
ரோது வோர்கேட் போருலகி
　　லூழி யூழி வாழியே. (யக)

முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—நுகூகூக.



முற்றிற்று.

## செய்யுளகராதி.

முற்றிற்று.

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| கக | எ | வுண்டொ | வுண்டோ |
| கசு | உக | திமையை | தீமையை |
| உள | உகூ | றுளதோ | றுள்ளதோ |
| சுக | உக | தம்விருளும் | தமவிருளும் |
| ருக | ங | யமிக்கும் | மியக்கும் |
| ருஉ | கஉ | மாற்றிககழல் | மாற்றிக்கழல் |
| ருரு | அ | மாயக்க | மாய்க்க |
| ருரு | உக | வேதனுத | வேதநாத |
| ருசு | கக | னுயவகை | னுய்வகை |
| ருஅ | உரு | வேதனுத | வேதநாத |
| சுஙு | க | போருளே | பொருளே |
| சுசு | க | மென் | புன் |
| சுஎ | ச | கூடுமே | கூடலே |
| எ0 | கங | சோலறகுமோ | சொலறகுமோ |
| எக | கங | சோக்கன் | சொக்கன் |
| எஉ | கக | மூழ்கனிறீ | மூழ்கனிறீஇ |
| எச | உ | ரிதழ்து | ரிகழ்ந்து |
| ,, | உச | படுமினே | படுப்பமோ |
| அஅ | அ | காமபோற் | காமம்போற் |
| அகூ | உரு | ஞனியை | ஞானியை |
| கூக | கூ | சொதிப்பர் | சோதிப்பர் |
| க00 | கங | சேஞ்சடை | செஞ்சடை |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| கOங | உஎ | திங்கரும்பினும் | தீங்கரும்பினும் |
| கககசு | கரு | மிட்டெனே | மிட்டென் |
| கஉக | ங | யுண்மையிலா | பொய்யாங் |
| ,, | உரு | மிகவருந்தி | வருந்தி |
| கஉஉ | ககூ | திறவாமலேயிரு | திறவா திரு |
| கஉங | கரு | தோகையரை | தோகம் |
| கஙஉ | கரு | முற்றிலுஞ் | முற்றிலுமே |
| கஙசு | உஉ | மிருந்தாலும் | மிருந்தாலும் |
| கசக | க | கள்விகள் | கல்விகள் |
| ,, | கஉ | தன்வயம் | தம்வயம் |
| கசஅ | கஅ | தாக்ககர | தாகக்கர |
| கருக | க | இழமை | இளமை |
| கருஉ | கக | பரனன்பர்கள் | பன்னன்பர்கள் |
| கசுக | கச | திர்துபினர் | தீர்துபினர் |
| கசுங | கO | லுள்ளளவும் | லுள்ள துவும் |
| கசுரு | ககூ | சயம | சமய |
| ,, | உஉ | புகுவதல்லாற் | புகுவதல்லான் |
| கசுஎ | உசு | விண்ணவர்கட் | விண்ணவனேயி |
| கசுஅ | கரு | கோத்தனுன் | கோததனுன் |
| ,, | உசு | விளங்குந்தானே | விளங்கிற்றன்றே |
| கஎO | கசு | சுததவெளி | சுத்தவெளி |
| கஎஉ | ரு | அருளால்ரொண்டும் | அருளாவிரண்டும் |
| கஎரு | கஅ | கண்மைதா | கண்மையதா |
| கஎஎ | கங | மிதுவிப்படி | மீதிப்படி |
| கஎகூ | உ | வேற்றவே | வேறறவே |
| கஅO | உகூ | திரமிலா | தீரமிலா |
| கஅஉ | கO | கானவிீர் | கானவினீர் |
| கஅங | உஅ | டெழிதின் | டெளிதின் |
| கஅச | உஅ | யஞ்ஞால | யிஞ்ஞால |
| கஅஎ | ஙO | மிலத்தனுல் | மிலததனுல் |

| பக்கம். | வரி. | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| கககூ | ௩ | ஒட்டினார் | ஒட்டினாற் |
| ,, | ௫ | பதறு | பசறு |
| உ0கூ | ௬ | செய்தற்கைமை | செய்புந்தகைமை |
| உக௬ | ௬ | நீத்துயாவையு | நீத்தியாவையு |
| ,, | க௬ | ஆகிப்பரம் | ஆதிபரம் |
| உகஎ | க௪ | இல்பிலடி | இம்பிலடி |
| உஉ0 | ௫ | வேற்றக்கண் | வேறறக்கண் |
| உஉஉ | உகூ | மென்மணம் | மென்மனம் |
| உ௩உ | கக | தின்ளமுதிருத்தி | தின்னமுமிருத்தி |
| உ௩௬ | கஉ | மாங்கரன் | மாங்காரன் |
| ,, | உஎ | புகிக்கினும் | புசிக்கினும் |
| உ௩எ | உஉ | மாண்றை | மாண்டை |
| உ௩கூ | ௫ | வலிதிறப்புலலி | வலிதிற்புல்லி |
| உ௪௫ | கஉ | கன்ளினு | கள்ளினு |
| ௫உ | உ0 | யென | யெனு |
| உ௫௩ | உ௪ | யேளிதம | யெளிதம |
| உ௫எ | ௫ | விரவுவணம் | விரவும்வணம் |
| உ௫கூ | கஎ | சுராவுணர் | சுரரவுணர் |
| உஎக | எ | துவிதற்கு | துவிதற்கே |
| ,, | அ | மெஞ்சலில் | எஞ்சலில் |
| ,, | கக | கதறலெலாம் | கதறலெனும் |
| உஎஉ | க௬ | அறவன் | அறிவன் |
| உஅ௪ | கக | நாதமவரை | நாதம்வரை |

முற்றிற்று.

## இலக்கணக்குறிப்பு.

உக-வது பக்கம் க-வது கவிஆதி வத்து வருள் வடிவாகி எ-து உயிர்வரினுக்குறள் மெய்விட்டோடும். என்னுஞ் சூத்திரவிதிக்கு மாறு கொள்க கூறலாமோ வெனின்; அற்றன்று வத்து வென்றது வடமொழி யாதலான் அவ்விதி பொருந்தா தென்க.

௩க-ம் பக்கம் ௬கூ-ம் கவி கையினூற்றம் எ-து, கய்யினூற்ற

மெனப்போலி வகையான்வந்தது. தொல்காப்பிய சூத்திரத்துட் கூறிய பொலிக்கு, நச்சினார்க்கினியார் போலி யெழுத்தைக்கொள் ளற்கவென வுரைகூறியும் நன்னூலார் முதலிய புலவரும் போலி யைத் தள்ளாது கொள்ளலிற் போலி யெதுகையினிமித்தஞ் சேர்த்துக்கொள்ளப்பட்டது. இதைப்பற்றிப் பிரயோக விவேக நூலார் விரித்துக் கூறியிருக்கின்றார். இவ்வாறே பின் வருமிடங்கடோறுங் காண்க.

௩௬-ம் பக்கம் ௧௦௪-ம் கவி என்றனுள்ளம் எ-து எதுகை நோக்கி எந்தனுள்ளமெனவந்தது.

௩௫-ம் பக்கம் ௧௬௬-ம் கவி தற்பொருள் எ-து தன்பொருளென விகாரத்தான் வந்தது.

௫௦-ம் பக்கம் ௨௦௪-ம் கவி சகத்துக்குள் எ-து அத்துச்சாரியைக் கெட்டுச் சக்ககுள்ளென வந்தது.

௫௧-ம் பக்கம் ௨௧௧-ம் கவி பிக்ஷா எ-து பிச்சை யென்றாயிற்று. நன்னூலார் ஐந்திருகவ்வும் எனக் கூறினார். அதற்கு உரைகாரர் இரண்டு ககரம் வருவதுந் தவிர ஒரு ககரம் வருவனவுமுள வெனக் கூறி க்ஷீரம் கீரம் எனவு,காரணமுங் காட்டினார். க்ஷத்திரியன், சத்திரியன். க்ஷமை, சமை. முதலியன வழக்கின் கண் வரல் பற்றி க்ஷகாரம் சகரமாக வருதலு முண்டெனக்கொள்க.

௬௫-ம் பக்கம் ௩௦௭-வது கவி மண்டை எ-து உடம்பிற்கானமையின ஆகு பெயர். எண்சாணுடம்பிற்கும் சிரம் பிரதானமானது பற்றிச் சிரமேல் வைத்து உடம்பை மண்டை யெனக் கூறினார்.

௭௦-ம் பக்கம் ௩௪௧-வது கவி துய்யமறை யறையும் என்ற செய்யுளை இயற் சீர் விரவிவந்தகலிப்பா வெனக் கூறல், “மாஞ்சீர் கலியுட்புகா, என்னுஞ் சூத்திர விதிக்கு மாறுகுமே எனின்; தொல்காப்பியத்தில் நச்சினார்க் கினியாரும் யாப்பருங் கலவிருத்தி [illegible]ரு நேரீற்றியற் சீர்விரவிக் கலிப்பாவருனவு முளவெனக் [illegible]ருத்தலான் மாறுகா.

௭௧-ம் பக்கம் ௩௫௬-வது கவி என்னை சோதித் தறிந்தனை

எ-து செய்யுளோசை யின்பம்பற்றி, என்னைச் சோதித் தறிந்தனை யெனவந்தது.

௯அ-ம் பக்கம் ௫௩அ-வது கவி முடியுமோ எ-து முடிமோ வென விகாரத்தான் வந்தது.

௧0எ-ம் பக்கம் ௪௬-வது கவி வல்லின வெதுகையான் வந்த செய்யுள்.

௧௧௬-ம் பக்கம் ௬-வது கவி காணுமோ எ-து காண்மோ வென விகாரத்தான் வந்தது.

௧௨௨-ம் பக்கம் ௫௫-வது கவி போதம்படா என்பதை போதம்பு அடாவென்றும், போதம்படா என்றும் சிலேடை யாக்கிப் பொருளுரைத்துக் கொள்க.

௧௨எ-ம் பக்கம் அஎ-வது கவி வாழ்நாள் எ-து வாணாளெனச் சிறப்புழகரம் ணகரமாக திரிந்தது. வீர சோழியம் சந்திப்படலம் ௧௬-ம் சூத்திரத்துட் காண்க.

௧௩௪-ம் பக்கம் ௧௨௫-வது கவி மின் எ-து மின்னற் கொடி போன்ற இடையாளுக் கானமையின் ஆகுபெயர்.

௧௩௬-பக்கம் ௧-ம் கவி கலித்துறை ஏகாரத்தின் முடிப்பதை நிறுத்தி ஓகாரத்தின் முடிக்கலாமோ வெனின், தொல்காப்பியர் யாப்பருங்கலக்காரர் முதலியோர் நேரசைக்கலித்துறைக்கு ௧௬-எழுத்தென்றும், நிரையசைக்கலித்துறைக்கு ௧எ-எழுத்தென்றும், அவற்றிற் கெழுத்தின தெண்ணினைக் கூறினாரே யன்றி, ஏகாரங்களின் முடிக்கவேண்டும் ஓகாரங்களின் முடிக்கவேண்டாவென முடிபு கூறினாரில்லை: அங்ஙனமே அவற்றினுரைகாரருங் கூறினாரில்லை. சான்றோர் செய்யுட்கண் ஓகாரங்களின் முடித்திருப்பதனாலும் முடிக்கலாமென்பது கருத்து.

௧௩அ-ம் பக்கம் ௧எ-ம் கவி மகிழுமோ எ-து மகிழ்மோ வென விகாரத்தான் வந்தது.

௧௪0-ம பக்கம் உ௫-ம்கவி இடாகலுமே எ-து இடாகன்மே என விகாரத்தான் வந்தது.

௧௪௩-ம் பக்கம் ௫0-ம் கவி புருடார்த்தம எ-து புருடத்தம் என எதுகை நோக்கி வந்தது.

க௭௫-ம் பக்கம் ௫௰-ம் கவி. செய்யுமே எ-து செய்மே என விகார மாயிற்று.

க௭௬-ம் பக்கம் ௫௨-ம் கவி. மெல்லின வெதுகையான் வந்த செய்யுள்.

ஷை-ஷை திடாநுபவம் எ-து திடாநுபம் என விகார மாயிற்று.

க௭௭-ம் பக்கம் ௫௯-ம் கவி. ஐயவுளத்தார் எ-து அய்யுளத்தார் எனமரீஇயது.

க௮௬-ம் பக்கம் ௮௨-ம் கவி. ஆகுமோ என்னுங் கிளவி ஆமோ என வந்தது. ஆகுதல் என்னும் பதத்திற்கு ஆ, பகுதி என்றும், ஆகு பகுதி என்று முதனிலை காட்டி யிருத்தலான், ஆமோ என்றும் ஆகுமோ என்றும் வரலாமெனக் கொள்க.

க௯௫-ம் பக்கம் க-ம் கவி. வேலார் கூர்விழியாய்-மிளிர், சுத்தப் பிரமத்திடை, என்னுஞ் செய்யுளை அடிதோறும் இடையிடையே ஓரசையைக் கூனாகப் பெற்று வந்த கலிவிருத்த மெனக் கூறலாமோ வெனின்; யாப்பருங்கலம், சூ-ம் அடி முதற் பொருள்பெற வருவது தனிச்சொலஃ, திறுதியும் வஞ்சி யுளியலு மென்ப இ-ள் நான்கு பாவி னடிமுதற் கட்செய்யுளகத்துப் பொருளைத் தழீஇத் தனியே நிற்பது தனிச் சொல்லெனப் படும்; வஞ்சிப் பாவி னிற்றின் கண்ணும் வரப்பெறு மென்பர் புலவர். எ-று எனவுரையும்; "இறுதியும் வஞ்சி யுளியலும், என்ற வும்மையான் இடையுணிற்கப்பெறும் எனவதன விசேடமும் விருத்தி யுரைகாரர் கூறினர். அங்ஙனங் கூறினரே யன்றி நான்கு பாவினத் துள்ளும் தனிச்சொல்வரப் பெறு மென்றும் வரப்பெறா வென்றுங் கூறிற் றிலர். பொன்னார் மேனியனே, புலித்-தோலை யரைக்கசைத்து, எ-ம் [illegible] னர்தடியே-னுமை, நீச்சலுங் கைதொழுவேன் எ-ம் சான்றோர் செய்யுட் கண்வருதலான் இங்ஙனம் வரலா மென்ப தவர் கருத்தே யன்றி வரப்பெறா வென்பதவர் கருத்தன்றெனக் கொள்க.

உ0௪-ம் பக்கம் ௬௬-ம் கவி. கூடுகிற தில்லே எ-து கூடு தில் லே எனமரீஇயது 'அன்னே நின்னே யல்லாலினி, யாரை நினைக் கேனே, என்னுந் தேவாரத்தினுள் நினைக்கிறேன் எ-து நினைக்கே ன் எனமரீஇயதைக் காண்க.

உகக-ம் பக்கம் ௬எ-ம் கவி. அறிவு எ-து அறிஎன விகார மாயிற்று.

உஉக-ம பக்கம் க-ம் கவி. மலேந்தனன் என்னும் வினைமுற் று வினையெச்ச மாயிற்று. மலேந்து என்பது பொருள்.

முற்றிற்று.

---

இஃது திருநெல்வேலி பழனியாண்டிமுதலியார் குமாரர்

## பிச்சைக்கண்ணுமுதலியா ரியற்றிய பதிகம்

இஃது ஒருவிகற்பத்தான் வந்த நேரிசை வெண்பா.

பொன்னும் புவியுமடப் பூவையரு மெய்யெனக்கொண்
டுன்னே நினையா துழன்றேனே—யென்னரசே
சின்னமனத் தேன்றீங்கைச் சேராம லிம்மையிலே
சின்மயசொ ரூபவருள் செய். (க)

நன்னெறிசே ரன்பரையுண் ணுடிடவு நாயடியேன்
புன்மைதவிர்ந் துன்னடியைப் போற்றிடவும்—வன்மையதா
மின்னல் விடுத்தி ருசா தனம்பெறவுஞ்
சின்மயசொ ரூபவருள் செய். (உ)

அன்னேயிலாச் சேய்போ லலேக்கழியேற் கஞ்சலெனச்
சொன்னவிலா தேயிருத்த றாலவோ—தன்னொளியை
மன்னுஞ் சிவஞான வாழ்வே மனமணுகாச்
சின்மயசொ ரூபவருள் செய். (ங)

மின்னிடையார் வெய்ய சிறுநீர்க் குழிவிழுந்து
துன்னுந் தனதான்யத் துள்ளழுந்தேன்—பொன்னனேய

வெண்ணுடையா யென்னை யெடுத்தாட்கொள் ளுவதென்றோ
சின்மயசொ ரூபவருள் செய். (ரு)

கன்மனத்தேன் வீணுள் கழியாம னின்னடியே
யுன்னியருட் பேற்றை யுகந்திலனே—னென்னினும்
வன்மைதரு சிந்தைகொடு வாழ்த்துகிறே னன்னிலக்கே
சின்மயசொ ரூபவருள் செய். (௬)

பொன்மயமா மேனிப் பொலிவுடைய புண்ணியனே
கன்மயமாஞ் சிந்தை கசிந்துருகப்—புன்மலம்போய்ச்
சன்மயமா யெங்குந் தடித்தருளைத் தெக்கிநிற்கச்
சின்மயசொ ரூபவருள் செய். (௬)

வின்னுதலார் கொங்கைகளை வேட்டுலக மையலினுற்
பின்முன்னு மான பிறப்பிறப்பை—யின்னேதான்
சின்னங்க ளாகத் திருவாய் திறந்தொன்றைச்
சின்மயசொ ரூபவருள் செய். (எ)

தன்னையுண ராதவமே காலந் தனைக்கழியா
தன்னையென வந்திங் கருளளித்தோய்—மின்னரங்கின்
மன்னி கடம்புரியு மாணிக்க மாமலையைச்
சின்மயசொ ரூபவருள் செய். (அ)

முன்னைவினை யாலலைந்த மூடனே னென்பதுனக்
கின்னந் தெரியா திருந்ததென்—றுன்னுலகர்
பன்னுதல்கேட் டென்னருளைப் பற்றினே னென்னரசே
சின்மயசொ ரூபவருள் செய். (௯)

முன்னவனே நீமொழிந்த மொய்மறையர் தப்பாவிற்
சொன்னவிலை யுன்னிச் சுகமடைத—லெந்நாளோ
தன்மயமா யென்னையிங்கே தந்தாள வந்தகுரு
சின்மயசொ ரூபவருள் செய்.

பதிக முற்றிற்று.

## ஷை. பிச்சைக்கண்ணுமுதலியார் சாற்றுகவி.

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்.

அருமறையின் முடிவென்கோ வாகமத்தின் நெறிவென்கோ வக ண்டா காரந, தருமிருதி யிதுவென்கோ தத்துவவுட் பொருளென் கோ தானே தானு, யிருந்தொளிர்சின் மயசொரூப னிகமயக்க மூ யிர்களைவிட் டிழியும் வண்ணங், கருணையினிற் கரைவேதாந் தப் பாவின் கருத்தறிந்த காட்சி யோரே. (உ)

வெண்பா.

வினையறுக்குந் தீங்கிறுக்கும் வீட்டுநெறி யுய்க்குந்
தனையுணர்த்துந் தன்மயமா யாக்கும்—பினையொருவ
ரின்மையெனப் பேசு மியல்வேதாந் தப்பாவிற்
சின்மயசொ ரூபனுரை சீர். (ங)

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

ஞானமணம் வாசிக்கு மியோகமண நாறு
நற்கிரியை மணங்கமழுஞ் சரிதைமண நடிக்கும்
பானன்மணி கண்டனரு ணீற்றின்மணம் படரும்
பனவன்முத லியவிழியின் பசியமணம் பரவு
மோனமணங் கந்திக்கு முத்திமண மூறு
முதறிவோ ரறைஞானத் தமிழ்மணமு முதிக்குந்
தேனமர்தண் டலைசூழ்கோட் டாறுறைசின் மயனார்
திருவாயான் மலர்வேதாந் தப்பாவின் றிருவே.

## நேரிசை யாசிரியப்பா.

பூமலி செருந்தி புன்னைபுன ளுகக்
காமலர் கதலி பலவுகமு கந்தி
யாம்பிற பொதும்ப ருளாற வாறுய்த்
தாம்பொதிக் தொழுகுந் தந்திமா நதிசூழ்
கோட்டா றதனிற் றோன்றிக் கோட்டமின்

## சாற்றுக்கவி.

மனனுங் குணனு மணுகும் வாக்கு
சன்மய மடைந்த சின்மய சொரூபன்
நுவல் வேதாந்தப் பாவின நூலைச்
செல்வம் பெருகுந் திருநெல் லையில்வாழ்
காரைக் காத்த குலத்திற் கதிபனுஞ்
சீரைத் தரித்த பரிவுடைத் திருமலைக்
கொழுந்துதன் மரபுநன் கோங்குபு கதிரா
யெழுந்த சுப்பிர மணிய னின்புற
உதித்த மாவடிச் சிதம்பர வொள்ளி யோன்
யெழும்பெரு வாழ்வா யெமக்கருந் டருவோ
னிம்பரிற் பரவு மிருங்கலை தெளிவித்
தம்பர முறுபொரு ளடைய வுணர்த்துவோன்
செவ்விதின் வழுஉக் களைந்தீந் தனனாக
எவ்வயி னோரு மினிதென வுவப்ப
விருநாற் பொருளு மியல்பினிற் கொழிக்குங்
குறும்பனை யூர்வாழ் குமாரவே லீன்ற
சுப்பிர மணியத் தோன்ற லகமகிழ்ந்
திப்புவி முற்று மெவிதின்வீ டடையக்
கற்சிலை யென்னப் பற்பல வாக்க
வச்சி னமைத்தி யாவரு
மெச்சும் புகழை மேற்கொண் டனனே.

இவை இடலாக்குடி சங்கரநாராயண உபாத்தியார்

மாணாக்கரும் மருகரும் ஆகிய

ச. சுப்பிரமணியசோதிஷரியற்றியவை.

வெண்பா.

பூவுறையு மாடவரின் பொய்யிருள்க ளூக்கூழ்றக்
காவுறையுங் கோடுதிக் கன்வர்தோன் — மாவுறையப்
போதமரும் வேதாந்தப் பொற்பா விளம்புசெழ்
சோதனுஞ் சின்மயத்தி னென்.

## சாற்றுக்கவி.

பதினறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சுருதியொரு நான்கினந் தத்தில்வளர் இன்றசிற்
சுகசிந்து நாம ரூபச்
சொருபகற் பனைமடிந் தெதிரற்ற வநுபவச்
சூக்கத்தை யாவ ருக்குந்
தொடுகரத் தாமலக மென்னவறி வித்திடத்
தொல்லுலகின் மனித வடிவாய்த்
தோன்றியின் பொடுஞான நெறிசென்று பூமியைத்
தோற்றராக்[illegible]ன னன்னீர்
கருதுகந் தர்ப்பநகர் கனவிப்பி வெள்ளியாய்க்
கண்டநுப வித்த நிபுணன்
கரையில்கட லலையெனவு தித்தொடுங் குடலினைக்
கணமுமென் னதியா னெனக்
காண்மக்க ளுக்குஞ்சங் கற்பமெவி கபடாய்க்
கருத்தினினி றுத்து வோர்க்குங்
காண்பவன் காக்ஷிகா க்ஷிப்பொருள்க ளற்றிலங்
கானந்த முத்தி யென்றே
பருதிதம சினையுண்டு வெளியினைவி ளக்கல்போற்
பரிசுத்தர் நாவா ரவே
பன்னுமறை யந்தநற் பாவினமெ னுந்தேறல்
பண்புடனு வந்த ளித்தான்
பனிமலர்கள் வாவிதொறு மலரவரு கோட்டாறு
பரவு *மாரியர் குலத்தைப்
பதிவாய்வி ளக்கவரு சின்மயசொ ரூபனெம்
பரமகுரு நாத னெங்கோ
னெருததனி லூருகொல் லேசனின் போடமரு
மிணையினெல் வேலி யுறையும்
இயன்முதன் முத்தமிழின் வல்லன்சி தம்பர
மெனுநாமன் சீர்செய் ததை
யெழிலார்கு றும்பனைக் குமாரவே லன்பிற
வீன்றசுப் பிரமணிய வே

*ஆரியர் எ-து, பட்டாரியர்.

சாற்றுக்கவி.

ளெழுதாவெ ழுத்தினினி யற்றிமா நகரெலா
மின்புறச் செய்தா னரோ.

---

இது திருவனந்தபுரம் சமஸ்தானத்தைச் சேர்ந்த
குளச்சையில் மேலத்தெரு
சிதம்பரதாணு இயற்றிய
எழுசீர்க்கழி நெடிலடி இரட்டையாசிரிய விருத்தம்.

திருவளர் வேத மாகம மிருதி
தேர்ந்தவ ருரைப்பவை கேட்டுஞ்
சிற்சில கற்றுந் தேகநா னுலகந்
திரமெனு மயக்கநீங் காமன்
மருவுமென் போல்வார்க் கிந்தநன் னிலத்தே
மலமொரு மூன்றுமற் றுணர்மேல்
வளர்ந்துமுன் கண்டா காரமா யனந்த
யனழுத லனைத்துமுள் ளொடுங்க
வருள்வடி வெய்திப் பரமசா யுச்சிய
மடைநிடக் கருணையாற் கோட்டா
றதிலவ தரித்த சின்மய சொரூப
னுறையும் வேதாந்த நற் பாவைப்
பெருகிய கீர்த்தி யமை சிதம்பரவேள்
பெட்புடன் பார்வை செய்த தற்பின்
பிறங்கிட வச்சாற் றின்ன குறும் பனைச்சுப்
பிரமணி யன்மன மகிழ்ந்தே.

ஷை மாவடிச் சிதம்பரம்பிள்ளை மாணுக்கருளொருவராகிய
திருநெல்வேலி ஆழ்வாரப்பபிள்ளை இயற்றிய
கலித்துறை.

திருவளர் சேரநன் னாட்டினைச் செங்கோன் முறைசெலுத்துங்
குருவளர் மூல வரையன்றன் னுளிற் குளிர்மலர்ப்பூ
மருவளர் சோலைகண் மன்னிய கோட்டா றிடைவதிவோ
ரருள்வளர்ந் தோங்க வகுத்தன னரியர் தங்குலத்தே (க)

சாற்றுக்கவி.

துயர் சாந்தலிங் கஞ்ஞேளிர்கான்
பெய்திய சொக்கனடி
பெற்றுளிர் காற்சின் மயனென
வேதாந்தப் பாவினத் துண்மை

உண்மைவி ளக்குமந் நூலினைச் செல்வமுயர் நெல்லையிற்
றண்மை யளிக்குங்கார் கீர்த்தி வத்திற் றகைமைபண்போ
டொண்மைழ பரிவுடைக் கோத்திரந் தன்னி லுதித்தழகாம்
வண்மை * மலைக்கொழுந்துப பிள்ளையன் மரபோங்குறவே.

ஓங்கவுதித்திடு சுப்பிரமண்ணிய னுள்ளன்பினு
லீங்கு தருகுஞ் சிதம்பர வேணவை யெல்லாப் பதலாம்
பாங்குட னீக்கி யளிக்கப் பலவளம் பல்கிப் புகழ்
தாங்குங் குறும்பனை யாகண்முன் செய்யுந் தவமெனவே.

தவத்தான் வருசுப் பிரமண் ணியனிச் சகமனைத்துஞ்
சிவதநி னருளான் மயலறி யர்மை செனனமெனும்
பவத்தைக் கடத்தும் புணையென வச்சிற் பலபதிர்தைந்
தவத்தை கடந்த சுகவேலை யெய்த வளித்தனனே. (6)

* மலைக்கொழுந்துப்பிள்ளையன் எ-து திருமலைக்கொழுந்துப்பிள்

## அறிவிப்பு.

இப்புஸ்தகம் தேவையுள்ளவர்கள் திருநெல்வேலி
ன் சென்றரல் அச்சாபிசிலும், திருவனந்தபுரத்தைச் சேர்
ந்தரத்தில் கோபுர. சூப்பிரின்டாண்டு வேலைபார்த்த சந்தி
லாலாவிடத்திலும், புற்றேரி சாமியாபிள்ளை இடத்திலும்,
னைக் குமாரவேல் சுப்பிரமணியனிடத்திலும், திருவனந்
சாலைத்தெரு புஸ்தகக்கடை கோலப்பபிள்ளை யிடத்திலும்
பங்கொடுத்துப் பெற்றுக்கொள்ளலாம்.

இதின் விலை ரூ 1—8—0
பிறதேசத்தாருக்கு தபால்கூலி ரூ 0—4—0

இனிப்பதிப்பிக்கப்படும் புஸ்தகம் சைசுவாமிகள்
ளிச் செய்த வாசகரூபமாகிய வேதாந்த ரஸாயனம்.

72430